# சங்க மாந்தர் வாழ்வியலில் உளவியல்

கோயம்புத்தூர் பாரதியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை
முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

அளிப்பவர்

**திருமதி. ப. சங்கீதா,** எம்.ஏ., பி.எட்., எம்.எஸ்சி.,
பதிவு எண் : 2012R034

நெறியாளர்

முனைவர் **கா. திருநாவுக்கரசு,**
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., எம்.எஸ்சி (உளவியல்).,

**தமிழ்த்துறை,**
**தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை**
**அறிவியல் தமிழ்க் கல்லூரி**
பேரூர் (அஞ்சல்), கோயம்புத்தூர் – 641 010.

**ஜூன் – 2017**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் கா.திருநாவுக்கரசு,**
எம்.ஏ., எம்.பில்., பி.எச்.டி., எம்.எஸ்.சி.,(உளவியல்)
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க் கல்லூரி,
பேரூர், கோவை – 641010.

கோயம்புத்தூர் பாரதியார் பல்கலைக்கழகத்திற்கு **"சங்க மாந்தர் வாழ்வியலில் உளவியல்"** என்ற தலைப்பில் தமிழில் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக திருமதி. **ப. சங்கீதா** எம்.ஏ., பி.எட்., எம்.எஸ்.சி., அவர்களால் அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி, தமிழ்த்துறையில் 2012 - 2017ஆம் ஆண்டுகளில் எனது மேற்பார்வையின் கீழும், வழிகாட்டுதலின்படியும் ஆய்வு (முழு நேரம்) செய்தபோது அவரது சொந்த முயற்சியினால் உருவானது என்றும் இவ்வாய்வேடு இதற்கு முன் எந்த ஒரு பட்டத்திற்கோ அல்லது பட்டயத்திற்கோ அல்லது பிற பயன்பாடுகளுக்கோ அளிக்கப்பெறவில்லை என்றும் யானறிந்தவரை இவ்வாய்வுத் தலைப்பு எந்தவொரு பல்கலைக்கழக ஆய்வாளரது ஆய்வுத் தலைப்பையும் ஒட்டியுள்ளதன்று என்றும் சான்றளிக்கிறேன்.

நெறியாளர் கையொப்பம்

இடம் : பேரூர்,

நாள் :

தமிழ்த்துறைத் தலைவர் கையொப்பம் முதல்வர் கையொப்பம்

# ஆய்வாளர் உறுதிமொழி

திருமதி. **ப. சங்கீதா** எம்.ஏ., பி.எட்., எம்.எஸ்.சி.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க் கல்லூரி,
பேரூர், கோவை – 641010.

கோயம்புத்தூர் பாரதியார் பல்கலைக்கழகத்திற்கு **"சங்க மாந்தர் வாழ்வியலில் உளவியல்"** என்ற தலைப்பில் தமிழில் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இந்த ஆய்வேடு, தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி, தமிழ்த்துறையில் 2012-2017 ஆம் ஆண்டுகளில் இணைப்பேராசிரியர் **முனைவர் கா.திருநாவுக்கரசு** அவர்களின் மேற்பார்வையில் என் சொந்த முயற்சியில் உருவான ஆய்வேடாகும். இதற்குமுன் எந்த ஒரு பல்கலைக்கழகப் பட்டத்திற்கோ அல்லது பட்டயத்திற்கோ அல்லது பிற பயன்பாடுகளுக்கோ அளிக்கப்பெறவில்லை என்றும் யானறிந்தவரை இவ்வாய்வுத் தலைப்பு எந்தவொரு பல்கலைக்கழக ஆய்வாளரது ஆய்வுத் தலைப்பையும் ஒட்டியுள்ளதன்று என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்

இடம் : பேரூர்,

நாள் :

# கட்டுரை வெளியீடுக்கான
# உண்மைத் தன்மைச் சான்றிதழ்

கோவை பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரியில் எனது மேற்பார்வையின் கீழ் ஆய்வு செய்யும் முனைவர் பட்ட ஆய்வாளர் **ப.சங்கீதா** என்பாருடைய **புறநானூற்றில் உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள்** என்னும் கட்டுரை ஈரோடு வாசவி கல்லூரி தமிழ்த்துறை (ISBN NO:978-93-81830-05-5) 2014ஆம் ஆண்டு வெளியிட்ட ஆய்வுக்கோவையில் பக்க எண் **125 - 127**இல் வெளியானது என இதன்வழிச் சான்றளிக்கலாகிறது. கட்டுரையானது ஆய்வுப் பொருண்மையோடு ஒருமித்து அமைந்துள்ளது எனச்சான்றளிக்கிறேன்.

உறுதிக் கைஒப்பம் நெறியாளர் கைஒப்பம்

முதல்வர்

# நன்றியுரை

என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே என்பதற்கிணங்க, தெய்வத் தமிழை உயர்தனிச் செம்மொழியாக நாளும் வளர்த்துவரும் திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழிப் பேரூராதீனம் கயிலைக் குருமணி சீர்வளர்சீர் பேரூரடிகளாரின் திருவடிகளை உளமார வணங்குகின்றேன்.

உலகஅளவில் தமிழிற்குச் சிறந்த பணிகள் பலவற்றைச் செய்தும், செய்ய உறுதுணையாகவும் இருந்து, தமிழ்நெறியில் பல்லாயிரக்கணக்கான தமிழ்ப் புலவர்களை உருவாக்கித் தமிழ்ப்பணியோடு சமய வாழ்வியல் பணிகளையும் ஆற்றி, சிறந்த கல்லூரியாக இயக்கி வருகின்ற கல்லூரி முதல்வர் தவத்திரு மருதாசல அடிகள் அவர்களுக்கும் என் நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன்.

ஆய்வுக்காலத்தில் ஆய்வுப்பணியை விரைந்து முடிக்க ஊக்கமளித்த தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் வெ. இராசேசுவரி அவர்களுக்கும் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

பணிக்கேற்ற பண்புகளை வளர்த்து, ஒவ்வொருவரிடத்தும் ஆளுமைப்பண்பை விளங்கச் செய்து வருபவரும், இன்முகமும் கருணையும் காட்டி நெறிப்படுத்துபவராய் அமைந்து, முதலில் எமக்குத் தந்தையாய், பின் எமக்கு என்றும் ஆசானாய், ஆய்வு நெறியாளராய் அமைந்த பேராசிரியர் முனைவர் கா.திருநாவுக்கரசு அவர்களுக்கு ஆய்வாளரின் மறவாத மனமார்ந்த நன்றிகள் என்றும் உரியவை. மேலும் செந்தமிழ்

கற்பித்த அனைத்து ஆசிரியர், பேராசிரியர்களுக்கும் உள்ளங்கனிந்த நன்றிகள்.

இவ்வாய்வு மேன்மேலும் சிறக்க நிதி உதவி நல்கிய பல்கலைக்கழக மானியக்குழுவிற்கும் ஆய்வாளரின் நன்றிகள்.

இவ்வாய்விற்குத் தேவையான நூல்களை அளித்து உதவிய கல்லூரி நூலகர் திருமதி. சாமி. அபிராமி அவர்களுக்கு ஆய்வாளரின் நன்றி என்றும் உரியது.

ஈன்று புறந்தந்து சான்றோனாக்கி, நிறைவான நல்நிலை எய்த உற்றதுணையாகவும் வழிகாட்டியாகவும் அமைந்த என் பெற்றோருக்குத் தாள் பணிந்து உளம் நிறைந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்வு வெளிவரும் காலத்தில் ஆய்வாளருக்கு உற்றதுணையாக இருந்த இல்வாழ்க்கைத்துணை திரு. சா.விஸ்வநாதன் அவர்களுக்கும், அன்புத் தங்கை செல்வி. ப.இராஜலட்சுமி அவர்கட்கும் ஆய்வாளரின் இனிய நன்றிகள் என்றும் உரியது.

ஆய்வேட்டினை எழிலுடன் அச்சமைத்துக் கொடுத்து, ஆய்வேடு உருவாக்கும் காலத்து உறுதுணையாக இருந்த அன்பு அண்ணன் திரு. இரா. வேணுகோபாலகிருட்டிணன் அவர்களுக்கும், அச்சமைத்துக் கொடுத்த திரு.இராம்கி அவர்களுக்கும், வடிவமைத்துக் கொடுத்த திரு. ந. இராசேந்திரன் அவர்களுக்கும், பொலிவுற ஆக்கிக் கொடுத்த வசந்தி அச்சகத்தாருக்கும் ஆய்வாளரின் மனமார்ந்த நன்றிகள்.

மேலும் இவ்வாய்விற்கு மனம், மொழி, மெய்யால் உறுதுணை செய்த அனைத்து நல்உள்ளங்களுக்கும் நன்றிகள் பல.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| க.உ. | - | கல்வி உளவியல் |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந். | - | குறுந்தொகை |
| கூத்தர் | - | கூத்தராற்றுப்படை |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| ப. | - | பக்கம் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| பா.அ. | - | பாடல் அடி |
| பா.எ. | - | பாடல் எண் |
| மரபு. | - | மரபியல் |
| மேலது | - | மேற்கூறப்பட்ட நூல் |
| மேலவர் | - | மேற்கூறப்பட்ட ஆசிரியர் |
| வ.அ.ப. | - | வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும் |

# பொருளடக்கம்

# இயல் – 1

# முன்னுரை

சங்க இலக்கியம் மாந்தர் வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டது. நாடகப்பாங்கு பெற்றிருப்பது. சங்க இலக்கியத்தின் அகப்புறப்பாகுபாடுகள் உளவியல் அடிப்படை கொண்டவை. அக இலக்கியத்தில் வரும் திணைகள், மெய்ப்பாடுகள், கூற்றுகள் முதலியன மனித உள இயல்பை ஒட்டியவை. உளவியலுடன் ஒப்பிடத்தக்கவை. சங்ககால மாந்தரின் மன இயல்பினைச் சங்க இலக்கியங்கள் தெளிவாக எடுத்துக்காட்டும் சிறப்புடையன. சங்கப்பாடல்கள் அமைப்பாலும் நடையாலும் உரையாடல் தன்மையாலும் கருத்தமைதியாலும் நிகழ்ச்சிப்பின்னலாலும் உளவியலை உள்வாங்கி நிற்கின்றன.

தொல்காப்பியர் கூறும் அகத்திணை மரபும் அம்மரபின் வழிப்பட்ட சங்கச்சான்றோர் செய்யுட்களும் ஆழ்ந்த உளவியல் அடிப்படை கொண்டவை. இவற்றில் சமுதாய இயல்பினும் உளவியல் இயல்பு முதன்மை பெறுகிறது. மேலும் தொல்காப்பியர் நாடகவழக்கு, உலகியல் வழக்கு என்பதனைக் கூறுகிறார். நாடக வழக்கு புனைவுத் தன்மை உடையது என்றும் உலகியல் வழக்கு இயல்பானது என்றும் கூறுவர். அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் முதலான இயல்களில் இடம் பெறுகின்ற நாடக வழக்கு முற்றிலும் உளவியல் அடிப்படையில் இயங்குவதாகும். நற்றாய், செவிலி, தோழி, தலைவி, தலைவன், கண்டோர், பாங்கன், பார்ப்பார், பாணர், கூத்தர், விறலியர், அறிவர், இற்கிழத்தி, காமக்கிழத்தி, பரத்தையர் முதலிய பாத்திரங்களின் கூற்று நிகழுமிடங்களும், சூழல்களும் உளவியல் இயல்பினை உள்ளடக்கிப் படைக்கப்பட்டவை ஆகும்.

சங்கப்பாடல்கள் ஏதேனும் ஒருமனநிலையையும் அம்மனநிலை விளைவுக்குரிய சூழலையும் பாடுபொருளாகக் கொண்டவை. எனவே உளவியல் கொள்கைகளையும், உளவியற் பகுப்பாய்வுகளையும் பயன்படுத்திச் சங்க இலக்கிய மாந்தர் வாழ்வியலில் பொதிந்துள்ள உளவியல் நெறிகளை அறியமுடியும்.

மனித உள்ளத்தைப்பற்றிய ஆய்வில் இலக்கியமும் உளவியலும் வெவ்வேறு அணுகுமுறைகளைப் பின்பற்றுகின்றன. எனினும் அவற்றின் கருவாக அமைந்திருப்பது மனித உள்ளம் ஆகும். உளவியலார் மனித உள்ளத்தையும் நடத்தையையும் பகுத்தாய்ந்து விளக்கிக் கூறுகின்றனர். இலக்கியப் படைப்பாளி மனிதனை மனிதனுக்கு உணர்த்த வேண்டும் என்ற நோக்குடன் வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் மனிதனுடைய நடத்தை பெறும் மாறுபாடுகளையும் மாற்றங்களையும் சுட்டுகிறார்கள்.

தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் முறைமை சார்ந்ததோர் உளவியல் நெறியைப் பின்பற்றியுள்ளமை அவற்றைக் கற்கும்போது புலனாகின்றது. அவ்வகையில் சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள சங்கமாந்தர்களின் வாழ்வியலை விரிவாக ஆராயும்போது அக்கால உளவியல் நெறியை அறியமுடியும் என்ற நோக்கில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பெறுகிறது.

## ஆய்வு நோக்கம்

பிற அறிவுத்துறைகளின் அடிப்படையில் இலக்கியத்தை அணுகிக்கற்றல் அறிவுலகத் தேவையாகவும் இலக்கியக் கல்வியின் பொருண்மையை ஆழப்படுத்துவதாகவும் உள்ளது. அவ்வாறு அணுகிக் கற்கும் ஆர்வத்தின்

அடிப்படையில் உளவியல் துறையின் கொள்கைகள், கோட்பாடுகளையும், சங்க இலக்கியத்தையும் இணைத்து விளக்கம் காண்பதும் அதன்வழி பெறப்படும் மெய்மைகளை மக்கள் உளநலம் மேம்படப் பயன்பாட்டு நிலையில் வழங்குவதும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. உளவியல் என்ற அறிவியல் துறை அண்மையில் முறைப்படுத்தப்பெற்ற துறை. உளவியல் கூறுகள், உளவியல் கோட்பாடுகள் மற்றும் உளநலக்கூறுகளைச் சங்க இலக்கியத்துடன் அணுகி ஆராய்தல் இவ்வாய்வின் எல்லையாகும்.

## ஆய்வு அணுகுமுறை

“சங்கமாந்தர் வாழ்வியலில் உளவியல்”எனும் இவ்வாய்வு உளவியல் கோட்பாடுகளை அடித்தளமாகக் கொண்டு மேற்கொள்ளப் பெறுவதால் உளவியல் அணுகுமுறை முதன்மைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. ஆய்வின் முழுமைக்குச் சங்க இலக்கிய மாந்தர்கள் பற்றிய செய்திகளை இனங்காணப் பகுப்பாய்வும், செய்திகளின் அடிப்படையை அறிய விளக்கமுறை ஆய்வும் மேற்கொள்ளப்படுகின்றன.

## ஆய்வுத்தரவுகள்

முதன்மை ஆய்வுத்தரவுகள், துணைமை ஆய்வுத்தரவுகள் என்ற இருவகைகள் இவ்வாய்வில் இடம் பெறுகின்றன.முதன்மை ஆய்வுத்தரவுகளாகச் சங்க இலக்கிய நூல்கள் அமைகின்றன. துணைமை

ஆய்வுத்தரவுகளாகச் சங்க இலக்கியம், உளவியல் தொடர்பான ஆய்வு நூல்கள், ஆய்வுக்கட்டுரைகள், அகராதிகள், இதழ்கள் ஆகியவை அமைகின்றன.

## ஆய்வேட்டின் இயல் அமைப்பு

"சங்கமாந்தர் வாழ்வியலில் உளவியல்" எனும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரையுடன் இணைந்து ஏழு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

### இயல் 1 – முன்னுரை

முன்னுரையில் ஆய்வுநோக்கம், ஆய்வுஎல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வுத்தரவுகள், ஆய்வேட்டின் இயல் அமைப்பு ஆகியன இடம்பெறுகின்றன.

### இயல் 2 – சங்க இலக்கியச் செலுத்து நெறிகளில் உளவியல் கோட்பாடுகள்

சங்க இலக்கியச் செலுத்து நெறியாக அமைவது அகம், புறம் என்ற பகுப்பாகும். அகம் என்பது சங்ககால ஆண், பெண் இனச்சமூகத்தில் உள்ளத்தைக் குறிக்கும் குறியீடாகக் கூறப்பெற்றுள்ளது. மெய்யியலில் உள்ளம் என்ற சொல் ஆன்மா எனவும் ஆன்மாவைப்பற்றிய மெய்யியல் பிற்காலத்தில் உள்ளத்தை ஆராயும் உளஅறிவியலாகவும் வளர்ச்சி பெற்றுள்ளது. சங்க இலக்கியப் பாடுபொருள் மரபும் காலவளர்ச்சியில் சிந்தனை மாற்றங்களைக் கொண்டுள்ளது. மனிதனின் புறச்செயல்கள் அவனின் அகத்தில் நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன. அவ்வகையில் சங்க இலக்கியச் செலுத்துநெறிகள் பலவும் உளவியலின் பல்வேறு கூறுகளுடன் பொருந்திக் காணப்படுவதனைத் தொகுத்துக்கூறும் வகையாக இவ்வியல் அமைகிறது.

## இயல் 3 – சங்ககாலக் குழந்தைகளும் குழந்தை உளவியலும்

குழந்தை இலக்கிய மரபும் உயிரியல் மரபும், குழந்தைப் பிறப்பு, படிநிலையும் வளர்ச்சிநிலையும், குழந்தை வளர்ச்சியில் மரபு மற்றும் சூழ்நிலையின் பங்கு, குழந்தைகளிடம் காணப்படும் திறன்கள், அவற்றை அளவிடும் முறைகள், குழந்தை தனது சூழலுடன் பொருத்தப்பாட்டினை அடையும் வகைகள், குழந்தை வளர்ப்பில் தாய், செவிலி மற்றும் மற்றையோரின் பங்கு, சங்கமாந்தர்கள் பிரித்துள்ள பருவ வரையறைகளும் உளவியலார் வகுத்துள்ள பருவ வரையறைகளும் மற்றும் சங்க இலக்கியங்களில் கூறப்பெறும் குழந்தைப்பருவங்கள், நிகழ்வுகள், ஊடாடல்கள் ஆகியவற்றில் பல்வேறு உளவியல் பண்புகளும் பியாஜே, புரூணர் கோட்பாடுகளும் விளக்கம் பெறுவதனை எடுத்துக்கூறும் வகையாக இவ்வியல் அமைகிறது.

## இயல் 4 – சங்கமாந்தரின் நுண்ணறிவும் ஆக்கத்திறனும்

சங்கமாந்தர்கள் நுண்ணறிவுடனும் ஆக்கத்திறனுடனும் விளங்கியமைக்கு அவர்கள் வாழ்ந்த வாழ்வியல் இலக்கியப் பதிவுகள் சான்றமைகின்றன. நுண்ணறிவும் ஆக்கத்திறனும் பருவத்திற்கேற்ப மாறும் தன்மையது. பருவத்திற்கு மேம்பட்ட நுண்ணறிவு காணப்படின், அவர்களை மீத்திறனுடையவர் அல்லது மேதைகள் என்றும் இயல்பான பருவ நுண்ணறிவிலிருந்து குறைந்து காணப்படின் மூடர் என்றும் உளவியலறிஞர் நுண்ணறிவுத் தன்மையை வகைப்படுத்தியுள்ளனர். நுண்ணறிவும் ஆக்கத்திறனும் இலக்கியங்களில் அறிவு, அறிவாண்மை என்றவாறு ஆளப்பட்டுள்ளன. சங்ககால இனக்குழுச் சமுதாயத்தினர் பெற்றிருந்த அதீத நுண்ணறிவும் ஆக்கத்திறனும் சங்ககால மாந்தர்

வாழ்வியலின் ஒவ்வொரு நிலையிலும் வெளிப்பட்டுள்ளது. சங்கமாந்தரின் அறிவாண்மைச் செலுத்துநெறிகள் உளவியலின் நுண்ணறிவு, ஆக்கத்திறன் கூறுகள் மற்றும் பல்வேறு கோட்பாடுகளுடன் எடுத்தாளப்பட்டுள்ளதை இவ்வியல் ஆராய்ந்து எடுத்துக்காட்டுகிறது.

## இயல் 5 – சங்கமாந்தரின் ஆளுமையும் ஆளுமைக்கோட்பாடுகளும்

ஓர் உயிரியல் உயிரிக்கும் அதன் சமூக மற்றும் பிற உலகுக்கும் இடையே நடக்கும் ஊடாட்டத்தின் விளைவாக உருவாகிய தனித்தன்மை ஆளுமை எனப்படுகிறது. ஆளுமை உடலியல், உளவியல் காரணிகளின் அடிப்படையில் வெளிப்படுகின்றது. அன்பு, அறிவு, அடக்கம், பொறுமை, இல்லறம், நிர்வாகம், விருந்தோம்பல், போர், தூது முதலான பல்வேறு அகப்புறச்சூழல்களிலும் சங்ககால ஆண், பெண் இனச்சமூகத்தில் சிறந்த ஆளுமைத்தன்மை வெளிப்படுத்தப்பட்டுள்ளன. சங்கமாந்தர் ஆளுமைத்தன்மையுடன் ஆளுமைக் கோட்பாடுகள் பலவும் பொருந்திக் காணப்படுகிறது. மேலும் ஆளுமையைத் தீர்மானிக்கும் காரணிகள், ஆளுமை வகைப்பாடுகள், அளவிடும் முறைகள், ஒருங்கிணைந்த ஆளுமையைப்பெறும் வழிவகைகள், ஆளுமையை மேம்படுத்தும் உளவியல் காரணிகள் முதலானவை இவ்வியலில் விளக்கம் பெறுகின்றன.

## இயல் 6 – சங்கமாந்தரின் உளநோய் அறிதலும் தற்காத்தலும்

ஒருசெயலைச் செய்யவிடாமல் தடுத்தல் அல்லது செய்யாத நிலையில் ஏற்படும் மனநிலையில் பல்வேறு உளநோய்க் கூறுகள் வெளிப்படுகின்றன. மனம் சரியான முடிவெடுக்கும் நிலையில் இல்லாதபோது

மனமகிழ்ச்சியற்ற நிலையும் துன்பமும் ஏற்படுகிறது. உள்ளத்தின் இந்த நிலை தனிப்பட்ட ஒருவரின் செயலைத் தடுத்து நிறுத்துவதோடல்லாமல் அவர் சார்ந்துள்ள குடும்பத்திலும் சமுதாயத்திலும் பொருத்தப்பாடற்ற நிலையை ஏற்படுத்துகிறது. உளமுறிவு, உளப்போராட்டம் முதலிய பல்வேறு உளநோய்க்கூறுகள் அனைத்தும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன. மனித வாழ்வியலில் இவை தவிர்க்க இயலாததாகித் தொன்றுதொட்டு இருந்துவருகின்றன. சங்க அகப்பாடல்களில் தனிமனிதன் உளநலம் காக்க ஆற்றுப்படுத்தியமையும் புறப்பாடல்களில் ஆட்சிமுறை, போர், மக்களின் வாழ்வியல், பொருளாதாரம் எனப்பலநிலைகளிலும் ஆற்றுப்படுத்தல் இடம்பெற்றுள்ளது. பல்வேறு இடர்ப்பாடான சூழல்களை உணர்ந்து சங்கமாந்தர்கள் மிகச்சிறந்த ஆற்றுப்படுத்தல் நெறியைப் பின்பற்றித் தற்காத்துக் கொண்டமை சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இது இன்றைய சூழலில் பெரும்பிரிவாகப் பல்வேறு துறைகளிலும் அனைத்து நிலைகளிலும் வளர்ச்சி பெற்று வருகின்றன. இதனை ஆராய்ந்து இன்றைய சூழலுக்குப் பொருந்துமாற்றினை எடுத்துரைப்பது இவ்வியலாகும்.

## இயல் 7 – முடிவுரை

ஆய்வில் அறியப்பட்ட மெய்மைகளைத் தொகுத்துக் கூறுவதாக முடிவுரை அமைகிறது.

எதிர்கால ஆய்வுக்கான களங்களும் சுட்டப்படுகிறது.

இவ்வாய்வின் முழுமைக்கு வழிசெய்த சான்றுகளின் தொகுப்பு அகரவரிசையில் துணைநூற்பட்டியலாக இணைக்கப்படுகிறது.

**பின்னிணைப்பு**

இவ்வாய்வு உளவியல் நோக்கில் அமைக்கப்படுவதால் பலநுட்பச் சொற்கள் எடுத்தாளப்படுகின்றன. இந்நுட்பச் சொற்களை அறிதற்கு ஆய்வின் இறுதியில் பின்னிணைப்பாகச் சொல்லடைவு இணைக்கப்படுகிறது.

## இயல் – 2

# சங்க இலக்கியச் செலுத்து நெறிகளில் உளவியல் கோட்பாடுகள்

எண்ணத்தின் பிறப்பிடம் உள்ளம். அதிலிருந்து சிந்தனை, நினைவு, கருத்து, உணர்ச்சி ஆகியவை வெளிப்படுகின்றன. இவற்றின் வெளிப்பாட்டால் செயற்பாடுகள் நிகழ்கின்றன. மனிதனின் சொல்லும் செயலும் வேறுபடுவதற்குக் காரணம், உள்ளத்தில் எழும் எண்ண அலைகளின் வேறுபாடு ஆகும். வேறுபாடுடைய சிந்தனைப்போக்கு பின்னிப் பிணைந்தும் பிரிந்து பிணங்கியும் செயற்படுவதில் சமுதாயச் சிந்தனை உருவாகிறது. அதன் தொடர்ச்சியாக உலகியல் உணர்வு தோன்றுகிறது. தனிமனித வாழ்வு, உலகியல் உணர்வு இரண்டும் வாழ்வியல் கூறாக மதிப்பிடப்படுகின்றன. வாழ்வியலின் பதிவாக இலக்கியம் தோற்றம் பெறுகிறது. இலக்கியத்தின் உயிரோட்டமாக உள்ளத்தில் எழும் எண்ணங்கள் அமைகின்றன. ஆதலின், உள்ளத்து உணர்வுகளை விளக்கும் அறிவியல் உளவியலாக அமைகிறது. உள்ளத்து உணர்வுகளைச் செம்மைப்படுத்துவதிலும் உணர்வுநிலை வெளிப்பாட்டுத் தன்மையிலும் தமிழ் இலக்கியம் முதன்மை பெறுகிறது. அத்தகைய தமிழ் இலக்கியங்களில் தலைமைத்தன்மை வாய்ந்த சங்க இலக்கியம் மனித வாழ்க்கையின் பல்வேறு நிலைகளைச் செலுத்தும் நெறிகளைத் தன்னகத்தே அடக்கியுள்ளன. அவ்வகையில் சங்க இலக்கியச் செலுத்து நெறிகளில் உளவியல் கூறுகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

## இலக்கியம் :

எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அது தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் பயன்படல் வேண்டும். இல்லையாயின் அது இவ்வுலகத்தில் நிலைபெறாது. அவ்வகையில் இலக்கியம் மனிதனின் அகப்புற வாழ்க்கையை வெளிப்படுத்துவதாக அமைகிறது. இலக்கியம் அக்கால மக்களின் வாழ்வியல் விழுமியங்களை எடுத்துரைக்கிறது. அதுமட்டுமல்லாமல் மனித வாழ்வை மேன்மை அடையச்செய்யும் மதிப்புமிக்க கருவியாகவும் விளங்குகிறது. இதனை அறிஞர்,

> "உள்ளத்தைத் திறப்பதற்கும் அதைத் திருத்துவதற்கும் செம்மைப்படுத்துவதற்கும் புரிந்து கொண்டு படிப்பதற்கும் தவறுகளைப் போக்கும் வண்மை உண்டாக்குவதற்கும் நல்லவற்றை மேற்கொள்வதற்கும் பிறருக்கு எடுத்துரைப்பதற்கும் நல்வழிப்படுத்துவதற்கும் இலக்கியம் பயன்படல் வேண்டும். இந்நிலையில்தான் அஃது இலக்கியம் எனப்படும்"

என்று விளக்கம் தருகிறார். (பிரேம்குமார், செவ்விலக்கிய ஆய்வுகள், ப.எ. 21).

இலக்கியம் என்பது அக்கால வரலாற்றை உணர்த்துவதாக மட்டுமல்லாமல், உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது. அதுமட்டுமல்லாமல், உள்ளத்தை மேன்மைப்படுத்துவதாகவும் உள்ளது. ஆகவே, இலக்கியம் என்பது மக்களுடைய விழுமியக் கருத்துக்களைச் செவ்விய சொற்களில் விளக்குவதாக அமைகிறது.

இலக்கியத்தை ‘இலங்கு இயம்’ எனும் சொல்லாலும் பொருளாலும் பொருள்கொள்ள வேண்டும்.

## இலக்கியத்திற்கு வழங்கப்பட்ட பெயர்கள் :

தமிழ் அறிஞர்கள் கவிதைகளை இலக்கியமாகக் கொண்டிருந்தனர். தமிழ் இலக்கியத்தில் ஒரு சொல் பலபொருள் பெறுவதும், பல சொல் ஒருபொருள் பெறுவதும் உண்டு. கவிதை, செய்யுள் என வழங்கப்பட்டது. பா, பாட்டு, தூக்கு, யாப்பு என்பன தொல்காப்பியர் செய்யுளுக்கு வழங்கிய பெயர்கள் ஆகும். (தொல். பொருள். செய்யுளியல். நூ.எ.-1). மேலும் அக்காலத்தில் செய்யுட்களை நூல், பனுவல் என்றும் வழங்கினர்.

இலக்கியம் என்பதனை,

**“இலக்கியம் என்ப இயலழகு நீதி**
**இலக்காக இன்பந் தரின்”**

(கோதண்டபாணிப்பிள்ளை.கு. ஈரடி இருநூறு நூ.எ. 511)

என்று விளக்குவர் அறிஞர்.

அறம், பொருள், இன்பம் என்னும் முத்திறப்பாகுபாடு மானுடன் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கைக்குரிய செலுத்துநெறி ஆகும். நூல்களில் கூறப்படும் உறுதிப்பொருள்களாகிய பொருள், இன்பம், அறம், வீடு என்பவற்றை இலக்காகக் கொண்டு எதையும் மெய்ப்பாடு எனும் சுவைபடக் கூறுவது இலக்கியம்.

**“அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே”**

(பவணந்தி முனிவர், நன்னூல், நூ.எ. 5).

என்பர். ஆகவே, இலக்கியம் என்பது அறத்தின் வழி பொருளும், பொருளினால் இன்பமும், இன்பத்தின் இறுதியாக வீடுபேறும் பெற வழிகாட்டுவதாய் அமைகிறது.

## இலக்கியம் – அறிவியல் விளக்கம் :

அறிவியல் என்பது துல்லியத்தன்மை கொண்டது. அதன் அடிப்படையில் இலக்கியத்தினை மூன்று வகையாகப் பகுக்கிறது.

**அ. பிறப்புநிலை விளக்கம் :** (Generic Interpretation)

இலக்கியம் யாரால் படைக்கப்பட்டது என்பதை அடிப்படையாகக் கொண்டு தரப்படும் விளக்கம்.

**ஆ. அழகியல் விளக்கம் :** (Aesthetic Interpretation)

கற்பனை நயமும், எடுத்துரைக்கும் முறையில் அமையும் கலையழகும் முதன்மை பெறுவதைச் சுட்டுதல்.

**இ. சொற்பொருளியல் விளக்கம் :** (Sematic Interpretation)

மறைமுகக் குறிப்பும் வெளிப்படைக் குறிப்பும் இருத்தல்.

(பகவதி.கு. திறனாய்வு அணுகுமுறைகள்- ப.எ. 10)

இதனைச் சங்க இலக்கிய நோக்கில் நோக்கும்போது பின்வருமாறு விளக்கம் பெறுகிறது.

அ. சங்க இலக்கியங்கள் வாய்மொழி இலக்கியங்களாக வழங்கப்பட்டு வந்தன. இதனைப் புலவர்கள் ஏடுகளில் பதித்தனர். பின்னர் பொருளுக்கேற்ப அகம், புறம் என்று பகுக்கப்பட்டன.

ஆ. தேர்ந்த கற்பனை நயமும், தெளிவான எடுத்துரைப்பும், வருணனையும் சங்க இலக்கியத்தில் முதன்மை பெறுகின்றன.

இ. சங்க இலக்கியம் இருவகைப் பாகுபாடுகளைக் கொண்டது. அகம் என்பது உள்முகமானது. புறம் என்பது வெளிப்படையானது.

**சங்கம் :**

கூடல், புணர், மதுரைத்தொகை, புலவர்கூட்டு எனும் தமிழ்ச்சொற்கள் அவை, கூட்டம், தொகுதி, புலவர்குழு எனும் பொருள்களை உணர்த்துகின்றன. தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்தில் கூறப்பட்டுள்ள 'அவையம்' என்ற சொல் நிலந்தரு திருவிற் பாண்டியனுடைய அவைக்களத்து இருந்த புலவர் கூட்டத்தை உணர்த்துகிறது. மேலும் கூட்டம், சேர்க்கை, கூட்டிக்கொடுத்தல், சங்கமம் என்பன சங்கம் என்பதற்கு அகராதி கூறும் விளக்கமாகும். (Tamil Lexicon Vol. III & P. 1222).

மதுரை மாநகரில் புலவர்குழு ஒன்று இருந்தது என்பதனைப் பாட்டு, தொகை நூல்களில் பதிவாகியுள்ள குறிப்புகளின்வழி அறிய முடிகிறது. சங்கம் இருந்தமைக்கான செய்திகளை,

**"மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்**
**கண்ஆர் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்**
**தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை"**

(சிறு. பா.அ.- 64 - 67)

எனவும்,

**“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**

**மாங்குடி மருதன் தலைவனாக**

**உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்**

**புலவர் பாடாது வரைகவென் நிலவரை”**

(புறம். பா.எ. 72, பா.அ. 13 - 16).

எனவும்

**“தமிழ் கெழு கூடல் தண்கோல் வேந்தே”**

(புறம். பா.எ. 58).

எனவும்,

**“தொல்லாணை நல்லா சிரியர்**

**புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்**

**நிலந்தரு திருவின் நெடியோன்”**

(மதுரை. 761 - 763)

இச்சான்றுகள் அறிவுறுத்துகின்றன. இப்பாடலடிகளில் ‘சங்கம்’ எனும் சொல் வெளிப்படையாக வராமல் ‘மதுரையில் தமிழ் நிலைபெற்று விளங்கியது’ என்றும், ‘தலைவன்’ என்றும், புலவர் பலர் குழுவாக இருந்து தமிழாய்ந்தனர் என்றும் கூறப்படுதலினால், மதுரையில் பாண்டிய மன்னரின் ஆதரவில் தமிழ்ப்புலவர் குழு ஒன்று இருந்ததெனக் கொள்ள முடிகிறது.

இறையனார் எனும் புலவர் அகப்பொருள் பற்றிய செய்திகளைத் தொகுத்து, “இறையனார் களவியல்” எனும் நூல் படைத்தார். இதற்கு

நக்கீரர் உரை வகுத்ததனால், இறையனார் களவியலுரை எனப்பட்டது. இதில் முச்சங்கங்கள் பற்றிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன.

இடைக்காலப் பிற்கால இலக்கியங்களும், கல்லெழுத்தும் மதுரைச் சங்கத்தைச் சிறப்புறக் குறிப்பிட்டுள்ளன.

**"புலம்புரி சங்கம் பொருளோடு முழங்க"**

(மணிமேகலை. 7 : 14)

எனவும்,

**"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி**

**நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்"**

(தேவாரம் - நாவுக்கரசர் 678 :3)

எனவும்,

**"கூடலின் ஆய்ந்த ஒண்தீந் தமிழ்"**

(திருக்கோவையார் ----)

என வரும் பாடலடிகள் மதுரையில் வழிவழியாகத் தமிழ்ச் சங்கம் வளர்ந்து வந்தமையைப் புலப்படுத்துகின்றன.

**"முழுது ணர்ந்தருள் மலய நன்முனி**

**மொழியும் முத்தமிழும்**

**பழுதறும்படி புலவர் ஏறிய**

**பலகை ஒன்று உடையான்"**

(வில்லிபாரதம் - 16-ஆம் போர்க்காண்டம் - 41)

என வில்லிப்புத்தூரார் மதுரைச் சங்கத்துத் திகழ்ந்த பலகையைச் சுட்டுகிறார். கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சின்னமனூர்க் கல்லெழுத்தும் மதுரைச் சங்கம் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. பாண்டியன் தமிழோடு வடமொழியும் ஆய்ந்தான் என்றும் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

வள்ளுவனார்,

**"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்"**

(குறள், 394)

என்பதிலிருந்து, வள்ளுவர் காலத்திற்கு முன்னரும், அவர் காலத்தும் சங்கம் இருந்த நிலை பெறப்படுகிறது.

**சங்க கால மக்கள் வாழ்வு :**

மூவேந்தரும் மூவேந்தரைச் சார்ந்த வேளிரும் ஒரு மரபினராகவும், வணிகம், உழவு முதலியன செய்தோர் பிறிதொரு மரபினராகவும் இருந்தனர். இது தொழில் பற்றிய பிரிவு ஆகும். இதனைத் தொல்காப்பியர்,

**"வேந்துவினை இயற்கை வேந்தன் ஒரீஇய**
**ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைத்தே"**

(தொல். பொருள். அகத்திணையியல். நூ.எ.-34)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது. இப்பிரிவுகள் மருத நிலத்தில் அத்திணைக்குரிய வேளாண்பெருங்குழுவினின்றும் எழுந்தனவாகும். ஏனைய நான்கு திணை நில மக்களும் தத்தமக்குரிய தொழிலைச்

செய்து வந்தனர். பிற தொழில்களை மேற்கொண்டோரும் இவர்களுள் அடங்குவர். தொல்காப்பிய மரபியலுள் கூறப்பட்ட நாற்குல முறை ஆரியரது வருண முறையைத் தழுவிப் பிற்காலத்தில் எழுந்ததாகும் என்ற செய்தி, தொல்காப்பிய உரையாசிரியர் முனைவர் தமிழண்ணல் தனது மரபியல் உரையில், "இடைக்காலத்தே வருணாசிரமம் செல்வாக்குப் பெற்ற காலத்தே இவை நுழைக்கப்பட்டிருக்க வேண்டும்" என்று குறிப்பிட்டுள்ளார். (தொல். பொருள். மரபு. ப.எ.- 169).

அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கினையும் எய்துதற்குரிய நெறிநிற்றல் அறவாழ்க்கை எனப்பட்டது. கருத்து ஒற்றுமை உடைய தலைவனும் தலைவியும் கூடி வாழ்ந்து இவ்வுலக இன்பம் துய்த்தபின் இருவரும் தூய உள்ளத்தொடு தவநெறி நிற்றலும் கூறப்பட்டது. இல்லறம், துறவறம் என்பன அறநூலால் கூறப்பட்டன. இதனால் இளமையில் கல்வியும், தனித்துறவும் விலக்கப்படவில்லை. இல்லறத்திற்கு உரிய தகுதியை அடைவதற்குரிய கல்வியும், ஒழுக்கமும் இருபாலருக்கும் கூறப்பட்டது. பரத்தையிற் பிரிவும் அக்காலத்துக் கூறப்பட்டது. கள், ஊன் புசித்தல், சிறுபான்மையும், இருமணப் பெண்டிரும் கள்ளும் கவறும் புலாலும் அறநூலாரால் கண்டிக்கப்பட்டன.

இதனை,

**"தன்னூன் பெருக்கத்துத் தான்பிறிது ஊனுண்பான்**
**எங்கனம் ஆளும் அருள்"** (குறள். 251)

**"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்"** (குறள். 260)

என்ற குறட்பாக்கள் உணர்த்துகின்றன.

பிற உயிர்களைக் கொன்று ஊனைத் தின்று ஊனைப் பெருக்காதிருப்பானை எல்லா உயிர்களும் கைகூப்பி வணங்கும் என்கிறார் வள்ளுவர்.

ஆடவர்க்கும் கற்புக் கூறப்பட்டது. கல்வி நலஞ்சான்ற பெண்டிர் பலர் அரசருக்கும் உண்மை அறிவுறுத்தும் உறுதி உடையவராய்த் திகழ்ந்தனர். அரசர்களுக்குள் அறப்போர் நிகழ்ந்தது. போர் நெறியை நெட்டிமையார் என்னும் புலவர்,

**“ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க்கு அறுங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர்ப் பெறா தீரும்**
**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்”**

(புறம். பா.எ. - 9)

என்ற வரிகளால் தெளிவாக்குகிறார். ‘திரைகடல் ஓடியும் திரவியம் தேடு’ என்பது அக்காலத்திய வழக்காகும். இதனை,

**“நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்”**

(பட்டினப்பாலை பா.அ. 185-189)

என வரும் பாடலடிகள் சங்ககால வணிகமுறை பற்றி விளக்குகின்றன.

மகளிரை உடன்கொண்டு செல்லுதல் அக்காலத்தில் வழக்கில் இல்லை என்பதனைத் தொல்காப்பியம்,

**“முந்நீர் வழக்கம் மகடூஉவொடு இல்லை”**

(தொல். பொருள். அகத். நூ.எ. 37)

என்றவாறு குறிப்பிட்டுள்ளது. தமிழ்மக்கள் பிறநாட்டு மக்களையும் அன்புடன் வரவேற்கும் பெருந்தகையினராக இருந்தனர். இசை, கூத்து முதலிய பல கலைகளில் ஈடுபாடு கொண்டவர்கள். இசையை அகநானூறு,

“....... ...... ...... ....... ...... ...... ...... ...... **கொடிச்சி**
**பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்**
**குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது**
**படாஅப் பைங்கண் பாடுபெற்று ஒய்யென**
**மறம்புகழ் மழகளிறு உறங்கும் நாடன்”** (அகம். பா.எ. 102)

என்ற அடிகளில் எடுத்தியம்புகிறது. உடல், உள மருத்துவம் இவர்களிடம் தழைத்தோங்கியது. நிமித்தம் பார்த்தலும், நம்பிக்கைகளும் சடங்குகளும் இருந்தன. நிமித்தம் பார்த்தல் பற்றி அகநானூறு,

**“எம்மினும் விரைந்து வல்எய்திப் பல்மாண்**
**ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇ**
**பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்**
**கன்றுபுகு மாலை நின்றோள்”** (அகம். பா.எ. 9)

என்ற வரிகளால் குறிப்பிடுகிறது. எழுத்துக்களின் வரிவடிவு தொல்காப்பியக் காலத்தில் பழமையாய்ப் பாராட்டப்பட்டது. ஒலிநூல், கூவநூல் (கிணறு

பற்றியது) மடைநூல் (உணவு பற்றியது) முதலிய நுண்ணூல்கள் பலவும் தமிழர் அறிந்திருந்தனர்.

**சங்க இலக்கியம் :**

சங்க காலத்தில் மக்களின் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், கல்வி, கொடை, அறம், மறம் முதலிய பல்வேறு வாழ்வியல் நிலைகளைத் தன்னகத்துக் கொண்டு உள்ளதால், சங்க இலக்கியம் எனப் போற்றப்பெறுகிறது. இது தமிழ் மக்களுக்குரிய வாழ்வியல் செலுத்து நெறியை விளங்கி நிற்பதால் வாழும் இலக்கியம் எனவும் போற்றப் பெறுகிறது. இவ்விலக்கியங்கள் ஏடுகளில் பாட்டும் தொகையுமாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

**பாட்டும் தொகையும் :**

பாட்டு பத்து, தொகை எட்டு என்னும் வரையறை பண்டைய உரையாசிரியர்களின் காலத்திற்கு முன்பு ஏற்பட்டிருக்கிறது. இதனை,

**“ஆசிரியப் பாட்டின் அளவிற்கு எல்லை**
**ஆயிரம் ஆகும் இழிபுமூன் றடியே”**

(தொல். பொருள். செய்யுளியல். நூ.எ. 150)

என்று தொல்காப்பியம் விளக்குகிறது. இதன் உரையில் இளம்பூரணர், ‘பெரிய பாட்டு பத்துப்பாட்டினுள்ளும், சிலப்பதிகாரத்துள்ளும் கண்டு கொள்க’ என்பதிலிருந்து, பத்துப்பாட்டு எனும் சொல்லாட்சி பெறப்படுகிறது.

நச்சினார்க்கினியரும் இச்சூத்திர உரையில், "கூத்தராற்றுப்படை தலையளவிற்கு எல்லை. மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலையும் ஒழிந்த பாட்டு ஏழும், பரிபாடலும் கலியும் ஒழிந்த தொகை ஆறும் இடையளவிற்கு எல்லை" என்று சுட்டியுள்ளார். இதிலிருந்து தொகை என்ற சொல்லாட்சியை அறிய முடிகிறது. பத்துப்பாட்டு முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரை வகுத்துள்ளார். உரையைப்பற்றிய சிறப்புப் பாயிரத்தில்,

**"சான்றோர் உரைத்த தண்தமிழ்த் தெரியல்**
**ஒருபது பாட்டும் உணர்வார்க்கு எல்லாம்**
**உரையற முழுதும் புரைபட உரைத்தும்"**

என்று கூறப்பெற்றுள்ளது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் அமைப்பு முறை உரையாசிரியர்களின் காலத்திற்கு முன்பாக ஏற்பட்டு விட்டமை தெளிவாகிறது.

## பத்துப்பாட்டு:

திருமுருகாற்றுப்படை முதல், மலைபடுகடாம் ஈறாக உள்ள பாடல்கள் பத்தும் பத்துப்பாட்டு எனப்படுகின்றன. இவற்றின் அடைவு முறையினைச் சுவடிகளில் தனிப்பாடல்,

**"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய**
**கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து"**

என்றவாறு சுட்டியுள்ளது. பத்துப்பாட்டு எனும் சொல்லாட்சியினை

இளம்பூரணரும் மயிலைநாதரும் (பவணந்தி முனிவர், நன்னூல் நூ.எ. 387) தத்தம் உரைகளில் குறித்துள்ளனர். பேராசிரியர் தமது தொல்காப்பிய உரையில் பாட்டு என்று வழங்கியுள்ளார். (தொல். பேராசிரியம், செய்யுளியல் நூற்பா உரை 50, 80) இளம்பூரணரும் பிற உரையாசிரியர்களும் பத்துப்பாட்டுப் பாடல்களை மேற்கோள் காட்டும்பொழுது அவற்றின் தனிப்பெயரால் குறித்துள்ளார்கள்.

பிற்காலத்தில் எழுந்த பன்னிருபாட்டியலில் 'பத்துப்பாட்டு' எனும் நூலின் இயல்பு குறித்து,

**"நூறு அடிச்சிறுமை நூற்றுப்பத்து அளவே**
**ஏறிய அடியின் ஈர் - ஐம்பாட்டுத்**
**தொகுப்பது பத்துப்பாட்டு எனப்படுமே"**

(பன்னிருபாட்டியல், நூ.எ. 384)

**"அதுவே அகவலின் வரும்(-) என அறைகுவர் புலவர்"**

(மேலது, நூ.எ. 385)

என்றவாறு கூறப்பட்டுள்ளது. இது பத்துப்பாட்டு என்னும் வழக்குப் பெருகிய காலத்தில் இயற்றப்பெற்றவை. இவ்விலக்கணம் பத்துப்பாட்டுத் தொகுதியை நோக்கி வகுக்கப்பெற்றதாகும்.

பத்துப்பாட்டுள் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் (கூத்தராற்றுப்படை) எனும் ஐந்தும் ஆற்றுப்படை நூல்களாம். முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை எனும் மூன்று

அகத்திணையொழுக்கம் பற்றியன. குறிஞ்சிப்பாட்டைப் ‘பெருங்குறிஞ்சி’ எனவும் ‘உளவியல் பாட்டு’ எனவும் வழங்குவர். முல்லைப்பாட்டு நெஞ் சாற்றுப்படை என அழைக்கப்படுகிறது. நெடுநல்வாடை அகப்பொருட்செய்தி பொதிந்ததாயினும், பாண்டியனது அடையாளப்பூவை ‘வேம்பு தலையாத்த நோன்தாள் எஃகமொடு’ (நக்கீரர், நெடுநல்வாடை பா.அ. 176) என்றவாறு குறிப்பிட்டமையால், இதனைப் புறத்திணைப்பாற்படுத்துவர்.

மதுரைக்காஞ்சி வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமைகளைச் சான்றோர் எடுத்துக்கூறும் பகுதியாகிய காஞ்சித்திணை எனும் புறப்பொருள் பகுதியைச் சார்ந்தது.

## எட்டுத்தொகை :

நற்றிணை முதலாக, புறநானூறு ஈறாக உள்ள தொகை நூல்கள் எட்டும் எட்டுத்தொகை நூல்களாம். இதனைத் தனிப்பாடல்,

**“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல் - கற்றறிந்தார்**
**ஏத்தும் கலியொடு அகம்புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை”**

என்றவாறு வரிசைப்படுத்துகிறது. எட்டுத்தொகையுள் புறம் பற்றியவை புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியன. அகப்புறம் பற்றியது பரிபாடல். ஏனையவை அகம் பற்றியனவாகும்.

## சங்க இலக்கியப் பாடுபொருள் மரபு :

சங்க இலக்கியப் பாடல்களாகத் தொகுக்கப்பெற்று உள்ள பாடல்களின் அடிப்படையிலும், அதனோடு இலக்கண வகையில் பெரும்பாலும்

தொடர்புள்ள தொல்காப்பியத்தின் அடிப்படையிலும் நோக்கும்போது அகம், புறம் என இருவகையாய்ப் பாகுபாடு செய்துள்ளனர். மக்களின் அக, புற வாழ்க்கை நிலையினை விளக்கி நிற்பதால், சங்ககால இலக்கியங்களில் அகமும், புறமும் பாடுபொருளாக அமைந்தன. அகப்பொருள் என்பது இலக்கியத்தின் பாடற்பொருளின் பாதிக்கும் மேலாக இருக்கின்றது. 2381 சங்கப்பாடல்களில் ஏறக்குறைய 1850 அகப்பாடல்கள் ஆகும். அதாவது, 80% பாடல்கள் அகப்பொருள் பற்றியன. ஏனைய பாடல்கள் புறம் பற்றியனவாகும். எனவே, சங்க இலக்கிய மரபு அகம், புறம் என்ற இருவகைப் பாடற்பொருண்மையினை உடையதாக இருக்கின்றது. அகமும், புறமும் 80 : 20 எனும் அளவில் அமைந்திருக்கின்றன. அகம் - உள்ளம். ஆகவே, சங்க இலக்கியத்தில் உள்ளத்தைப் பற்றிக்கூறும் பாடல்கள் மிகுதியாக அமைந்துள்ளன.

## அகமும் புறமும் :

பிறருக்கு எடுத்துக்கூறாமல், தான் மட்டும் உள்ளத்தில் உணரக்கூடியதை அகம் என்றும், பிறர் உள்ளத்திற்கு உணர்த்தக்கூடியதைப் புறம் என்றும் கூறுவர்.

அகம் என்பதற்கு இளம்பூரணர், "அகப்பொருளாவது போக நுகர்ச்சியாகலான், அதனாலாய பயன் தானே அறிதலின் அகம் என்றும், புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறருக்குப் புலனாதலின் புறம்" என்றும் (தொல். பொருள். இளம்பூரணம் ப - 3) விளக்கம் தருகிறார்.

மேலும் நச்சினார்க்கினியர், "அகம், புறம் என்பதனை ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம்

அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலானக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்து உணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாதலின் அதனை, ‘அகம்’ என்றார். இதனை ஒழிந்த ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்கும் துய்த்து உணரப்படுதலானும் இவை இவ்வாறு இருந்தது எனப் பிறருக்குக் கூறப்படுதலானும் அவை புறமெனவே படும்” (தொல். பொருள். நச்சினார்க்கினியம். ப - 3) என்றவாறு விளக்குகின்றார்.

இவ்விளக்கங்களிலிருந்து அகம் என்பது தனக்கு மட்டும் புலனாகக்கூடியது என்றும், புறம் என்பது தனக்கும், பிறருக்கும் புலப்படுத்தக்கூடியது என்றும் விளங்க முடிகிறது.

**அகம் – உள்ளம் :**

அகம் என்பது உள் எனவும் ஆன்மா எனவும் பொருள்படும். (கழகத்தமிழ் அகராதி ப. 3) உள்ளத்து எழுந்த அவா, உடல்வழிப்படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பது. ஆதலின், உள்ளம் என்பதனோடு தொடர்புபட ‘அகம்’ என்றனர். அன்பிற்கும், இன்பிற்கும் அடிப்படை உடலன்று, உள்ளம் என்பதாகும். உள்ளத்தை அகம் என்ற குறியீட்டால் குறித்துள்ளனர்.

(சரளா ராசகோபாலன், டாக்டர். - சங்க இலக்கியம் (அகம்) ப. 13)

உள்ளம் ஊற்றின்பிற்கு உயிர்த்தளமாயினும் அதனை மெய்வழி உணர்தல் இயற்கை. ஆனால், அது உடலின்பம் மட்டும் அல்லாது உயிரின்பம். அன்பின் மொழியும், செயலும் உள்ளத்தின்வழி இயங்குவன. உள்ளத்தால் நினைந்த நினைவும், அன்புப் புணர்ச்சிக்குச் சமம் என்பார்

இறையனார் களவியல் உரையாசிரியர். (இறையனார் களவியல் உரை ப - 35) 'உள்ளத்தால் உள்ளலும் தீதே' (குறள் - 282) என்பதால், மனநிலையைச் செயலுக்கு நிகராகப் போற்றுவார் திருவள்ளுவர். இவற்றிலிருந்து அன்பு தோன்ற உள்ளம் காரணம் என்பதனை உணரமுடிகிறது. இதனால், தமிழ்ச்சான்றோர் அன்பு (காதல்) பற்றிய இயலை அகம் - உள்ளம் என்று போற்றினர்.

உள்ளம் தொடர்புகொள்ளும் பொருள் இன்பமாகவும் விருப்பமாகவும் நல்லதாகவும் தோன்றுகிறது. அகநாட்டத்தைத் தடைப்படுத்தி நிற்பவை துன்பமாகவும் வெறுப்பாகவும் கெட்டதாகவும் படுகின்றன. அனைத்து உணர்வுகளும் செயல்களும் அக ஈடுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன.

> 'மனித சமுதாயத்தின் அமைப்பிற்கும் அக உணர்வுகளுக்கும் உயிர்நாடியாக விளங்கும் உணர்வில் உள்ளம் ஈடுபட்டு நிற்றலின் காதலாகிய இவ்வுள்ள நாட்டத்தை அகம் எனக் குறியீடு செய்தனர்.'

[சரளா ராசகோபாலன், டாக்டர். சங்க இலக்கியம் (அகம்) ப-13. 14]

அகம் என்பதன் இயல்பான பொருள் வீடு என்பதாகும். வீடு அல்லது குடும்பம் ஆகும் காதல் அகத்திணை நுதலுவது. அகத்திணை மாந்தரெல்லாம் ஒரு வீட்டுறுப்பினர்கள் ஆவர். ஆதலின், அகம் எனும் சொல் வீடு என்பதை முதலாவதாகக் குறித்து நிற்கிறது.

சங்ககாலப் புலவர்கள் அக இலக்கியத்தின் கூறுகள் எல்லாம் தோன்றத்தக்கதொரு சொல்லை ஆராய்ந்தனர். மக்களின் உள்ளப்புணர்ச்சி அவ்விலக்கியத்தின் உயிர்க்கூறு ஆகும். உள்ளம் எனும் சொல்லும்

அகம் என்ற சொல்லுக்கு இயல்பாக இருத்தலின் அகத்திணை என்று இலக்கியக்குறியீடு வைத்தனர். (மாணிக்கம். வ.சுப. - தமிழ்க்காதல், ப. 255).

அகம் எனும் சொல் உள், மார்பு, மனம், அகக்கூத்து, தானம், ஆன்மா, உடல், உயிர் எனும் பொருள்களைத் தருகிறது. (கழகத்தமிழ் அகராதி, ப- 4). அதுபோல, உள்ளம் எனும் சொல்லும் மனம், ஆன்மா, கருத்து, விளக்கம், அகச்சான்று, ஆன்ம ரூபதானம் எனும் பொருள் தருகிறது. (கழகத்தமிழ் அகராதி, ப. 184). ஆகவே, அகம் எனும் சொல்லும், உள்ளம் எனும் சொல்லும் இணைந்த பொருள்களைத் தருவது இங்கு பெறப்படுகிறது.

அகம் என்பது உள்ளத்தின் உயிரோட்டமாக இருத்தலின், உள்ளச் செயல்பாடுகளின்வழி வாழ்வியல் அமைகிறது. இத்தகைய உள்ளத்தைப்பற்றிய கருத்துக்களே பிற்காலத்தில் உளவியலாக மாற்றம் பெற்றிருக்கிறது.

**மரபு மாற்றம் :**

மானுட வினை நிகழ்ச்சியாயினும் பொருண்மையின் இருப்பாயினும் காலம், இடம் என்ற இருவகைப் பரிமாணங்களை உடையதாக நிகழ்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்து, குறிப்பிட்ட இடத்து நிகழ்ந்த வினை நிகழ்ச்சி, கால இயக்கத்தின்போது மாறாது, தொடர்ந்து செல்லுதலும் உண்டு. சிறுசிறு வேறுபாடுகளுடன் தொடர்தலும் உண்டு. குறிப்பிட்ட காலமும் இடமும் அல்லது இரண்டில் ஏதேனும் ஒன்றானும் வேறுபடாமைக்குத் தொடர்தலும் உண்டு. பெரும்பான்மையும் மாறாது தொடர்தலை மரபு என்பர். இதனைத் தொல்காப்பியர்,

**“மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை”**

(தொல். பொருள். மரபு நூ.எ. 636)

என்றவாறு குறிப்பிட்டுள்ளார். இலக்கியத்திற்கு மரபுநிலை திரிதல் இல்லை. சிறுசிறு வேறுபாடுகளுடன் தொடர்நிலை மரூஉ என்பர். இக்கருத்து,

**“மரபுநிலை திரியின் வேறுவேறு ஆகும்”**

(தொல். பொருள். மரபு. நூ.எ. 637)

என்ற நூற்பாவால் பெறப்படுகிறது.

அடிப்படை வேறுபாடுகளால் வேறுபடத் தொடர்தலை மரபுமாற்றம் என்பர். இங்குக் குறிக்கப்படுகின்ற வினைநிகழ்ச்சி தொடர்தலானது, பருப்பொருளாயினும், கருத்துப்பொருளாயினும் தன் தனிதன்மை மாறாது உணரப்படும்போது வினைநிகழ்ச்சி தன்னியல்போடு தொடரப்படவில்லை என அறிய முடிகிறுது. வரலாறாவது இத்தகைய வினை நிகழ்ச்சிகளில் கால நிரலான தொடர்ச்சியாகலின் அவை தொடரப்படாதவிடத்து வரலாறு மாற்றம் பெறுகிறது. இம்மாற்றம் மரபு மாற்றம் எனவும் பெயர் பெறுகிறது. இத்தகைய மரபு மாற்றங்கள் வளர்ச்சியின் திசையினையும் பரிமாணத்தையும் உலகிற்கு உணர்த்துகின்றன.

மேற்குறித்த மரபு மாற்றங்கள் தோன்றல், கெடுதல், திரிதல் என்னும் நிலைகளில் அமையும். வளர்ந்து நிற்கும் மரபாய வினைநிகழ்ச்சித் தொடர்பில் முன்பு இல்லாத ஒன்று தோன்றினும், முன்பு நிகழாநின்ற ஒன்று கெடினும் தோற்றமும் கேடும் இணைந்து, முன் எய்திநின்ற தொடர் ஏதேனும் ஒரு வகையில் மாற்றம் அடையினும் மரபு மாறுகிறது. இங்குக்

கூறிய மூவகை நிலைகளும் தனித்தும் இரண்டு, மூன்று என ஒருங்கு கூடியும் அமையும். இதனை,




என்றவாறு எடுத்துக்காட்டுகிறார் அ.அ. மணவாளன் அவர்கள். மாற்றம் என்பது மட்டுமே இன்றுவரை மாறாததாய் இருக்கின்றது.

**அகமரபு மாற்றம் :**




(மணவாளன், அ.அ. - இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம் ப. 83, 84)

மரபு மாறுதலைப்போல, இலக்கியத்திலும் அகமரபு மாற்றம் பெற்றிருக்கிறது. இவ்வாறு மாற்றம் பெற்ற ஒரு மரபு அம்மாற்றங்களுக்கான நிலைகளை நீக்கிவிட முயன்று நீக்கிக் கொண்டாலும், மீண்டும் பழைய நிலையாக முன்னைய நிலையை அடைய இயலாது. அவ்வகையில் சங்ககாலம் இயற்கையோடு இணைந்து மக்கள் வாழ்ந்த காலமாகவும் இன்றைய காலம் செயற்கையோடு இணைந்து மனிதன் வாழும் காலமாகவும் இருக்கின்றது.

**கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம் :**

கால வளர்ச்சியில் அறிவு வளர்கிறது. அதன் பயனாகச் சிந்தனை மாறுகிறது. அறிவு வளர்ச்சியில் இலக்கியத்தில் அகமும் மெய்யியலில்

மனமும் உள்ளத்தைக் குறிக்கும் சொற்கள் ஆயின. உள் என்பது உள்ளிடம், மறைந்திருப்பது. உள்ளத்தின் உள்ளிடத்தில் மறைந்து இருப்பது ஆன்மா. ஆகவே, தொடக்க காலத்தில் உள்ளத்தைப் பற்றி ஆராயும் உளவியல் ஆன்மாவினை ஆராயும் இயலாக இருந்திருக்கிறது. பிற்காலத்தில் மனித உள்ளத்தில் தோன்றும் நடத்தையை ஆராயும் உளவியலாக மாற்றம் பெற்றிருக்கிறது.

இருபதாம் நூற்றாண்டில் உளவியல் என்ற தனிப்பிரிவு தோற்றம் பெற்றிருக்கிறது. உளவியல் பற்றிய சிந்தனை தமிழரிடத்துத் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளது. தொல்காப்பியப் பொருளாதாரத்தில் மெய்ப்பாட்டியல், அகத்திணையியல், கூற்றுநிலை, களவியல் அமைத்துள்ளதிலிருந்து உளவியல் பற்றிய சிந்தனை தமிழரிடத்துப் பழங்காலம் முதல் இருந்திருப்பதனை அறிய முடிகிறது.

## தமிழர் மெய்யியலும் உளவியல் கோட்பாடுகளும் :

தமிழர் மெய்யியல் என்பது தமிழகத்தில் அறிஞர்களாலும் தானிகளாலும் உருவாக்கப்பட்ட மெய்ப்பொருளியலைக் குறிப்பதாகும். தமிழ்ப்பண்பாட்டின் படைப்புகளில் மெய்யியல் சிறப்பிடம் பெறுகின்றது. ‘மக்களின் நடைமுறை வாழ்வியல், அனுபவங்கள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், மரபுவழி வந்த தகவுகள், அறிவியல் அழகியல், மனவியல், அறிவுத்திறம், சிந்தனைத்திறம், புலன் கடந்த காட்சிகள் ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்டு இந்தியத் தத்துவம் தோன்றியுள்ளது.

- (கந்தசாமி, சோ.ந. டாக்டர். - இந்தியத் தத்துவக்களஞ்சியம், தொகுதி - 1, ப. 1)

முன்னோர்களின் மனத்தைப் பற்றிய மெய்யியல் சிந்தனைகள் இன்று உளவியல் கொள்கைகளாகவும், கோட்பாடுகளாகவும் தோற்றம் பெற்றுள்ளன.

## மெய்யியலும் உளவியலும் :

மனிதன் அறிவும் ஆற்றலும் இன்பமும் பெற்று வாழ்வதற்கு மனிதனின் நல்மனநிலை காரணமாக அமைகிறது. எனவேதான் மெய்யியலார், 'மனிதன் படிப்படியாக அகநிலை வளர்ச்சி பெற்று இவ்வுலகில் இடையறாத இன்பத்தை அடைவதற்கு வழிகூறுவது நடைமுறை மெய்யியல் ஆகும்' என்கின்றனர் (ஆனந்தன் கு.ச. - 'தமிழனுக்கு மெய்யியல் உண்டா?' ப. 49)

இதனையே உளவியலார், 'மனிதன் படிப்படியாக அறிவுநிலை வளர்ச்சிபெற்று உள்ளத்தால் இன்பமடைவதற்கு வழிகாட்டுவது நடைமுறை உளவியல் ஆகும்' என்கின்றனர்.

ஆகவே, மனிதன் வளமும் நலமும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்திட மனமாகிய உள்ளம் நல்நிலை பெறல் வேண்டும். அவ்வகையில் மனித நடத்தைகளை ஆராய்ந்து உள்ளத்தின் செயல்பாடுகளை மேம்படுத்திடத் தோற்றம் பெற்றதே உளவியல் என்று கூறப்படுகிறது.

## இந்தியாவில் உள்ளத்தைப் பற்றிய கருத்துக்கள் :

இந்திய நாட்டில் வேதகாலத்திலிருந்து இக்காலம் வரை உள்ளத்தைப் பற்றித் தத்துவ அறிஞர்கள் சிந்தித்துள்ளார்கள். பல்வேறு தத்துவ விதிகள் அவ்வப்போது எழுந்ததன் காரணமாக உள்ளத்தைப் பற்றிய கருத்துக்களும்

வேறுபட்டன. நியாயம், சாங்கியம், யோகம், வேதாந்தம், சைவசித்தாந்தம், உலகாயதம், பௌத்தம், சைனம் முதலிய தத்துவத்துறைகளில் உள்ளத்தைப் பற்றிய கருத்துக்கள் பொதிந்துள்ளன.

மனம் ஓங்காரம் எனும் தத்துவத்திலிருந்து தோன்றியது. பிற சமயவாதிகளின் கூற்றுப்படி, மனம் நுண்மையானது. ஐம்பொறிகள் பருமையானது. 'மனம் பருப்பொருளாக இல்லாததனால் ஐம்புலன்கள் உணர்த்துவதை ஒரே நேரத்தில் உணர முடிவதில்லை' என்பர்.

சிவதான முனிவர், 'மனம் அகங்காரம் எனும் தத்துவத்திலிருந்து தோன்றியது. பிற தத்துவங்களுடன் ஒப்பிடும்போது மனம் பருமையானது. தோற்ற முறையில் நுண்மையில் இருந்து பசுமை தோன்றுகிறது. பருமையுடைய மனம் ஐம்பொறிகளையும் ஒருங்கே அறியாது ஒவ்வொன்றாக அறிதற்குக் காரணம், வித்தை எனும் தத்துவத்தால் அறிவு சிறந்து விளங்கிய ஆன்மாவினது தானசத்தி அனைத்துத் தத்துவங்களையும் ஒருங்கே செலுத்த வல்லதன்று. ஒவ்வொன்றாய் அறியும் வல்லமையே அதற்கு உண்டு' என்கிறார். (சிவதான முனிவர், சிவதானபோத மாபாடியம், ப. 438)

ஒரே கண்மணி காக்கையின் இடக்கண்ணிலும், வலக்கண்ணிலும் விரைந்து செல்வதுபோல் மனமும் ஆன்மாவின் அகத்தும், புறத்தும் விரைந்து செல்லவல்லது. ஒரு பொருளைப் புற இந்திரியம் முதலில் பொதுப்பட உணரும். அதன்பின்னர் அப்பொருளை அகஇந்திரியமாகிய மனம் பற்றும். இந்த மனத்தில் இருந்து தோன்றுவன தானேந்திரியங்கள். இவை அறிவுப்பொறிகள். (மேலவர், மேலது, ப. 440, 441).

மனமானது ஓரிடத்தில் நிலைத்து நில்லாமல் அலைபாயக்கூடிய தன்மை வாய்ந்தது. இவ்வாறிருக்கும்போது எந்தவொரு செயலையும் சரிவரச் செய்ய இயலாது. ஆகவே, இந்த மனத்தைச் செம்மைப்படுத்த உளவியல் எனும் அறிவியல் தோன்றியுள்ளது.

வேதகாலம் கி.மு. 1500 ஆண்டுகளுக்கு முன்பு என்று கருதப்படுகிறது. அக்காலத்தில் உள்ளத்தை 'மனஸ்' என்ற பெயர் கொண்டு குறித்தார்கள். 'மனஸ்' என்ற சொல் அளத்தல் என்று பொருள்படும். (சண்முகம், தா.ஏ. - உளவியல் - I, ப - 4) இதன்படி உள்ளம் ஒருவருடைய வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அஃது ஒருவனது அறிவையும் இன்பத்தையும் அளப்பதற்கு ஏதுவாகிறது. மேலும் உள்ளம் ஓர் உடற்சார்புள்ள பொருளாகவும் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. நியாயத்திலும் வேதாந்தத் தத்துவ இயலிலும் உள்ளத்தை உடலைச் சார்ந்த பொருளாகவே விவரித்திருக்கிறார்கள். உள்ளம் இன்பதுன்பங்களை அறிய உதவுகின்றது என்றும், அது பார்த்தறிய முடியாத நுண்பொருள் என்றும் அதனை உய்த்துணர்ந்தே அறிய வேண்டும் என்றும் நியாயத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சாங்கிய யோகம் :**

உள்ளத்தைப் பற்றி மிகுதியாக உரைப்பது சாங்கிய யோகமாகும். அதன்படி உடலும் உள்ளமும் பிரகிருதி எனப்படும். அது மூலப்பொருளினின்றும் வளர்ச்சி முறையில் உண்டாகின்ற 'குணம்' என்பதாகும். குறித்த முறையில் பயிற்சி செய்தால் உள்ளம் பல்வேறு திறன்களை அடைகிறது எனச் சாங்கியம் குறிப்பிடுகிறது. உள்ளத்தின்

சக்தியைக் கொண்டு ஒரு பருப்பொருளை இடம்பெயரச் செய்யவும் (Psychokinetic) புலன் கடந்த காட்சியைக் காணவும் (Extrasensory Perception) முடியும் என்றும் யோகம் கூறுகிறது.

## பௌத்தம் :

பௌத்தத்திலும் உள்ளம் என்பது விளக்கப்பட்டிருக்கிறது. அதன்படி உள்ளம் என்பது ஒன்றன்பின் ஒன்றாக நீரோட்டம் போல் வரும் நிகழ்ச்சிகளை இணைத்து இருப்பதாகும். பால் இயல்பூக்கம் வாழவேண்டும் என்றும், அதிகாரம் வகுக்க வேண்டும் என்ற எண்ணமும் ஆகிய இவை மனிதனின் அடிநிலை உந்துசக்திகள் என்றும் பௌத்தம் கூறுகிறது.

## உலகாயதம் :

இது உள்ளத்தைப் பற்றி விளக்கும்போது உள்ளம் உடலைச் சார்ந்து எழுவது என்றும், உடல் இல்லாவிடில் உள்ளமும் இல்லை என்றும் கூறியிருக்கிறது. சார்வாகக் கொள்கைப்படி, காற்று, நிலம், நீர், தீ ஆகிய நான்கு பருப்பொருள்களால் ஆகியது உடலாகும். உள்ளம் என்பது இந்த நான்கு வகையான பொருள்கள் ஒருங்கியைந்து இயங்குவதன் காரணமாக எழுகிறது. வெற்றிலை, சுண்ணாம்பு, பாக்கு இவை ஒன்றாகச் சேரும்போது சிவப்பு நிறத்தை வெளியிடுவதை எடுத்துக்காட்டாகக் கூறுவர். சிவப்பு நிறம் இவற்றில் தனியாக இல்லை. ஆயினும் இவை ஒன்று சேரும்போது உண்டாகிறது. அவ்வாறு உள்ளமும் மேற்கூறப்பட்ட நான்கு மூலப்பொருட்களின் சேர்க்கையால் உண்டாகிறது.

இத்தகைய கருத்துக்களோடு ஒப்பிடும்போது இந்திய நாட்டு மெய்யியல் அறிஞர்களும் உள்ள இயல்புகள் உடல் அமைப்பைப்

பொறுத்து அமைந்திருக்கின்றன என்ற கருத்தைச் சிறப்பாக உரைத்திருக்கிறார்கள். அறுபத்து நான்கு கலைகளில் ஒன்றாக அங்க சாத்திரம் அமைந்திருக்கிறது.

தமிழக மெய்யியலாளர்கள் தாம் வாழ்ந்த சூழ்நிலைகட்குத் தக்கவாறு தத்துவ விதிகளையும் உள்ளத்தைப் பற்றிய கருத்துக்களையும் வெளியிட்டனர். உடல் வேறு, உள்ளம் வேறு எனினும் உள்ளம் உடலைச் சார்ந்து இருப்பது. இவை இரண்டையும் கட்டுப்படுத்தியோ அல்லது இவற்றால் கட்டுப்படுத்தப்பட்டோ இருப்பது ஆன்மா ஆகும். உடலும் உடலோடு உள்ளமும் கால அளவில் அழிந்தொழிய, ஆன்மா பிறப்பு, இறப்பு என்றும் இல்லாமல் அழியா நிலையில் இருக்கிறது. ஆனால், ஏதோ ஒரு காரணத்தினால் உடல் உள்ளத்தோடு கட்டுப்பட்டு இருக்கிறது. மனிதனது முடிவான குறிக்கோள் ஆன்மாவை இக்கட்டிலிருந்து விடுவித்து உயர்ந்த நிலையான பிறப்பு இறப்பு அற்ற நிலையை அடைய வைப்பதாகும். ஆன்மாவின் உறைவிடமாக உடலும் உள்ளமும் அமைந்து இருப்பதால், அவற்றைச் சிறந்த முறையில் காப்பது மனிதனது கடமையாகும்.

**உடலமைப்பும் உள இயல்புகளும் :**

ஒருவனது தோற்றத்தைக் கொண்டும், உடலின் அமைப்பைக் கொண்டும் கைரேகைகள், உடலின் கட்டமைப்புகளைக் கொண்டு மனிதனின் உள இயல்புகளையும், நடத்தையையும் விளக்கினர். மேலும் பலகோடி மைல் தொலைவில் உள்ள கோள்களும், விண்மீன்களும் ஒருவன் நடத்தையையும், வருங்கால நன்மை தீமையையும் உருவாக்குகின்றன

என்று நம்பினர். பின்னர் பண்பும் நாகரிகமும் வளரத் தொடங்கியபோது உள்ளத்தைப் பற்றி அக்காலத்தில் கொண்ட நம்பிக்கைகள் உயர்வாகக் கருதப்பட்டன.

**உள்ளம் முதன்மை பெறல் :**

வாழ்க்கை முறைகளை மனிதன் ஆறறிவு படைத்த விலங்குகளிடமிருந்து கற்றுக்கொள்ளும் வண்ணம் பல நெறிமுறைகளை வகுத்து வாழ்ந்திருக்கிறான். விலங்குகள் எந்தப் பரிணாம வளர்ச்சிக்கு உட்பட்டிருக்கின்றதோ, அந்த நிலைக்கு உட்பட்டுத்தான் மனிதனும் இருக்கின்றான். பரிணாம வளர்ச்சியில் மனிதனின் இயல்புணர்ச்சிகள் மாற்றம் பெற்று மன உணர்ச்சிகள் முக்கியத்துவம் பெறுகின்றன. இதனை,

> "மனிதனின் பௌதீகத் தன்மைகள் மாற்றம் பெற்று, வலிமையிழந்து, அவனுடைய எதிர்காலப் பரிணாமம் மனநிலை தொடர்பான முறையிலேயே நடைபெறக்கூடும். மூளையின் அமைப்பும் ஆற்றலும் மேம்பட்டு வீரிய மனிதர்கள் (Superman) உண்டாகலாம்" என்கிறது அறிவியல் தமிழ்க்களஞ்சியம். (அறிவியல் தமிழ்க்களஞ்சியம், தொகுதி - 19, ப.எ. 135).

மனிதனின் வாழ்வியல் மனத்தால் எழும் எண்ணங்களாலும் உந்துதல்களாலும் அமைகின்றன. சங்க இலக்கியங்களில் எண்பது விழுக்காடு பாடல்கள் அகத்தைக் குறித்துப் பாடப்பட்டுள்ளன. அகம் என்பது உள்ளத்தைக் குறிக்கும் சொல்லாகும். சங்க மாந்தர்களின் உள்ளத்தைக்

குறித்த சிந்தனைகள் சங்க இலக்கியத்தில் முதன்மை பெற்றுள்ளன. சங்கப் புலவர்களும் மனிதனின் வினைநிகழ்ச்சியையும் மனநெகிழ்ச்சியையும் தம் படைப்புகளில் உயிர்ப்பொருளாகக் கொண்டனர்.

மனிதன் இந்நிலவுலகில் தோன்றிய காலம் முதல் உளவியலும் தோன்றியிருக்கிறது. மனிதன் தன்னோடு நெருங்கி வாழ்பவர்களைப் பற்றி அறிய மிகவும் ஆர்வம் உடையவனாக இருந்து, மற்றவர்களின் நடத்தைகளுக்குத் தகத் தன் நடத்தையை மாற்றிக்கொண்டான். தன் நடத்தைகளுக்குத் தக்கவாறு மற்றவர்கள் நடத்தையைச் சீர்திருத்தி அமைக்கவும் மனிதன் தொன்றுதொட்டு ஈடுபட்டிருந்தான். தன்னிடையே வாழும் மனிதர்களிடத்துக் காணப்படும் வேறுபாடுகளைக் கண்டு அவற்றிற்குக் காரணங்கள் அறிய முற்பட்டான். இதன் விளைவாக, உளவியல் எனும் அறிவியல் தனி இயலாக வளர்ச்சி பெற்றது.

**உளவியல் :**

இரு கிரேக்கச் சொற்கள் கலந்து உருவாகிய சொல் உளவியல் அல்லது மனவியல் என்பதாகும். ‘சைகி’ (Psyche) என்ற சொல்லும், லாகஸ் (Logus) என்ற சொல்லும் இணைந்து ஆங்கிலத்தில் ‘சைக்காலஜி’ (Psychology) எனும் சொல் உருவானது. சைகி என்பது ஆன்மாவினையும், லாகஸ் என்பது அதைப்பற்றி ஆராய்தல் அல்லது படித்தலையும் குறிக்கின்றது. எனவே, உளவியலின் மூலப்பொருள் மனித உள்ளத்தைப் பற்றி ஆராய்வதாகும்.

‘உளவியல் என்பது மனிதன் உணர்ந்து செயல்படும் நடத்தைகளை (Conscious behaviour) மட்டுமே ஆராய்வதாகும்’ என்பது டிட்ச்னரின் கூற்றாகும்

(நாகராஜன், க.உ. ப. 3). கண்ணால் காணமுடியாத உள்ளத்தைப்பற்றி அறிவதைவிடக் கண்ணால் பார்க்கக்கூடிய நடத்தையை உளவியலின் பொருளாகக் கொள்வதே அறிவுடைமையாகும். மேலும், ‘மனம் என்பது கற்பனை சார்ந்த ஒன்று. அதன் வெளிப்பாடு செயல்களில் தெரிவதால் உளவியல் என்பது மனித மற்றும் உயிரினங்களின் நடத்தையை, அவற்றின் செயல்களை ஆராயும் அறிவியல் கலை’ என்கிறார் சிக்மண்ட் பிராய்டு. (கீதாவாசன், முனைவர் - தமிழிலக்கியத்தில் உளவியல். ப. 10).

உளவியல் என்பது முதன்முதலில் ஆன்மாவைப் பற்றி ஆராயும் அறிவியலாக இருந்து, பிற்காலத்தில் மனித உள்ளத்தைப் பற்றியும் மனித நடத்தையைப் பற்றியும் ஆராயும் அறிவியலாக மாறியிருக்கிறது.

## இலக்கியமும் உளவியலும் :

உள்ளக் கருத்தை வெளிப்படுத்தி அறியச் செய்வது மொழி. மொழியின்வழி வாழ்க்கை நுகர்ச்சியை வெளிப்படுத்துவது இலக்கியம். உள்ளத்தில் தோன்றி உடலில் வெளிப்படும் மெய்ப்பாட்டினை உற்றுநோக்கும்போது அவரது வாழ்வியலையும் பண்பு நலன்களையும் உய்த்துணர மாந்தர்களுக்கு மெய்ப்பாட்டின் பொருள் கொள்ளல் எளிதாகும். உலக வாழ்வில் ஈடுபட்டுக் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் அனுபவித்து வாழ்ந்த ஆழ்ந்த உணர்வுடையவர்கள் சங்க மாந்தர்கள்.

உள்ளத்தில் தோன்றி உடலில் வெளிப்படும் நடத்தையை ஆராய்வதன் மூலம் கூர்மதி உடையவர்களால் அவரது பண்புநலன்களை நடத்தையின் மூலம் வெளிப்படுத்தி அறியச் செய்யும் அறிவியல் உளவியல் என்கின்றனர். உளவியல் என்ற தனித்துறை வளர்வதற்கு முன்னரே

இலக்கியங்கள் உளவியல் தன்மையைக் கொண்டிலங்கியிருக்கின்றன என்பது தெளிவாகிறது.

**உளப் பகுப்பாய்வுக் கோட்பாடுகள் :**

பிராய்டின் உளவியல் கோட்பாடுகள் பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில தோன்றியவை. எனினும் அவை எக்கால இலக்கியங்கட்கும் பொருந்துவனவாய் அமைந்துள்ளன. குறிப்பாக இலக்கியங்கள் படைத்தவரின் குணநலன்களையும் வாழ்க்கைச் சிக்கல்களையும் வெளிப்படுத்துவதைப் பண்டைய இலக்கியங்கள் முதல் தற்காலப் படைப்புகள் வரை அனைத்திலும் காணமுடிகிறது. பிராய்டு, தன் காலத்திற்கு முன்பு படைக்கப்பட்ட ஆங்கில மற்றும் பிறமொழி இலக்கியங்களில் குறிப்பாக நாடகங்களிலும் புதினங்களிலும் லியனார்டோ டாவின்சி முதலியோரின் ஓவியங்கள், சிற்பங்கள் முதலிய கலைப்பொருட்களிலும் தமது கருத்துப் பொருந்துவதை எடுத்துக் காட்டினார். இலக்கியங்களில் ஆக்கியோரின் வாழ்வியலில் பிராய்டின் கோட்பாடுகள் விரவி நிற்கின்றன.

ஆங்கில நாடக ஆசிரியர் சேக்சுபியரின் வாழ்வுச் சிக்கல்கள், அவரது நாடகங்கள் வாயிலாக வெளிப்பட்டமை போல, உளப்பகுப்பாய்வுத் திறனாய்வு, சில பழந்தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அவற்றைப் பாடிய புலவர்களின் வாழ்வினை முடியும். தமிழில் மிகப் பழம்பெரும் இலக்கியங்கள் என்று நாம் கொள்வது சங்ககால நூல்கள் ஆகும். இந்நூலகளின் படைப்பாளிகள் தங்களை இனம் காட்டிக் கொள்வதோ, தன் வரலாற்றைப் படைக்கும் போக்கோ அதிகம் காணப்படவில்லை. சில பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயர்கூட இல்லை.

குறிப்பாக, பதிற்றுப்பத்து, புறநானூறு முதலியவற்றில் அவற்றைப் பாடிய புலவர்கள், பாட்டுடைத்தலைவனைப் பற்றி ஏற்றியும் போற்றியும் பாடினர். தங்களைப் பற்றிய குறிப்புகளை வெளிப்படுத்தவில்லை. எனினும் சில பாடல்களில் மனக்கட்டுப்பாட்டையும் மீறி, பிராய்டு கூறுவதுபோல் ஆழ்மனத்திலிருக்கும் 'சுயம்' வெளிப்படுவதுண்டு. மன அழுத்தம் அதிகமான சில பாடல்களில் வெளிப்படையாகவே தெரிகின்றது. இதற்குச் சான்றாக, நக்கண்ணையார், பெருஞ்சித்திரனார் மற்றும் ஔவையார் முதலிய புலவர்களின் படைப்புகளைக் கூறமுடியும். இவர்கள் பாடல்களை உளப்பகுப்பாய்வு செய்யும்போது இவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளும் குணநலன்களும் வெளிப்படுகின்றன.

## புறநானூற்றில் உளப்பகுப்பாய்வு காட்டும் அகவாழ்வு :

நக்கண்ணையார் எனும் பெண்பாற்புலவரின் 83, 84, 85ஆம் பாடல்களை நோக்கும்போது, அகவாழ்க்கையின் ஏமாற்றத்தை உணர்த்துகின்றன. வீர இளைஞன் ஒருவரை அவர் விரும்பியதும், அதனைச் செயலாக்க அவரது தாயும், சமூகமும் தடையாக இருந்ததையும் அகத்தே எண்ணியெண்ணி மருகிப் பசலை கொண்டிருக்கிறார். இதனை,

**"புறஞ்சிறை இருந்தும் பொன் அன்னமே"** (புறம். பா.எ. 84)

என்ற வரி உணர்த்துகிறது. மேலும் தனது ஒருதலைப்பட்ட அன்பினை வெளிப்படுத்துகிறார்.

இதனை நோக்கும்போது இவரது நிறைவேறாத ஆசை மன அழுத்தம் (Repression) மறைமுகமாக வெளிப்படுவதனை அறிய முடிகிறது. மேலும்

இந்த மனச்சிக்கல் அவரது மன ஆழத்தில் நீங்கா இடம்பெற்று 'நிலை நிறுத்தம்' (Fixation) ஆனது. புறப்பொருளான பெருங்கிள்ளியின் வீரம் பற்றிப் பேச வந்த இப்புலவர் இவர் மறைமன உளவியல் உந்துதல்களால், எவ்விதத் தொடர்பும் இன்றி மனதில் நிலைநிறுத்தமாகிவிட்ட நிறைவேறா ஆசையை வெளிப்படுத்துகிறார்.

**பெருஞ்சித்திரனாரும் பிராய்டியமும் :**

'படைப்பாளியும் பகற்கனவுகளும்' என்ற நூலில், 'இலக்கியப் படைப்பாளியின் மனநலத்தையும் வாழ்க்கை வளத்தையும் அவரது படைப்பிலக்கியத்திலிருந்து கண்டுரைக்க முடியும்' என பிராய்டு பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கி உள்ளார்.

உண்மையில் படைப்புப் பின்னணிகளாக, படைப்பாளியின் வாழ்க்கை அனுபவங்களே பின்னிப்பிணைந்து வருகின்றன எனத் தனது உளப் பகுப்பாய்வு ஆராய்ச்சிகளால் விவரித்துள்ளார்.

புறநானூறு பல புலவர்களின் பாடல்கள் அமைந்த ஒரு தொகுப்பு. இதில் புறம் எனும் சொல், உலகம் சார்ந்த வீரம், போர், கொடை முதலிய பொருள்களில் அமைந்த பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றில் பாட்டுடைத்தலைவனைப் பற்றிய விவரங்கள் அதிகம். படைப்போரின் வாழ்க்கைப் பதிவுகள் வெளிவருவதில்லை.

சில நேரங்களில் புலவர்களின் இயற்பெயருங்கூட வெளிப்படுத்தப்படாமல் காரணப்பெயர்களே காணப்படுகின்றன. எனினும் தம் புகழ் விரும்பாத இப்புலவர்களின் கட்டுக்கோப்பினையும் மீறிப் பெருஞ் சித்திரனாரின் பாடல்களில் வறுமை தாண்டவமாடுகிறது.

**வறுமையின் வலிமை :**

இளவெளிமான் எனும் புரவலரிடம் பொருள்கேட்டுச் செல்கிறார் புலவர். இவரது துன்பம் இவரை விடாது அங்கும் தொடர்கிறது. இவர் சென்றடையும் முன்பாக இளவெளிமான் இறந்து விடுகிறார். கையறுநிலை பாடும் நிலைக்குத் தள்ளப்படுகிறார் புலவர். இந்நிகழ்வினை,

**"கவி செந்தாழிக் குவிபுறத்து இருந்த**
**செவி செஞ்சேவலும் பொருவலும் வெருவா.**
**வாய்வண் காக்கையும் கூகையும் கூடி,**
**பேஎண் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்**
**காடு முன்னினனே, கட்காமுறு நன்** (புறம். பா.எ. 238)

எனத் தன் ஏமாற்றத்தைக் கூறிப் பாடலைத் தொடங்குகிறார்.

மனைவி, பாணர், சுற்றத்தார் வருந்துவதை நினைந்து புலம்புகிறார். தனது நிலையினை வெளிப்படுத்தும் இரக்கமே அவர் பாடலில் பெருகுகிறது. பத்தொன்பது வரிப்பாடலில் முதல் ஒன்பது வரிகளில் மட்டும் இளவெளிமானின் இரங்கலைப் பாடும் இவர், மீதமுள்ள பத்து வரிகளிலும் பாடுவது தன் வறுமை நிலையாகும். அவருள் ஆழ்ந்துவிட்ட துன்பியல் நிலையின் சோகம் அவர் அறியாமலேயே பாடலில் இடம்பெறுகிறது.

முதலில் வருவது அவர் ஆழ்மனதில் அழுத்தமாகப் பதிந்துவிட்ட அவலக்காட்சி. இதனை,

**“வாழும் நாளோடு யாண்டுபல உண்மையின்**

**தீர்தல் செல்லாது, என்உயிர் எனப்பலபுலந்து**

**கோல் காலாகக் குறும்பல ஒதுங்கி**

**நூல் விரித்தன்ன கதுப்பினள் கண்துயின்று**

**முன்றில் போகா முதிர்வினள் யாயும்”** (புறம். பா.எ. 150)

என நடை தளர்ந்து, அகவை முதிர்ந்து வறுமை தாளாது சாவை அழைக்கும் தன் தாய், குப்பைக்கீரையினைக் கொய்து உப்பின்றி, நீரில் வேக வைத்துச்சுவை கூட்ட மோர் கூட இல்லாத உணவை உண்ணும் வறுமைநிலை, மாற்றுடை இன்மையால் அழுக்கடைந்த ஆடையுடன் பசித்திருக்கும் மனைவி ஆகியோர் கண்களில் படக்காட்சிகளாய் விரிய, அந்த வறுமை வாழ்க்கையே சொற்களாகப் பாதிக்குமேல் விரிகிறது.

**“பசந்த மேனியொடு படர்அட வருந்தி**

**மருங்கில் கொண்ட பல குறுமாக்கள்**

**பிசைந்து தினவாடிய முலையள் பெரிதுஅழிந்து**

**குப்பைக் கீரைக் கொய்கண் அகைத்த**

**முற்றா இளந்தளிர் கொய்துகொண்டு உப்புஇன்று**

**அவிழ்ப்பதம் மறந்து பாசடகு மிசைந்து**

**மாசொடு குறைந்த உடுக்கையாள் அறம்பழியா**

**துவ்வாளாகிய என் வெய்யோளும்”** (புறம். பா. எ. 159)

எனப் பாடுகிறார். அடுத்த பாடலில் குமணன் புகழ் பாடுகிறார்.

அதில், சுற்றம் விளங்கச் சோறூட்டி, பொன் ஆபரணங்கள் தந்து, அவர்களை நண்பர்களாகக் கொள்ளும் நல்ல புகழ் கொண்ட குமணன்

என்றெல்லாம் புகழ்கிறார். அவரது நனவோடை உடனடியாகத்தன் வீட்டையே நாடுகிறது.

**"... ... எள்ளுற்று**
**இல்உணாத் துறத்தலின் இல்மறந்து உறையும்**
**புல்உளைக் குடுமிப் புதல்வன் பல்மாண்**
**பால்இல் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்**
**கூழும் சோறும் கடைஇ, ஊழின்**
**உள்இல் வறுங்கலம் திறந்து அழக்கண்டு**
**மறைப்புலி உரைத்தும் மதியம் காட்டியும்**
**நொந்தனளாகி நுந்தையை உள்ளி**
**பொடிந்த நின்செவ்வி காட்டு எனப்பலவும்**
**வினவல் ஆனாளாகி நனவின்**
**அல்லள் உழப்போள்"...** (புறம். பா.எ. 160)

என அப்படியே படமாய் விரிகிறது.

தம் வறுமையைப் பறைசாற்றும் இவர்,

**"வல்லினும் வல்லேன் ஆயினும் வல்லே**
**என்அளந்து அறிந்தனை நோக்காது சிறந்த**
**நின்அளந்து அறிமதி பெரும"** (புறம். பா.எ. 161)

எனப் பாடுகையில் தம் புலமைமீது இவர் கொண்டிருந்த அசைக்க முடியாத பெருமிதம் வெளியாகிறது.

தன் அறிவின் தகுதியை அறிந்து அதற்கேற்ப, பரிசிலைக் கொடுக்கச் சொல்லிக் கூறுகையில் இவரது தன்முனைப்பும் (ஊரீஷீ) வெளிப்படுகிறது.

## செயல்நிலைக் கோட்பாடு :

வில்லியம் ஜேம்ஸ், ஜான்டுயி, ஜேம்ஸ் ஏஞ்சல்ஸ் முதலிய அறிஞர்கள் இக்கொள்கையை வலியுறுத்துகின்றனர். மனத்தின் அமைப்பைப் பற்றி மட்டும் ஆராயும் உளவியல் பயனற்றது என்பது இவர்கள் கருத்து. மனத்தின் செயல்களினால் விளையும் பலன்கள் பற்றியும், இச்செயல்கள் மாறுபடும் சூழ்நிலைக்கேற்றவாறு எவ்விதம் மாறுபடுகின்றன என்பது பற்றியும் உளவியல் ஆராய வேண்டும் என்பது இக்கோட்பாட்டின் கருத்தாகும்.

**“முதுபார்ப்பான் அஞ்சின்ஆதல் அறிந்துயான் எஞ்சாது**
**ஒருகைமணல் கொண்டு மேல்தூவக் கண்டே**
**கடிதுஅரற்றி பூசல் தொடங்கினன்”** (கலி. பா.எ. 65)

எனும் பாடலில் தோழி நோயுற்ற நிலையிலும் மகளிரைக் காமக்குணத்தோடு நெருங்கும் முதுபார்ப்பான் தன்னைப்பேய் என்று கருதி அஞ்சினான் என்ற சூழலை அறிந்து கைநிறைய மண்ணை அவன்மேல் வீசினாள். அந்நிலையில் அவன் கடிதாகச் சத்தமிட, ஊரெல்லாம் அந்த ஒலி கேட்டது. இந்நிகழ்வு சூழ்நிலைக்கேற்பச் செயல்படும் தோழியின் மனதினை வெளிக்காட்டுவதாக அமைந்திருந்தது.

## புலன்காட்சி பற்றிய மனவியல் கோட்பாடு :

ஹெப், முர்பி, புரூணர் முதலியோர் ஒருவனது உடல் மற்றும் மனநிலைகள் பெருமளவு புலன்காட்சியின் தன்மையைப் பாதிக்கின்றன என்கின்றனர். இதனை,

**“திங்களுள் தோன்றி இருந்த குறுமுயல்**

**எம்கேள் இதன் அகத்துஉள்வழிக் காட்டமோ**

**காட்டீயாய் ஆயின் கதநாய் கொளுவுவேன்**

**வேட்டுவர் உள்வழிச் செப்புவேன் ஆட்டி**

**மதியொடு பாம்பு மடுப்பேன்”** (கலி. பா.எ. 144)

எனும் பாடலில் திங்களை நாய்க்குப் பிடிக்கவில்லை. இதனைத் தலைவி, தன் புலன்காட்சி உணர்வு மூலம் அறிந்து கொண்டு என் தலைவனை நீ காட்டித்தராவிடில் உன்னை நாய்க்குக் காட்டிக்கொடுப்பேன் என்கிறாள். திங்களில் முயல் கிடையாது எனினும், தலைவி முயல் இருப்பதாகக் கருதி, வேட்டுவரை அழைத்து வந்து, முயலைக் காட்டிக் கொடுப்பேன் என்கிறாள்.

நிலவினைப் பாம்பு விழுங்கும் நேரம் இராகுகாலம். எனவே, இந்நிகழ்வினைக் கொண்டு தலைவி திங்களை நோக்கி உன்னைச் செலுத்துவேன், ஆகையால் என் தலைவன் இருக்கும் இடத்தைக் காட்டு என்கிறாள்.

## ஹல்லின் திட்டவட்டமான நடத்தைக் கோட்பாடு :

கிளார்க் எல். ஹல் என்பவரால் உருவாக்கப்பட்டதே இக்கோட்பாடு. இக்கோட்பாட்டின்படி, நடத்தை எழுவதற்கோ அல்லது நடத்தையின் போக்கில் ஏதோ மாற்றம் தோன்றுவதற்கோ அடிப்படையில் உந்துதல் சக்தி உள்ளது. இவ்வுந்துதலின் விளைவாக உயிர்ச்சக்தி விறைப்பு நிலையை அடைகிறது. இத்தகைய விறைப்பு நிலையைக் குறைக்கவும், முடிந்தால் கடுமையாக அகற்றவும் உதவுவது, அந்த உந்துதலின் மையமாக

அமைந்துள்ள இலக்கு. அதாவது, ஓர் உயிரி உந்து தலைமையாக வைத்தே இலக்கை எய்துகிறது. இதனைக் கலித்தொகையின் பாடலடிகள் விளக்குகின்றன.

**"பேதுறமடமொழி பிணைஎழில் மான் நோக்கின்**

**மாதரார் முறுவல்போல் மனமௌவ முகைஉழப்ப**

.... .... .... .... ..... ..... ......

**நாம் அமர் காதலர் துணைதந்தார் வரைந்தே"** (கலி. பா.எ. 27)

தலைவிக்குத் தலைவனைக் கூடுவதே இலக்கு. இதனால், தலைவியின் நடத்தைப் போக்கில் மாற்றம் எழுகிறது. தலைவியின் நெஞ் சில் காதல் மலர்ந்து எழுச்சியூட்டுகிறது. தலைவன் வரவை எதிர்பார்த்து ஏங்குகிறாள். இது தலைவியின் விறைப்பு நிலையைக் குறிக்கிறது. பின் அவனை நினைந்து உருகுகிறாள். கண்ணீர் சொரிகிறாள். புலம்புகிறாள். அத்தகைய விறைப்பு நிலையின் காரணமாக, முடிவில் தலைவி, தலைவன் வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறாள். இது உயிரி இலக்கினை எய்தியதைக் குறிக்கிறது.

## மனவெழுச்சிக் கோட்பாடு :

மனவெழுச்சி என்பது உணர்ச்சிகள் மேலோங்கி நிற்கும் நனவுநிலை ஆகும். பலதரப்பட்ட மனவெழுச்சிகள் பல்வேறு காரணங்களால் தோன்றுகின்றன. இவற்றுள் முக்கியமானவை சினம், அச்சம். இவை திடீரெனத் தோன்றி விரைவில் மறையும் தன்மையுடையன.

சின உணர்வு, மனிதன் தனது இயல்பான நடவடிக்கைகள், விரும்பிய செயல்களுக்குத் தடை அல்லது இடையூறு ஏற்படும்போது ஏற்படுகிறது.

**“கொடுங்கழி வளைஇய குன்றுபொல் வால்எக்கர்**

**நடுங்குநோய்தீர நின்குறி வாய்த்தாள் என்பதோ**

.... .... .... .... .... .... ....

**உரவுநீர்ச் சேர்ப்ப! அருளினை அளிடே** (கலி. பா.எ. 12)

எனும் பாடலில் தலைவி, தலைவன் வராததைக் கண்டு வருந்துகிறாள். இதனைத் தாளாத தோழி, கோபம் கொண்டு தலைவனிடம் பலவாறு பேசித் தலைவியின் நிலையைக்கூறி, அவனிடம் தலைவியை வரைந்துகொள் என்கிறாள்.

## ஏமிஸ் கோட்பாடு :

புறக்காரணிகளால் புலன்காட்சியின் தன்மை பெருமளவு நிர்ணயிக்கப்படுகிறது என்பது ஏமிஸ் கோட்பாடாகும். இக்கோட்பாட்டினை நற்றிணை,

**“புலரா ஈர்மணல் மலிரகெண்டி**

**நாள் இறை கவர மாட்டித்தன்**

**பேடை நோக்கிய பெருந்தகு நிலையே”** (நற். பா.எ. 21)

புறக்காரணிகளாகக் காட்டுக்கோழி - சேவல் செயலைக் கண்ட தலைவன் காதல் மிகுதியால் காதலியை விரைந்து காணும் வேட்கையில் கூறப்பட்டுள்ளது.

## ஹெப், முர்பி, புரூணர் கோட்பாடுகள் :

“ஒருவனது உள்ளமும் உடல் மற்றும் மனநிலைகள் பெருமளவு புலன்காட்சியின் தன்மையினைப் பாதிக்கின்றன” என்பது மூவரின் கோட்பாடு. இதனை,

**“திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும்**
**அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது**
**மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல**
**என்னை வாழிய பலவே”** (நற். பா.எ. 136)

ஒளிமிக்க தோள்வளையானது தலைவனின் பிரிவு ஏக்கத்தால் கழன்று வீழ்தலைக் கண்டு அழுதேன். இக்காட்சியினைக் கண்ட என் தந்தை நோயினைத் தீர்த்தற்கு உரிய மருந்தினைத் தருதல் போன்று ஒரு செயலைச் செய்தார் என்ற நிகழ்வில் உடல் மற்றும் மனம் இவற்றால் புலன்காட்சியின் தன்மை பாதிக்கிறது.

## பியாஜே, வெர்னர் ஆகியோர் கோட்பாடுகள் :

புலன்காட்சியின் தன்மை, புலன்களைத் தூண்டும் பொருட்களின் இயல்புகள், செயலாற்றும் மனிதனது இயக்கம் ஆகியவற்றின் இடைவினையினால் தீர்மானிக்கப்படுகிறது.

**“நள்ளென் யாமத்தும் கண்படை பெறேஎன்**
**புள்ளொலி மணி செத்து ஓர்ப்ப**
**விளிந்தன்று மாதுஅவர்த் தெளிந்த என்நெஞ்சே”**

(நற். பா.எ. 178)

தலைவனின் தேரினைக் காணமுடியாமலும் நடுயாமப் பொழுதிலும் உறக்கம் இல்லாமல் வருந்துவதும் பறவைகளின் ஒலியானது தலைவனின் தேரின் மணியொலி போல் தோன்றி வருத்தம் கொள்வது புலன்காட்சியின் தன்மையைத் தீர்மானிக்கும் இடைவினைகள் ஆகும்.

## மனவெழுச்சிக் கொள்கைகள் :

### ஜேம்ஸ் – லாங் கொள்கை :

**“.... .... .... .... ஆயமொடு ஆடலின்**
**இடிப்பு மெய்யது ஒன்றுடைத்தே கடிக்கொள**
**அன்னை காக்கும் தொல்நலம் சிதையக்**
**காண்தொறும் கழல்தல் அன்றியும்”** (நற். பா.எ. 23)

தன்னுடைய மெலிவை மறைக்கும் வகையில் மகளிர் கூட்டத்தோடு விளையாடிக் களைத்தது போன்று காட்டுகிறாள். இதில் தலைவி தலைவனின் பிரிவினால் துன்பமுற்ற உடல், மெலிவைக் காண்பிக்கிறது. உடல் மாற்றங்கள் மனவெழுச்சி உணர்விற்கு இயைந்து நிற்கின்றன.

### வாட்சன் கொள்கை :

மனவெழுச்சி என்பது முழுமையான உடல் இயங்குமுறையில் முக்கிய மாற்றங்களைக் கொண்ட மரபுநிலை எதிர்வினைப் பாணிகளை அளிப்பதோடு குறிப்பாக உள்ளார்ந்த உறுப்புகளும் சுரப்பிகள் ஆகிய அமைப்புகளிலும் மாற்றங்கள் உண்டாக்குகின்றன! நற்றிணையில் இக்கொள்கை அடிப்படை காணும்போது,

**“வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்**
**அரிஅமை சிலம்பு கழிஇ பல்மாண்**
**வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்**
**இவைகாண் தோறும் நோவர் மாதோ”** (நற். பா.எ. 12)

## திருவள்ளுவரும் உளவியலும் :

திருவள்ளுவரும் உளவியல் பற்றிச் சிந்தித்துள்ளார். இவர் பட்டறிவு, கவனிப்பு முறையில் வழங்கிய தத்துவங்களில் உளம் சார்ந்த கருத்துக்கள் வெளிப்படுகின்றன. திருவள்ளுவர் கருத்துக்களில் நவீன உளவியல் தொடர்பான சில குறள்களும் இடம்பெற்றிருப்பது வியப்பிற்குரியதாகும். குறிப்பாக மனநலம் பற்றி முதன் முதலில் சிந்தித்தவர் திருவள்ளுவர் என்றும் கூறுவர். எனவேதான், 'மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்' என்கிறார்.

**"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்"** **(குறள். 629)**

இதுபோன்ற சிறந்த ஆலோசனை (Counselling) வேறு இருக்க முடியாது.

**"கனவினால் உண்டாகும் காமம் நனவினில்**
**நல்காரை நாடித் தரற்கு"** (குறள். 1214)

எனும் குறளில் உள மருத்துவம் அடங்கியுள்ளது. இவ்வாறு திருவள்ளுவரும் சிறந்த உளவியலறிஞராகத் திகழ்ந்திருக்கிறார்.

மனநலம் என்பது இனநலத்தின் அடிப்படையில் அமைவதாகும். இதனை,

**"மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்"** (குறள். 487)

என்கிறார் வள்ளுவர். சான்றோர் மனநலம் நன்குடையவர் ஆயினும் அவருக்கு இனநலம் நல்ல பாதுகாப்பை வழங்கும். இதனை உளவியல் ஒப்பார் குழு (Peer group) என்கிறது. உளம் நலம் பெற்றிருந்தால்தான் உடல் நலம் பெறும். உடலும் உள்ளமும் வளம் பெறும்போது மானுட வாழ்வியல் சிறப்பெய்துகிறது.

**முடிவுகள் :**

- சங்க இலக்கியம் மானுடம் பாடும் நோக்கில் அமைந்து உள்ளது. சங்க இலக்கியம் தமிழர்தம் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் மட்டும் உணர்த்தாமல் பல்வேறு துறைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது.

- சங்க காலத்தில் உளவியல் என்ற சொல் உள்ளம் என்ற சொல்லால் ஆளப்பட்டுள்ளது. உள்ளம் என்பதற்கு ‘அகம்’ என்பதைக் குறியீடாகக் கொண்டுள்ளனர்.

- உளவியல் என்பது புதிதாகத் தோன்றிய துறையல்ல. தமிழர்தம் தத்துவங்களே உளவியல்.

- உளவியல் எனும் புதிய துறை தோன்றுவதற்கு மெய்யியலும் அடிப்படை ஆதாரமாக அமைந்திருக்கிறது. ஆகவே, மெய்யியலாளர்கள் எனக் குறிப்பிடப்படும் அனைவரும் உளவியலறிஞர்கள்.

- உளவியல் முதலில் ஆன்மாவைப்பற்றி ஆராயும் இயலாக இருந்து, பின்னர் மனிதனின் நடத்தையை அறிவியல் முறையில் ஆராயும் இயலாக மாற்றம் பெற்றுள்ளது.

- உள்ளத்தை அறிவியல் அணுகுமுறையோடு ஆராய்வதற்கு முன்பே அகமன நனவு, நனவிலி நிலைகளை உணர்வுகளுடன் தொடர்புபடுத்தி ஆராயும் உளவியல் சங்க காலத்தில் இருந்து வளர்ச்சி பெற்றுள்ளது. அக, புறப்பாடல்களில் கூறப்படும் வாழ்வியல் கூறுகள் நுட்பமான மன உணர்வாக வெளிப்படுத்தப்பட்டு அந்த நிலையில் படிப்பவரும் உணருமாறு நாகரிகமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. ஆகவே, சங்க மாந்தர்களின் வாழ்வியல் இலக்கியங்களை ஆராயும்போது சங்க இலக்கியம் உளவியல் செலுத்துநெறி கொண்ட இலக்கியமாகத் திகழ்கிறது.

## இயல் – 3

# சங்க மாந்தர் வாழ்வியலில் குழந்தை உளவியல்

குழந்தைச் செல்வம் என்பது மிகச்சிறந்த செல்வமாகக் கருதப்பெறுவது. பண்டைக் காலம் தொட்டு இன்றைய காலம் வரை குழந்தைப் பிறப்பும் அதன் வளர்ப்பும் எதிர்கொள்ளும் நிலையும் மிகக்கடினமான செயலாக இருப்பினும் அது பெற்றோருக்கும் மற்றோருக்கும் உள்ளத்து மகிழ்வினை ஏற்படுத்துகின்றது. உள்ளத்து மகிழ்வு ஏற்படுத்திக் கொள்ளும் எச்செயலும் கடினமாக இருப்பதில்லை.

மாந்தர்கள் தமது குழந்தை மிகச்சிறந்து விளங்க வேண்டும் என்பர். எனவே, குழந்தை பிறப்பதற்கு முன்னும் பின்னும் குழந்தை வளர்வு நிலையில் பல்வேறு நுணுக்கங்களைக் கையாண்டு வருகின்றனர். குழந்தை கருவாகும்போதே அதன் பெற்றோர், பெற்றோரது முன்னோர்களின் மரபுப் பண்புகள் கடத்தப்படுகின்றன. அக்குழந்தை நற்செய்கையுடையதாயும் அதற்கு மாறான செய்கை உடையதாயும் அதன் வளர்ச்சி மற்றும் சூழ்நிலையினால் தீர்மானிக்கப்படுகின்றன.

குழந்தை வளர்ப்பு என்பது மிகவும் சிக்கலான, அதே சமயத்தில் மிக முக்கியமான செயல்பாடும் ஆகும். இச்செயல்பாட்டினைச் செம்மைப்படுத்த இன்றைய சூழலில் உளவியல் துறையில் தனிப்பெரும் பிரிவாக உலகளாவிய அளவில் குழந்தை உளவியல் பற்றிய ஆராய்ச்சிகள் பல்வேறு நிலைகளில் வளர்ந்து வருகின்றன. இதில் உளவியலறிஞர்கள்

ஆய்ந்து கண்டுள்ள மெய்மைகள் பெரும்பாலும் சங்ககால மாந்தர்களின் குழந்தை வளர்ப்பு நெறிமுறைகளோடு பொருந்திக் காணப்படுகின்றன. மேலும், குழந்தை பிறப்பிலும் வளர்ப்பிலும் மரபு, சூழ்நிலையின் பங்கும் உளவியல் கொள்கைகளும் கோட்பாடுகளும் சங்க மாந்தர்களின் நெறிமுறைகளைப் பின்பற்றி எழுந்துள்ளன. சங்க மாந்தர்கள் பலநூறு ஆண்டுகட்கு முன்னரே இதில் காரண காரியத்துடன் பல நுணுக்கங்களைக் கையாண்டுள்ளமையைப் பற்றிக் கூறுவதாக இவ்வியல் அமைகிறது.

## குழவி – குழந்தை :

மொழி வளர்ச்சியின் காரணமாகச் சொற்கள் வழக்கு இழந்தும் வழக்கு வேறுபட்டும் வருவதைக் காண முடிகிறது. இதற்குக் காரணமாக அமைவது மொழிப் பயன்பாட்டில் காலந்தோறும் ஏற்பட்டுள்ள மாறுதல் ஆகும். அவ்வகையில் ‘குழவி’ என்ற சொல் ‘குழந்தை’ என வழங்கப்படுகிறது. சில இடங்களில் ஆண் குழந்தைகளைப் ‘பிள்ளை’ எனவும் சில இடங்களில் பெண் குழந்தைகளைப் ‘பிள்ளை’ எனவும் வழங்குகின்றனர். இது அந்தந்த ஊர்களின் வட்டார வழக்கினைப் பொறுத்து அமைகிறது.

## தொல்காப்பியத்தில் குழவி:

உயிரினங்களின் இளமைப் பருவத்தைக் குறிப்பதற்குப் பல பெயர்களை வரையறுத்துள்ளது தொல்காப்பியம். அவற்றுள் ஒன்று குழவி என்பதாகும். தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ள இளமைப் பெயர்களுள் ஒன்றாகக் குழவி என்பது ‘குழ’ என்னும் சொல்லிலிருந்து தோன்றியதாகத் தமிழ் லெக்சிகன் குறிப்பிட்டுள்ளது.

குழவி என்பது இன்று மக்களுக்கு உரியதாய் இருப்பினும் யானை, ஆ, எருமை, கடமை, மரைஆ, குரங்கு, முசு, ஊகம் என்பனவற்றின் குட்டிகளையும் குறித்துள்ளது.

(தொல். பொருள். மரபு. நூ.எ. - 563 - 566).

**“குழவி மருங்கினும் கிழவ தாகும்”**

(தொல் - பொருள் - புறத்திணையியல் - நூ.எ.195)

குழவி, மகவு எனும் இரண்டே அக்காலத்தில் மக்களினக் குழந்தைகட்கு உரியனவாய் இருந்தன. பிள்ளை என்பது தற்கால வழக்கு. குழவி, மகவு எனும் இரண்டு பெயர்கள் மக்களுக்குப் பொருந்துவன என்பதனைத் தொல்காப்பியம்

**“குழவியும் மகவும் ஆஇரண்டு அல்லவை**
**கிழவ அல்ல மக்கள் கண்ணே”**

(தொல், பொருள், மரபு. நூ.எ. 567)

என்ற வரிகளின் வழி தெளிவுபடுத்துகின்றது.

சங்க இலக்கியத்திலும் குழந்தையைக் குறிப்பிட,

**“தாயில் தூவாக் குழவி”** (புறம், பா. எண் : 4)

**“பாலில் குழவி”** (புறம், பா. எ. 44)

**“ஈன்றோள் நீத்த குழவி”** (புறம், பா.எ. 230)

**“கடுங்குதலைக் குழவி”** (புறம், பா.எ. 319)

**“தூவாக் குழவி”** (புறம், பா.எ. 379: 15)

**“வழைவளர் சாரல் வருடை நன்மான்**
**குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி”** (கலி. பா. எ. 50)

என்றவாறு ‘குழவி’ எனும் சொல்லாட்சி பயன்படுத்தப்பட்டு உள்ளது. குழவி எனும் சொல்லுக்கு ‘மழலை’ என்பது பொருளாகும்.

## குழவியும் குழந்தையும் :

தொல்காப்பியர் மக்களினத்தின் இளமைப் பருவத்தைக் குறிக்கும்போது குழவி, மகவு என்ற சொற்களை மட்டுமே கையாளுகின்றார்.

(தொல். பொருள். மரபு. நூ.எ. 567)

உளவியலார் குழவி, குழந்தை என்ற இரு சொற்களையும் கையாளுகின்றனர். பிறப்பு முதல் மூன்று அகவை வரை உள்ள நிலையில் குழவி என்றும், மூன்று முதல் பத்து அகவை வரை உள்ள நிலையினைக் குழந்தை என்றும் குறிப்பிடுகின்றனர். இதனையும் இரண்டாகப் பிரித்து மூன்று முதல் ஆறு வயது வரை உள்ள நிலையினை ‘முன்குமரப்பருவம்’ என்றும் ஏழு முதல் பத்து வயது வரை உள்ள நிலையினைப் ‘பின்குமரப்பருவம்’ என்றும் வகைப்படுத்தியுள்ளனர்.

(க.உ. - கி. நாகராஜன். ப.எ. 62)

குழந்தை பிறந்தது முதல் பத்து வயது வரை உள்ள நிலையினை உளவியலார் குழந்தைப் பருவம் என்கின்றனர். இதனையே, தொல்காப்பியர் இளமைப்பருவம் என்று குறிப்பிடுகின்றார்.

## குழந்தை வளர்ச்சியில் மரபும் சூழ்நிலையும் :

மனிதனது வளர்ச்சியையும் அதனின்று எழும் அவனது நடத்தையையும் உறுதி செய்யும் காரணிகளில் மிக முக்கியமானவை இரண்டாகும். அவை மனிதனது 'மரபு நிலையும்' (Heredity or Nature) அவன் வளர்ந்து வரும் 'சூழ்நிலையும்' (Environment or Nurture) ஆகும். மரபுநிலை மாற்ற முடியாதபடி பிறப்பிலேயே அமைவதாகும். சூழ்நிலை தொடர்ந்து மாற்றம் பெற்றும் விரிவடைந்தும் காணப்படுவதாகும்.

மனித வளர்ச்சி மற்றும் நடத்தை ஆகியவற்றை முடிவு செய்வதில் முக்கியப்பங்கு வகிப்பது மரபு என்றும் சூழ்நிலை என்றும் அறிஞர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. சூழ்நிலை என்பது ஒருவனது வளர்ச்சி இயல்பின் அடிப்படை ஆகும். "ஒருவனால் செய்து முடிக்கப்படும் செயல்களுக்குத் தக்க வாய்ப்புகளும் ஊக்குவிக்கும் சூழ்நிலைகளும் தரப்பட்டால், வேறு எந்த ஒருவனாலும் செய்து முடிக்க இயலும்" என்பது சூழ்நிலைவாதிகளின் கருத்தாகும்.

ஆனால், மரபு நிலையும் சூழ்நிலையும் இணைந்தே மனித வளர்ச்சியைத் தீர்மானிக்கின்றன. ஒன்று மட்டும் தனித்து இயங்குவதில்லை. பிறப்பால் பெற்றிராத எந்த ஆற்றலையும் திறனையும் கல்வியாலோ, பயிற்சியாலோ பெற்றிட முடியாது. அதேபோன்று பிறப்பால் பெற்ற திறன்களும் ஆற்றல்களும் முறையான பயிற்சியின்றி மலர முடியாது.

(நாகராஜன்.கி., க. உ. - ப. 32)

மக்கைவர் மற்றும் பேஜ் என்பவர்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையும் நிகழ்ச்சியும் மரபு மற்றும் சூழ்நிலை ஆகிய இரண்டின் இணைந்த செயல்பாட்டிலேயே அமைகிறது என்கின்றனர்.

மரபு மற்றும் சூழ்நிலை ஆகிய இரண்டின் இணைந்த செயல்பாட்டினாலேயே மனித உயிர்கள் வளர்ந்து செயல்படுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் அவனது முன்னோருடைய மரபும் குழந்தை பிறந்த பின் அக்குழந்தை எதிர்கொள்ளும் சூழ்நிலையின் தாக்கமும் இயல்பாகவே அமைகின்றன.

**உயிரியல் மரபு :**

மரபு என்பது ஒருவனிடம் இடம் பெற்றுள்ள பிறப்பால் தோன்றிய தனித்த தன்மைகளின் ஒட்டுமொத்த நிலைதனைக் குறிப்பிடுகிறது. பிறப்பின்போது ஒரு குழந்தை தனது பெற்றோர்களிடமிருந்து பெறுகின்ற உடற்கூறுப் பண்புகள் அனைத்தும் மரபுநிலைக்கு உட்பட்டதாகும். உயிரியல் மூலமாகக் குழந்தைகள் தங்கள் பெற்றோர்களிடமிருந்து பெறுகின்ற உடற்கூறுப் பண்புகள் அனைத்தும் மரபு நிலைக்கு உட்பட்டதாகும். உயிரியல் மூலமாகக் குழந்தைகள் தங்கள் பெற்றோர்களிடம் இருந்து பெறக்கூடிய அனைத்தும் மரபு நிலையின்பாற்பட்டது. பிறப்பில் குழந்தை தனது பெற்றோர்களின் உடற்கூறுப் பண்புகளான தோலின் நிறம், தன்மை, உடலமைப்பு, முடியின் நிறம், அதன் தன்மை, கண்ணின் நிறம் ஆகியவற்றையும் உளக்கூறுப் பண்புகளான உளத்தன்மை, நுண்ணறிவு முதலியவற்றையும் பெற்றுத் திகழ்கிறது. குழந்தைகள் பெற்றோரை ஒத்திருப்பதற்கு மரபுவழிக் காரணிகளே காரணமாக அமைகின்றன.

மரபு என்பது மாற்றுதற்கு அரியது. மாற்றக்கூடாதது. மாற்றினால் அதன் தன்மை மாறிவிடும் என்பதனைத் தொல்காப்பியர்,

**“மாற்றரும் சிறப்பின் மரபியல் கிளப்பின்”**

(தொல். பொருள். மரபு. நூ.எ. - 545)

என்ற வரிகளில் குறிக்கிறார். மேலும், மரபு என்பது மாற்ற முடியாததும் மாற்றக்கூடாததும் ஆகும். மரபுகள் மாறினால் பொருளுணர்வுகள் வேறு வேறாகி விடும் என்ற கூற்றினை,

**"மரபுநிலை திரியின் பிறிது பிறிது ஆகும்"** (மேலது. நூ.எ. - 637)

என்றும்,

**"மரபுநிலை திரியா மாட்சிய ஆகி"** (மேலது. நூ.எ. - 639)

என்றும் தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். மரபு என்பது திரியாத மாட்சிமைப் பண்பினை உடையது. உள்ளதை உள்ளவாறு செயல்படுத்தவில்லையாயின், மரபின் தன்மை மாற்றம் பெற்றுவிடும். ஆனால், மரபு என்பது இயல்பாகவே மாற்றம் பெறாத தன்மையுடையது.

**சூழ்நிலை :**

உளவியலார் கருத்துப்படி ஒருவனுடைய சூழ்நிலை என்பது ஒரு குழந்தை பிறந்தது முதல் இறக்கும்வரை அதனைச் சுற்றி இருக்கும் பல்வேறு விதமான தூண்டல்களின் தொகுப்பாகும். அவனது வளர்ச்சி, அவனுக்குத் தனது சூழ்நிலையில் இருந்து கிடைக்கின்ற தூண்டல்களின் தன்மையை ஒட்டியே அமைகிறது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை, வளர்ச்சியைத் தூண்டுவதாக அமையும். மற்றொரு வகையான சூழ்நிலை வளர்ச்சியைப் பாதிப்பதாகவும் அமையும் நிலை உள்ளது. சாதகமான சூழ்நிலையில் வளரும் குழந்தைகளின் உள்ளார்ந்த திறன்களும் ஆற்றல்களும் முழுமையாக வெளிப்படுகின்றன. மாறாக, பாதகமான சூழலில் வளரும் குழந்தைகளின் சிந்தனை, மொழிவளர்ச்சி, திறன் உயர்வு, நுண்ணறிவு

மேம்பாடு, ஆளுமை வளர்ச்சி ஆகியவை பெரிதும் பாதிக்கப்பட்டு பின்தங்கிய நிலைக்குத் தள்ளப்படுகின்றன.

எனவே, ஒருவனது வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் பெரும்பங்கு வகித்து, அக்குழந்தை இன்றைய நிலையில் எப்படி நிலைபெறுகிறான் என்பதைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணியாகச் 'சூழ்நிலை' திகழ்கிறது.

**மரபுக்கூறுகள் கடத்தப்படும் விதம் :** (Transmission Mechanism of Heredity)

பெற்றோர்களின் உயிரணுக்களின் கலப்பினால் குழந்தை உருவாகின்றது. ஆணின் உயிரணு 'விந்துவாகவும்' (Sperm) பெண்ணின் உயிரணு 'சினைமுட்டையாகவும்' (Ovum) அமைந்துள்ளன. இவ்விருவகை உயிரணுக்களும் கலப்பதால் 'கருவுறுதல்' (Fertilisation) நிகழ்ந்து, 'கருமுட்டை' (Zygote) உருவாகின்றது. விந்தணு மிகவும் நுண்மையானது. சினைமுட்டை விந்தணுவைப் போன்று 8500 மடங்கு பெரியது. கருமுட்டையின் அளவோ, ஒரு குண்டூசியின் தலையைவிடக் குறைவானது.

ஒவ்வொரு உயிரணுவிலும் (விந்தணு அல்லது சினைமுட்டையில்) 23 ஜோடி குச்சி போன்ற பொருட்கள் காணப்படுகின்றன. அவற்றிற்கு 'குரோமோசாம்கள்' என்று பெயர். ஒவ்வொரு குரோமோசோமிலும் 20,000 முதல் 42,000 எண்ணிக்கையிலான பாசிமணி போன்ற அமைப்புகள் காணப்படுகின்றன. இவற்றிற்கு 'ஜீன்ஸ்' (Genes) என்று பெயர். இந்த ஜீன்களே மரபுக்கூறுகளைச் சுமக்கின்றன. ஒவ்வொரு மனிதப்பண்பு அல்லது குணமும் பல ஜீன்களை உள்ளடக்கிய தொகுதிகளால் விளைகிறது.

பெண்ணின் உயிரணுவில் உள்ள 23 ஜோடி குரோமோசோம்களும் 'ஙீ' என்ற ஒரே வகையைச் சார்ந்தவை. ஆனால், ஆணின் உயிரணுவில் கடைசி ஜோடியான 23-ஆவது ஜோடியில் 'X', 'Y' என்ற இருவகைக் குரோமோசோம்கள் ஒரே வகையாய் XX என்று அமைந்தால் பெண்ணாகவும் XY என்று இருவகையில் அமைந்தால் ஆணாகவும் பிறப்பு ஏற்படுகிறது.

ஒவ்வொரு மனித செல்லிலும் 23 ஜோடி அல்லது 46 குரோமோசோம்கள் உள்ளன. எனவே, ஆணின் உயிரணுவான விந்தணுவும், பெண்ணின் கருமுட்டையும் கலந்து கருவுறுதல் நிகழ்ந்து, புதிய செல் அல்லது உயிரணு (கருமுட்டை) ஏற்படும்போது 46 + 46 = 92 குரோமோசோம்கள் இருக்க வேண்டும். ஆனால், உண்மையில் அவ்வாறு நிகழ்வதில்லை. கருமுட்டை செல்லிலும் 23 ஜோடி அல்லது 46 குரோமோசோம்கள் அமைகின்றன. இது 'குரோமோசோம்கள் குறைப்பு' (Metasis) என்ற முறையில் ஏற்படுகின்றன.

இம்முறையில் கருவுறுதலில் பங்கு பெறும் பெண் செல்லின் 23 குரோமோசோம்களும், ஆண் செல்லின் 23 குரோமோசோம்களும் நீக்கப்பட்டு, கருமுட்டை செல்லில் 46 குரோமோசோம்களே அனுமதிக்கப்படுகின்றன. கருவுறுதலில், பெண் செல்லின் எந்த 23 குரோமோசோம்கள் ஆண் செல்லின் எந்த 23 குரோமோசோம்களோடு இணைகின்றன என்பது 'வாய்புக் கோட்பாடு' (Theory of Probality) அடிப்படையில் நிகழ்கிறது. எனவே, ஒரே பெற்றோருக்குப் பிறக்கக்கூடிய எந்த இரண்டு குழந்தைகளும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை (ஒரே கரு இரட்டையர்களைத் தவிர). ஒவ்வொரு குழந்தையும் தனது தாயின்

சினைமுட்டை செல்லில் இருந்து சரிபாதி குரோமோசோம்களையும் (23) தந்தையின் விந்தணு செல்லில் இருந்து மறுபாதி குரோமோசோம்களையும் (23) பெற்று உருவாவதால், அக்குழந்தையின் குணநலன்கள் தாய் தந்தையை ஒத்திருக்கின்றன. ஆனால், ஒரே பெற்றோருக்குப் பிறந்த சில குழந்தைகளிடம் தந்தைவழி மூதாதையர்களின் குணங்கள் அதிகரித்தும், வேறு சில குழந்தைகளிடம் தாய்வழி மூதாதையர்களின் குணங்கள் அதிகரித்தும் காணப்படும். இதனைப் பின்வரும் மரபு விதிகள் விளக்குகின்றன.

**மரபு விதிகள் :** (Laws of Heredity)

i. "ஓர் இனத்தின் வழித்தோன்றல்கள் அதே இனத்தைச் சார்ந்தவையாக இருக்கும்." இதன் காரணமாகத்தான் குழந்தைகள் தங்களின் பெற்றோரை ஒத்துக் காணப்படுகின்றன.

ii. பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையே காணப்படும் வேற்றுமைகளுக்கும் மரபுக்கூறுகளே காரணமாக அமைகின்றன.

iii. சில மரபுக்கூறுகளில், "பின்னோக்க நகர்வு" (Regression) நிகழ்கிறது. உதாரணமாக, மிக உயரமான பெற்றோர்களின் குழந்தைகள் பெற்றோரை விட உயரம் குறைந்து காணப்படுவர். இரண்டு மூன்று தலைமுறைகளில் அப்பரம்பரையைச் சேர்ந்தவர்கள் சராசரி உயரத்தை அடைந்து விடுவர். இவ்வாறாகவே இயற்கையே சராசரி நிலையிலிருந்து மிக அதிக விலக்கம் ஏற்படும் நிகழ்வுகளை வெகுவாகக் குறைத்து விடுகிறது.

iv. பெற்றோர்களைத் தவிர, இருவழி மூதாதையர்களிடமிருந்தும் குழந்தைகள் மரபுக்கூறுகளைப் பெறுகின்றனர். ஒரு குறிப்பிட்ட தலைமுறை மூதாதையர்களுக்கும், குழந்தைகளுக்கும் உள்ள தலைமுறை இடைவெளி அதிகரிக்க அதிகரிக்க குழந்தைக்கு அத்தலைமுறையினரால் அளிக்கப்படும் மரபுக்கூறுகளின் பங்கு குறைந்து கொண்டே செல்லும்.

v. சில மரபுக்கூறுப் பண்புகள் சில தலைமுறைகளில் செயல்பாடு குன்றியும், அடுத்த சில தலைமுறைகளுக்குப்பின் திடீரென எழுச்சி பெற்றும் விளங்குவது சாத்தியம் ஆகும்.

(கி. நாகராஜன், க.உ. ப.எ.-36)

இம்மரபு விதிகளின்படி, ஒரு குழந்தையின் குணநலனில் அதன் 8 தலைமுறை மூதாதையர்களின் தாக்கம் ஏற்பட வாய்ப்புள்ளதாக உளவியலறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர்.

## கருவியலும் உளவியலும் :

பக்தி இலக்கியமாகவும் பைந்தமிழ் இலக்கியமாகவும் விளங்கும் நூல் திருவாசகம். அறவியல் கருத்துக்கள் மட்டுமின்றி, அறிவியல் மற்றும் உளவியல் செய்திகளையும் தன்னகத்தே கொண்டுள்ள நூலாகும். ‘திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்’ என்றொரு மொழி உண்டு. இத்தகைய திருவாசகம் மனித உயிர் உருவாக்கம் பற்றியும் எடுத்துரைக்கின்றது. இத்திருவாசகத்தில் நான்காவது பதிகம் ‘போற்றித் திருவகவல்!’ 225 அடிகளில், நிலைமண்டில ஆசிரியப்பாவால் ஆன இப்பதிகம், இறைவனின் முதன்மையைப் போற்றுகிறது. இப்பதிகத்தின் முதற்பகுதி உயிர்களின் உற்பத்தி பற்றிப் பேசுகிறது. இது இன்றைய

மருத்துவத்தின் கருவியலுடனும் (Embriology) உளவியலுடனும் ஒத்திருப்பது வியப்பிற்குரிய செய்தியாகும்.

**“மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து**
**ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்**
**ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்**
**இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்**
**மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்**
**ஈரிரு திங்களில் பேரருள் பிழைத்தும்**
**அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்**
**ஆறு திங்களில் ஊரவர் பிழைத்தும்**
**ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்**
**எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்**
**ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்**
**தங்க தசமதி தாயொடு தான்படும்**
**துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்”**

(திருவாசகம் போற்றித் திருவகவல் : பா.அ. - 13-25)

கரு உருவாவதும் தப்பிப் பிழைப்பதும் உயிரின் வினைக்கு ஏற்ப நிகழும் என்பது சைவ சமயம் கூறும் தத்துவம். பெண்ணின் கருப்பையில் பெல்லோபியன் குழாய்ப் பாதையின் முதிர் அண்டம் விந்தணுவுடன் இணைந்து கருமுட்டை (Zygote) உண்டாகிறது. இதுவே கருவுறுதல் (Fertilization) எனப்படுகிறது.

இக்கரு சிறிது சிறிதாக வளர்ந்து நிரம்பும் பருவுடம்புடன் பிறக்கும். இவ்வாறு வளர்ந்து பிறத்தற்கு இடையேயுள்ள அழிவு நிலைகள் பலவுண்டு.

மக்களாகப் பிறக்கும் உயிர்களும் அத்துணை அழிவுகட்கும் தப்பிப் பிழைத்தல் வேண்டும். 'ஈனமில் கிருமி' எனக்குன்றுதல் இல்லாத பல அழிவுகளின் திறத்தைக் குறிப்பிடுகிறார் மணிவாசகர்.

கரு உண்டாகிய தொடக்க நாட்களில் புணர்ச்சி ஏற்படும்போது கரு அழிந்து விடும். இதனைப் 'பூப்பிடைப் பிரிவு' என்பர். அந்நாட்களில் கூடினால் வரும் தீமைகளை இறையனார் களவியலுரை,

**"முன்னாலும் கூடி உறையப்படும் குற்றம்**
**என்னோ எனின் பூப்பு புறப்பட்ட**
**ஞான்று நின்றகரு வயிற்றில் அழியும்**
**இரண்டாம் நாள் நின்றகரு வயிற்றில்**
**சாம் மூன்றாம் நாள்நின்ற கரு**
**குறு வாழ்க்கைத்தாம் வாழினும்**
**திரு இன்னாம்"** (இறையனார் களவியலுரை, நூ.எ. 43)

என எடுத்துரைக்கிறது. இவ்வாறு நிகழின் தொடக்கத்திலேயே கரு அழியும் என்பதனைப் பல்லாண்டுகட்கு முன்னரே ஆராய்ந்து கண்டுள்ளனர்.

கருவுற்ற முட்டை அடையும் வளர்ச்சிகளை வளர்கருவின் நிலைகளை (Embryo) 'ஒரு மதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும், இருமதி விளைவின் ஒருமையின் பிழைத்தும்' என்ற வரிகள் சுட்டுகின்றன. தான்றிக் காயின் அளவில் 4 மி.மீ. அளவில் சிறிதாக இருக்கும் கருப்பையின் திசுச்சுவர்கள் ஆழமாகப் பதிந்து வளரத் தொடங்கும். அந்நிலையில் தாயின் அறியாமையால் அழிதல், தானே அழிவுறுதல் என இரு நிலைகளில் கருச்சிதைவு ஏற்படலாம். எனவேதான் இங்கு மணிவாசகர் 'இருமையின் பிழைத்தும்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இரண்டாம் திங்களில் கருவானது ஏறத்தாழ முக்கால் அங் குலம் நீளமுள்ளதாகவும், மூலக்கரு முட்டையை விட ஏறத்தாழ 40,000 மடங்கு பெரியதாகவும் அமையும். இந்நிலையில் உயிர்வளி (Oxygen) ஆனது கருவிற்குச் செல்லும். விரல்கள், கண், செவி, மூக்கு, வாய் முதலிய உறுப்புகளின் தொடக்கக்கால முளைகள் வெளிக்கிளம்புகின்றன. தாயிடமிருந்து தனிப்பட்டு அதற்குச் சொந்தமான ஓர் இரத்த வகை அக்குழந்தைக்கு ஏற்படுகிறது.

மூன்றாம் திங்களில் கருவுற்ற மங்கையர் புளிப்புப்பண்டம், மண் முதலியவற்றை உண்ணும் மசக்கை ஏற்படும். இப்பெண்கள் பச்சைப் புளிச்சுவைமேல் மிகுந்த விருப்பம் உடையவராக இருப்பர் என்பதை,

**"ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்**
**கடுஞ்சூல் மகளிர் போல நீர் கொண்டு"** (குறுந் : பா. எ. 287)

என்றும்,

**"புளிங்காய் வேட்கை"** (ஐங். : பா.எ. 51)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலும் புளிப்புச்சுவைமேல் கொண்ட விருப்பினைப் பறைசாற்றுகின்றன. இச்செயலைப் புறநானூறு,

**"வயவுறு மகளிர் வேட்டுண்ணின் அல்லது**
**பகைவருண்ணா வருமன் விடையே"** (புறம். பா.எ. 20)

என்று குறிப்பிடுகிறது.

கருவைப் பற்றிய கவலையின்றி மண் முதலியவற்றை உண்ணும் மசக்கையிலிருந்து கரு அழியாமல் தப்ப வேண்டும். இக்காலகட்டத்தில்தான்

இதயம் ஏறக்குறைய முழுமையாக வளர்ச்சி அடைந்து, குரல் நாண்கள் தோன்றி, மூளையும் முற்றிலுமாக உருவாகத் தொடங்குகிறது.

இரண்டாம் திங்கள் வெளிக்கிளம்பிய கண்ணின் தொடக்ககால முளைகள் ஈரிரு திங்களான நான்காம் திங்களில் நன்கு திறக்கும் என்பது கருவியல் செய்தியாகும். இப்பார்வைப் புலத்தின் வளர்ச்சி பற்றிய எண்ணத்தை உள்ளடக்கி மணிவாசகர் 'பேரிருள் பிழைத்தும்' எனக் கட்புலன் வளர்ச்சியைக் குறித்துள்ளார். இப்பொழுது குழந்தையின் பாலுறுப்புகள் தெரியத் தொடங்குகின்றன.

தாயின் வயிற்றில் இருக்கும் கருக்குழவி ஐந்தாம் திங்களில் சாவில் (முஞ்சுதல்) இருந்து பிழைத்தல் வேண்டும். மசக்கையில் மெலிவுற்ற கரு ஐந்தாம் திங்கள் வளர்ச்சி இன்றிப் புறக்காரணிகளால் அழியும் நிலை என்பது அறிவியல் செய்தியாகும். ஆயினும் இறையருளால் 'முஞ்சுதல் பிழைக்கும்' என்பது இறையியல் உணர்த்துவதாகும். இத்திங்களில் கருவில் இருக்கும் குழந்தையால் தனது தாயின் குரலைக் கேட்டு அடையாளம் கண்டறிய இயலும்.

ஆறு, ஏழாம் திங்கள்களில் கரு வளர்ச்சியில் நிகழும் தடைகளைச் சுட்டும் வளர்ச்சியைக் காட்டுகிறார் மணிவாசகர். பெண்களின் சினை முட்டையினைப் 'பூ' எனக் குறித்தல் தமிழர் மரபு.

**"பூப்பின் புறப்பா டீராறு திங்களும்"** (தொல். பொருள். நூ.எ.185)

எனத் தொல்காப்பியம் பகர்கின்றது.

பிரிவிலும் 'பூப்பிடைப் பிரிவு' என்ற பிரிவு நிலையும் உண்டு.

பூப்புற்றதால் தலைவனுடன் கூட முடியாதே என்று தலைவியின் நெஞ்சம் துணுக்குற்றதை,

**“குக்கூ என்றது கோழி அதன்எதிர்**

**துட்கென் றன்றுஎன் தூய நெஞ்சம்**

**தோள்நோய் காதலர்ப் பிரிக்கும்**

**வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே”** (குறுந். பா.எ. 157)

என்றவாறு எடுத்தியம்புகிறது.

முழுவதும் வளர்ச்சியடையாமல் வளர்ந்து வரும் கருவைக் ‘காய்’ என்பது பேச்சு வழக்கு ஆகும்.

உயிர்களின் கருப்பையினுள் தோன்றும் சினை முட்டையின் தோற்றத்தை, ‘தாயினது செந்நீரில் குமிழி போன்ற பொருள் உண்டு. அப்பொருள் பூவைப்போல அரும்பி, மலர்ந்து கூம்பும்’ என்கிறது கருவியல். அந்த அறிவியலை வெளிப்படுத்துமாறு ‘அலர்’ எனத் திருவாசகம் சுட்டுகிறது.

ஏழாவது திங்களில் கருவானது நன்கு வளர்ச்சி அடைய வேண்டும்.

**“சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும் கூனும்**

**குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும்”** (புறம். பா.எ. 28)

இன்றிக் குழந்தை பிறத்தல் வேண்டும். ஆகவேதான் ஆறு திங்கள் கழிந்து ஏழாம் திங்கள் நடைபெறும்போது சீமந்தம், வளைகாப்பு முதலிய சடங்குகளைச் செய்கின்றனர்.

இத்திங்களில்தான் குழந்தை தாயின் தொப்புள்கொடி வழியாக உணவைப் பெறுகிறது. இச்சடங்கின்போது நெட்டையான, குட்டையான, பருமனான பலவகைப்பட்ட மனித உறவுகளைப் பார்க்கும்போது, குழந்தை பிறந்த பின் இவ்வகைப்பட்ட மனிதர்களைப் பார்க்கும் சூழலில் அச்சம் கொள்வது இல்லை. இல்லையெனில் குறிப்பிட்ட மக்களைப் பார்க்கும்போது அச்சம் கொண்டு அழுகை ஏற்படும். அதனால்தான் குழந்தை கருவிலிருக்கும்போது பார்த்த குறிப்பிட்ட உருவத்தோற்றத்தைப் பார்க்கும்போது மகிழ்வடைகிறது என்பது தற்கால உளவியலாளர்களின் கருத்தாகும்.

கருவின் இக்காலகட்டத்தில் (23 வாரங்களில்) கரு சூழ்ப்பை (Amnion) ஒரு திரை போன்று கருவினை மூடியிருக்கும். இத்திரை கருவினைக் குளிர், புவியீர்ப்பு, கேடு விளைவிக்கும் நுண்ணுயிர்கள் ஆகியவற்றிலிருந்து பாதுகாக்கும். இதில் மணிவாசகர் ஊரலர், தாழ்புவி முதலிய சொற்களின் வழி இறையருளால் பிழைக்க வேண்டும் என அறிவியல் கூறுகளைக் கொண்டு இறையியலைச் சுட்டுகிறார். இந்த இறையியலே மெய்யியல். மெய்யியலே உளவியல் என்பது அறிஞர்கள் கருத்தாகும்.

நன்கு வளர்ச்சி பெற்ற கரு, கருப்பையோடு அசைதல் எட்டாம் திங்களில் நடைபெறுகிறது. அம்மெய் வருத்தத்தினின்றும் குழவி பிழைத்து, குழந்தை வெளிவரச் செய்யும் முயற்சியினின்றும் பிழைத்தல் வேண்டும்.

இல்லற வாழ்க்கையினர் பெற வேண்டிய பேறுகளுள் அறிய வேண்டியவற்றை அறியும் நல்ல மக்களைப் பெறுதலே சிறந்த பேறாகும் என்பதனை,

**“பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**

**மக்கள்பேறு அல்ல பிற”** (குறள். 61)

என்று சுருங்கச் சொல்லியிருக்கிறார் திருவள்ளுவர்.

பெறுமவற்றுள் சிறப்புற்ற மக்கட்பேறு பத்தாம் திங்கள் இறுதியில் நிகழும். இதனை, இப்பாடலின் இறுதி அடிகளில் விளக்குகிறார். நாளமில்லாச் சுரப்பிகளின் செயற்பாட்டால் இக்கருப்பை சீராகச் சுருங்கத் தொடங்கும். அதனால் குழந்தை வெளிவருகிறது. இச்சூழலில் பல்வேறு துன்பங்களால் தாயும் சேயும் பிழைக்க வேண்டும். இதற்கு இறையியல் என்னும் மெய்யியல் துணை நிற்கிறது என இறைமையைக் குறிக்கிறார் மணிவாசகர். அங்கு உள்ளத்தின் வலிமை வெளிப்படுகிறது.

மேலும் திருவள்ளுவர் பிறரால் பழிக்கப்படாத நற்குணம் நிறைந்த மக்களைப் பெற்றால், அந்தப் பெற்றோரை ஏழு பிறவியிலும் துன்பங்கள் சேராது என்ற செய்தியினை,

**“எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்**

**பண்புடை மக்கள் பெறின்”** (குறள். 62)

என்றவாறு எடுத்தியம்புகிறார். எனவேதான் பேறுகள் எல்லாவற்றிலும் சிறந்தது நன்மக்கட்பேறு என்கிறார் வள்ளுவப்பெருந்தகை. நல்ல மக்கட்பேற்றினைப் பெற மரபு, சூழ்நிலை என்ற இரு காரணிகளும் இன்றியமையாததாகின்றன. மரபு என்பது மாற்ற இயலாத தன்மையது. ஆனால், “சூழ்நிலையைத் தகுந்தவாறு மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும். ஒருவனுடைய சூழ்நிலை என்பது அவன் பிறந்தது முதல் இறக்கும் வரை அவனைச் சுற்றியிருக்கும் பல்வேறு வகையான தூண்டல்களின் தொகுப்பாகும். அவ்வகை வளர்ச்சி அவனுக்குத்

தனது சூழ்நிலையிலிருந்து கிடைக்கின்ற தூண்டல்களின் தன்மையை ஒட்டியே அமைகிறது.” (நாகராஜன். கி. - க.உ. ப. 33) என்கின்றனர் உளவியலார்.

ஆகவேதான், சங்க மாந்தர்கள் சூலுற்ற பெண்டிர் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என அதற்குத் தக அமைந்தனர். தற்காலத்திலும் இப்பெண்டிருக்கு ஆரோக்கியமான ஊட்டச்சத்துள்ள உணவுகள், மகிழ்வான இசைவான சூழல், யோகா, நல்ல ஆளுமைப் பண்புகளைப் பெறச் சிறந்த நூல்கள், சொற்களைக் கேட்க, உளவியல் வழிகாட்டுதல்கள் ஆகியன மருத்துவமனைகளில் பரிந்துரைக்கப்படுகின்றன. இதற்குச் சங்க மாந்தர்களின் வாழ்வியல் நெறிகாட்டுதல்களே இன்றைய உளவியல் வழிகாட்டுதலுக்கு முதன்மைக் காரணமாக அமைகின்றன.

## பன்னிரு திங்கள்கள்:

இலக்கியங்கள் பேறுகாலத்தைப் பன்னிரு திங்கள்கள் எனச் சுட்டுகின்றன. குழந்தையைச் சூலுற்ற பெண் பன்னிரு திங்களும் தாங்கி இருத்தல் உண்டு என்ற செய்தியைக் குறுந்தொகை,

**“அம்ம வாழி தோழி காதலர்**
**இன்னே கண்டும் துறக்குவர் கொல்லோ**
**முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ”** (குறுந். பா.எ. 287)

என்ற வரிகளில் தெளிவாக்குகின்றது. இதன்வழி பன்னிரண்டு திங்கள்கள் தாய் குழந்தையைக் கருவாகச் சுமந்த செய்தியும் பெறப்படுகின்றது. கண்ணன் தாய் வயிற்றில் பன்னிரண்டு திங்கள்கள் கருவாக இருந்தான் என்பதனைப் பெரியாழ்வார்,

**“பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட அப்பாங்கினால்”**

(பெரியாழ்வார், ...............)

என்ற வரிகளால் உரைக்கின்றார்.

இலக்கியங்கள் பன்னிரு திங்கள் என்று சுட்டி இருப்பினும் அறிவியலும் உளவியல் வல்லுநர்களும் ஒவ்வொரு திங்களிலும் தெளிவான உடல் வளர்ச்சியினை விவரிக்கின்றனர்.

## வளர்ச்சி :

ஓர் உயிரியின் உருப்பெருக்கம் அல்லது அளவு அதிகரித்தலை ‘வளர்ச்சி’ (Growth) என்பர். ஒரு குழந்தை வளர்ச்சியடையும்போது அதன் உயரம், எடை, மொத்த கன பரிமாணம் ஆகியவை அதிகரிக்கின்றன. வளர்ச்சி என்பதன்கீழ் வரும் மாற்றங்களைப் புறவயத்தன்மையோடு உற்று நோக்கவும், அளவிடவும் முடியும். முன்னேற்றம் அல்லது மேம்பாடு என்பதன் ஓர் உட்கூறு வளர்ச்சியாகும்.

ஒவ்வொரு உயிரினத்தையும் அதன் வளர்ச்சியின் அடிப்படையில் பருவங்களாகப் பகுப்பர். அவ்வகையில் மனிதனின் வளர்ச்சி நிலைகளும் பல்வேறு பருவங்களாகப் பிரிக்கப்பட்டு உள்ளன. இலக்கியங்கள் பெண் குழந்தைக்கான பருவங்களை ஏழாகப் பிரித்துள்ளன. அவை,

- பேதை (5 - 7)
- பெதும்பை (8 - 11)
- மங்கை (12 - 13)
- மடந்தை (14 - 19)

- அரிவை (20 - 25)
- தெரிவை (26 - 32)
- பேரிளம்பெண் (33 - 40)

என்றவாறு வயதின் அடிப்படையில் பெண்டிருக்கான பருவங்கள் இலக்கியங்களில் வரையறுக்கப்பட்டுள்ளன.

**பேதைப் பருவமும் பெதும்பைப் பருவமும்:**

பேதையாக விளையாடிக் கொண்டிருந்த தலைவி, அடுத்த வளர்ச்சி நிலையான பெதும்பைப் பருவத்தினை அடைகின்றாள். இதனைச் செவிலி,

**"பேதை அல்லை மேதையங் குறுமகள்**

**பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்து"** (அகம். பா. எ. 7)

என்றவாறு பெதும்பைப் பருவத்தைச் சுட்டிக்காட்டி இனிமேல் வெளியில் எவ்விடத்தும் செல்ல வேண்டாம் என அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைகிறது. பெதும்பைப் பருவத்தைச் சுட்டி, பெதும்பைப் பருவத்திலும் பரத்தமை கொண்ட செய்தியை நற்றிணை எடுத்துரைக்கிறது. (நற். பா.எ. 90)

**அரிவை :**

அகநானூறு அரிவைப் பருவம் பற்றிக் கூறுகிறது. அரிவையை,

**"கவைக்கதிர் வரகின் சீறூர் ஆங்கண்**

**இல்வயின் அறீஇ மெல்லியல் அரிவை"** (அகம். பா.எ. 384)

என்று உரைக்கிறது.

## சிற்றிலக்கியங்கள் குறிப்பிடும் பருவங்கள்:

சிற்றிலக்கியங்களில் ஒன்றான பிள்ளைத்தமிழ் ஆடவர், பெண்டிர் இருவருக்குமான பொதுப்பருவங்கள், ஆடவருக்கான பருவங்கள், பெண்டிருக்கான பருவங்கள் எனத் தனியாகப் பிரித்துக் குறிப்பிட்டுள்ளது. அவை காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி என்ற ஏழு பருவங்களும் இருவருக்கும் உரிய பொதுப் பருவங்களாகவும் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்பன ஆடவருக்குரியதாகவும் அம்மானை, நீராடல், ஊசல் என்பன பெண்டிருக்குரியதாகவும் சுட்டப்பட்டுள்ளன.

## பொதுப்பருவங்கள் :

ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் சில பருவங்கள் பொதுவாக அமைவதால் இது பொதுப்பருவம் எனக் கூறப்படுகிறது.

- குழந்தை பிறந்த இரண்டு அல்லது மூன்றாவது மாதத்தில் காப்பிடப்பெறும். இது காப்புப் பருவம் எனப்படுகிறது.

- குழந்தை தனது ஐந்தாவது மாதத்தில் 'ங்க' என ஒலியெழுப்பும் பருவம் செங்கீரைப்பருவம் ஆகும்.

- தாலப்பருவம் என்பது கவனிக்கும் பருவம் ஆகும். தாய் தனது நாவினை ஆட்டிப்பாடும் (தால் + ஆட்டு) பாடல்களைக் கவனிக்கிறது. இது குழந்தையின் ஏழு மற்றும் எட்டாம் மாதத்தில் நிகழ்கிறது.

- குழந்தை தனது கையோடு கைசேர்த்துக் கொட்டும் சப்பாணிப்பருவம் ஒன்பதாவது மாதத்தில் நடைபெறுவதாகும்.

- குழந்தை தனது பதினோறாவது மாதத்தில் அன்பின் அறிகுறியாகத் தனது உதடுகளால் ஒரு வகை ஒலி உண்டாக்கும் இப்பருவம் முத்தப்பருவம் எனப்படுகிறது.

- அணிகள், உடைகள் அணிதலும், அடம் செய்து மறுத்தலும் குழந்தையின் பன்னிரண்டாவது மாதத்தில் நடைபெறும். இது வருகைப்பருவம் ஆகும்.

- அஃறிணைப் பொருட்களைத் தன்னோடு விளையாட அழைக்கும் பதினேழாவது மாதம் அம்புலிப் பருவம் என்று கூறப்படுகிறது.

இவ்வாறு ஒவ்வொரு வளர்ச்சிப் பருவத்திலும் இருபாலரின் செயல்பாடுகளும் அமைகின்றன.

**ஆடவருக்குண்டான வளர்ச்சிப் பருவங்கள் :**

- குழந்தையின் இரண்டாவது ஆண்டில் பாவனை விளையாட்டும் சிறு வீடு கட்டி விளையாடுதலும் நடைபெறும். இது சிற்றில் (சிறு + இல்) எனப்படுகிறது.

- சிறு பறை அடித்துக் கொண்டு மகிழும் பருவம் குழந்தையின் மூன்றாவது ஆண்டில் நடைபெறுகிறது.

- குழந்தையின் நான்காவது ஆண்டில் சிறு தேரினை உருட்டிக்கொண்டு நடந்து செல்வதால், இது சிறுதேர்ப் பருவம் எனக் கூறப்பட்டது.

**பெண்டிருக்குண்டான வளர்ச்சிப் பருவங்கள்:**

- அம்மானை என்பது பெண்டிர்க்குரிய ஒரு வகை விளையாட்டு. இது குழந்தையின் பதினேழாவது திங்களில் நிகழ்கிறது.

- நீராடி மகிழும் நீராடற் பருவம் குழந்தையின் பத்தொன்பதாவது திங்களில் நடைபெறுகிறது.

- ஊஞ்சல் கட்டி ஆடும் பருவம் ஊசற்பருவம் ஆகும். இது குழந்தையின் இருபத்தொன்பதாவது திங்களில் நிகழ்வதாகும்.

இலக்கியங்களில் பருவங்களே சுட்டப்பெற்றுள்ளன. அகவை (வயது) என்ற சொல் பிற்காலத்தில் கூறப்பட்டதாகும். தற்காலத்தில் உளவியல் வல்லுநர்கள் பருவங்களுக்குள்ளே வயதினையும் பிரித்துச் சுட்டியுள்ளனர்.

**உளவியலில் வளர்ச்சிப் பருவங்கள்:**

உயிரும் உணர்ச்சிகளும் உள்ள விலங்குகளைப் போலவே மனிதனும் வளர்ச்சியடையும் உயிரியாகும். பிறப்பு முதல் இறப்பு வரை தொடர்ச்சியாகப் பல மாறுதல்களை மனிதன் அடைந்து கொண்டே போகிறான். மனித வளர்ச்சியில் ஏற்படும் இத்தகைய மாறுதல்களை "வளர்ச்சிப் பருவங்கள்" அல்லது வளர்ச்சி நிலைகள் (Development Stages) என்று உளவியல் அறிஞர்கள் குறிப்பிடுவர்.

குழந்தையின் வளர்ச்சி நன்கு அமையவும், அதில் பயன் தரத்தக்க நல்ல மாற்றங்களும் திருப்பங்களும் தோன்றவும் உதவி செய்வது கற்றல் ஆகும். கற்றல் என்பது குழந்தை உருவான காலகட்டத்தில் இருந்து அமைகிறது. கற்றல் என்பது தானாகவும் நிகழும். கற்பித்தலின் வழியும் நிகழும். கற்றல் இன்றியும் வளர்ச்சி ஏற்படும். ஆனால், அவ்வளர்ச்சி மனிதனை மற்ற விலங்குகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதாக அமையாது.

மனித வளர்ச்சியில் அளவுப் பெருக்கம் மட்டுமன்றி, புதுப்பண்புகளும் தோன்றுகின்றன. மனிதனின் உடல் - உள்ள வளர்ச்சியின் ஒவ்வொரு கூறிலும் மரபு - சூழ்நிலை இவற்றின் தாக்கத்தை உணர முடிகிறது.

நாளமில்லாச் சுரப்பிகள், உண்ணும் உணவின் தன்மை, போதிய காற்றோட்டம், வெளிச்சம், சமுதாயப்பண்பாடு, நுண்ணறிவு, பால் சார்ந்த பண்புகள் ஆகியன யாவும் மனித வளர்ச்சியைப் பாதிக்கும் காரணிகள் ஆகும்.

வளர்ச்சி என்பது தொடர் நிகழ்வுகளின் தொகுப்பு ஆகும். இதில் திடீர் மாற்றங்களோ அல்லது மாற்றங்களே நிகழாத கால இடைவெளிகளோ இல்லை. ஆனால், வளர்ச்சியை நடைமுறையில் குறிப்பிட்ட சில நிலைகளாக அறிஞர்கள் பிரித்துள்ளனர். இவ்வளர்ச்சிப்படிகள் ஒன்றுடன் ஒன்று இணைந்தவை, நெருங்கிய தொடர்பு உடையவை. இவற்றைப் பிரித்துணர்வதுகூடச் சில சமயங்களில் இயலாததாகி விடும். எனினும் வளர்ச்சியைப் பருவங்களாகப் பிரித்து ஆராய்வதன் நோக்கம், வளர்ச்சி பற்றிய முழுமையான திட்டமான அறிவைப் பெறுவது ஆகும்.

வளர்ச்சி எனப்படுவது, 'வாழ்க்கை நிலையாமை' (Life Space) விரிவடைதலைக் குறிப்பதாகும். படிப்படியாகச் சுதந்திரத்துடனும் கட்டுப்பாட்டுடனும் செயற்படுதல் வளர்ச்சியின் அறிகுறி என்று 'ஆண்டர்சன்' என்பார் குறிப்பிடுகிறார். மனித வளர்ச்சியில் ஐந்துவித முன்னேற்றங்கள் காணப்படுகின்றன என்றும், இவை ஒன்றோடொன்று இணைந்தவை என்றும் ஆண்டர்சன் குறிப்பிடுகிறார்.

அ. புலன் உணர்ச்சிகளைத் தொகுத்தறிதலில் ஏற்படும் முன்னேற்றம்.

ஆ. நடத்தையின் இயல்புகளிலும் வகைகளிலும் தோன்றும் முன்னேற்றம்.

இ. செயற்படும் முறைகள் உயர்நிலைப்படுவதால் எழும் முன்னேற்றம்.

ஈ. இறந்தகால அனுபவங்களை மனதில் கொண்டு எதிர்காலத்திற்குத் திட்டமிடுவதால் தோன்றும் முன்னேற்றம்.

உ. நடத்தையில் சுயக்கட்டுப்பாடு இடம்பெறும் அளவில் முன்னேற்றம்.

இவை ஆண்டர்சன் குறிப்பிடும் வளர்ச்சி முன்னேற்ற நிலைகள் ஆகும்.

**வளர்ச்சிப் பருவங்கள் பற்றி சிக்மண்ட் ஃபிராய்டு, எரிக்சன் ஆகியோரது முடிவுகள்:**

மனித வளர்ச்சியைப் பாலுணர்வு வளர்ச்சியுடன் தொடர்புபடுத்தி உளப்பகுப்புக் கோட்பாட்டினரான சிக்மண்ட் பிராய்டு ஐந்து நிலைகளைக் குறிப்பிடுவார். பாலுணர்ச்சி நிறைவு செய்யப்படுதலில் வாய், கழிவுறுப்பு, பாலுறுப்பு ஆகியன அடுத்தடுத்து வளர்ச்சியில் பங்குபெறுகின்றன. பின் பாலுணர்ச்சி மறைந்து காணப்படும் நிலையும், இறுதியாகப் பிற பால் துணைகொண்டு நிறைவு பெறும் முதிர்ச்சி பெற்ற நிலையும் காணப்படுகின்றது என்று (Oral, Anal, Phalic, Latent and Genetial Stages) இவர் கருதுகிறார்.

ஒவ்வொரு நிலையுடன் இணைந்த சில மனப்பான்மைகளையும் நடத்தை முறைகளையும் சிக்மண்ட் பிராய்டு சுட்டிக்காட்டுகிறார். சிலபோது

பல்வேறு காரணங்களால் கீழ்நிலையிலேயே ஒருவனது நடத்தை தொடர்ந்து இருந்து, வயது அதிகரிப்பினும் முதிர்ச்சி குன்றிய நடத்தை எழக்கூடும்.

எரிக்சன் (E.H. Erikson) என்பார் மனித வளர்ச்சியில் பாலுணர்ச்சி போன்ற உடல்தேவை நிறைவுகளைவிட சமூகப் பிரச்சனைகளுக்கே அதிக முக்கியத்துவம் அளித்து, எட்டு வளர்ச்சி நிலைகளைக் (Psycho - Social Stages) குறிப்பிட்டுள்ளார். குழந்தை வளர வளர, அதன் சமூகத்தொடர்பு விரிவும் சிக்கலும் அடைகிறது. இதன் விளைவாக, அது குறிப்பிட்ட சமுதாயப் பிரச்சனைகளைத் தீர்க்க வேண்டிய கட்டாயம் எழுகிறது. எட்டு வளர்ச்சி நிலைகளிலும் எந்தெந்த சமூக நிலைமைகள் தனிச் செல்வாக்குப் பெற்று உள்ளன என்னென்ன மனப்பிரச்சனைகள் எழக்கூடும் என்பதனையும் எரிக்சன் விவரிக்கிறார்.

## எரிக்சன் விவரித்துள்ள நிலைகள் (அ) பருவங்கள் :

**1. பிறப்பு முதல் ஓராண்டு வரை:**

தாய் மற்றும் செவிலித்தாயின் கட்டுப்பாட்டில் குழந்தை வளர்கிறது. நம்பிக்கை வைத்தலும் நம்பிக்கை இன்மையும் காணப்படுகிறது.

**2. இரண்டாம் ஆண்டு :**

பெற்றோருடன் இருத்தலும், சுதந்திரமாக இயங்குதலும் வெட்கப்படவும் செய்கிறது.

**3. 3 – 5–ஆவது ஆண்டுகள் :**

ஆதாரக் குடும்பச்சூழலில் வளர்கிறது. தானே முற்பட்டுச் செயலாற்ற விரும்புகிறது. தவறான செயற்பாட்டிற்குக் குற்ற உணர்வும் வெளிப்படுகிறது.

**4. 6–ஆம் ஆண்டு முதல் பாலுறுப்புகள் முதிர்ச்சி பெறும் வரை :**

சுற்றுப்புறம் மற்றும் பள்ளியைச் சார்ந்த சூழலில் வளர்கிறது. உற்சாகமாக உழைக்கிறது. சில சமயங்களில் தாழ்வு உணர்வும் வெளிப்படுகிறது.

**5. குமரப்பருவம் :**

ஒப்பார் குழுவுடனும், பிற குழுக்கள் விரும்பும் தலைமையாகவும் செயல்படுகிறது. தன்னைப் பற்றிய நிலையான கருத்தும் சில சமயங்களில் தெளிவற்ற குழப்பமான கருத்தும் ஏற்படுகிறது.

**6. முன்முதிர் பருவம் :**

நண்பர்கள், பால் தொடர்பு உறுப்பினர்கள், தன்னுடன் ஒத்துழைக்கும் மற்றும் போட்டியிடும் குழுக்களுடன் பொழுதுபோக்குகிறது. நெருக்கமான உறவும், ஒருமைப்பாட்டு உணர்வும் சில நேரங்களில் தனிப்பட்ட நிலைமையும் தோன்றுகிறது.

**7. நடுமுதிர் பருவம் :**

பொறுப்புக்களையும் குடும்பக் கடமைகளையும் தன்னுடன் பகிர்ந்து கொள்வோரிடம் செல்வாக்குக் காணப்படுகிறது. தாராள மனப்பான்மையும், தன்னுள் ஒடுங்கிச் செயற்படுதலும் நடக்கிறது.

**8. பின்முதிர் பருவம் :**

நேர்மையான அல்லது முழுமையான நம்பிக்கை இழப்புக் காணப்படுகிறது.

எரிக்சன் அவர்கள் எட்டு வளர்ச்சி நிலைகளையம், அவ்வளர்ச்சி நிலைகளின் மனித இயல்புகளையும் விவரித்துள்ளார். இத்துடன் கோல்பர்க் (Kohlberg) என்பவர் ஒழுக்க வளர்ச்சி நிலைகளையும், ஹர்லாக் என்பவர் இயல்பான வளர்ச்சி நிலைகளையும் குறிப்பிட்டுள்ளனர்.

## முக்கிய வளர்ச்சிப் பருவங்கள் (Important Development Stages):

ஒவ்வொரு பருவத்திலும் காணப்படும் சில முக்கிய வளர்ச்சி நிலைகளின் அடிப்படையில் மனித வாழ்வு இரு நிலைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

### I பிறப்புக்கு முந்தைய நிலை (Prenatal Stage)

பிறப்புக்கு முந்தைய நிலை மூன்று நிலைகளாகப் பகுக்கப்படுகிறது. அவை,

அ. முளைநிலை (Germinal Period) - முதல் இரண்டு வாரங்கள் வரை.

ஆ. பிண்ட நிலை (Embryonic Stage) - இரண்டு முதல் எட்டு வாரங்கள் வரை.

இ. முதுசூல் நிலை (Foetal Stage) - ஒன்பது வாரம் முதல் பிறப்பு வரை.

முளைநிலையில் கருமுட்டை அளவில் பெரிதாகி 1/8 அங்குல அளவுள்ள ஓர் உயிரணுத் தொகுப்பாகிறது. இதற்குப்பின் சூல்கொண்ட எட்டாவது வாரம் வரையிலுள்ள பிண்ட நிலையில் பல்வேறு உறுப்புகள் உருப்பெறுகின்றன. இந்த நிலையின் இறுதியில் இதயம் துடிக்கத்

தொடங்குகிறது. எட்டாவது வாரத்திலிருந்து குழவி பிறக்கும் வரையிலுள்ள முதுசூல் நிலையில் குழந்தையின் முழு உருவ வளர்ச்சி சிறுகச் சிறுக ஏற்படுகின்றது.

**II பிறப்புக்குப் பிந்தைய நிலைகள் (Postnatal Stages) :**

1. குழவிப்பருவம் (Infancy) - பிறப்பு முதல் 3 வயது வரை.
2. குழந்தைப் பருவம்/ பிள்ளைப்பருவம் -

   முன் குழந்தைப் பருவம் (3 முதல் (Childhood) 6 வயது வரை).

   பின் குழந்தைப் பருவம் (7 முதல் 10 வயது வரை).
3. குமரப்பருவம் (Adolesence) -

   முன்குமரப்பருவம் (11 முதல் 13 வயது வரை)

   குமரப்பருவம் (13 முதல் 15 வயது வரை).

   பின் குமரப் பருவம் (16 முதல் 19 வயது வரை).
4. முதிர் பருவம் (Adulthood) -

   முன் முதிர் பருவம் (20 முதல் 29 வயது வரை).

   பின்முதிர் பருவம் (அ) நடு வயது. (30 முதல் 50 வயது வரை).
5. தளர்வுப் பருவம் - 50 முதல் 60 வயது வரை.
6. முதுமைப் பருவம் - 60 வயதிலிருந்து இறப்பு வரை.

இவ்வளர்ச்சிப் பருவங்களிலும் தனியாள் வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு குழந்தையும் குறிப்பிட்ட வயதிற்கான பருவத்தில் இருந்தாக வேண்டும் என்று எதிர்பார்க்க இயலாது. இந்த ஆறு பருவங்களில் முக்கியமாகக் கவனம் செலுத்த வேண்டியது முதல் மூன்று பருவங்களில் ஆகும்.

## உடல் வளர்ச்சி :

உடல் வளர்ச்சியில் உடற்கூறு வளர்ச்சி (Anotomical Growth), உடலியல் வளர்ச்சி (Physiological Growth) என இரு கூறுகள் உள்ளன. எலும்புக்கூட்டின் வளர்ச்சி, எலும்பின் தன்மையில் வளர்ச்சி, உடலின் உயரம், எடை ஆகியவற்றில் மாற்றம் முதலியவை உடற்கூறு வளர்ச்சியாகும். உடல் எலும்புகளின் முதிர்ச்சியும், நிலையான பற்கள் முளைப்பதும் உடற்கூறு வளர்ச்சியைக் காட்டுவதாகக் கூறப்படுகின்றன. உடலில் பல்வேறு தொழில் பகுதிகளான இரத்த ஓட்டப்பகுதி, நரம்பு மண்டலம், சுவாச மண்டலம், தசைகளின் தொகுதி முதலியவற்றில் எழும் மாற்றங்கள் உடலியல் வளர்ச்சி எனக் கூறப்படுகின்றன.

உடல் வளர்ச்சியில் ஆடவருக்கும் பெண்டிருக்கும் சிற்சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆடவர்கள் வலிமை மிக்கவர்களாகவும் பெண்டிர் மென்மை மிக்கவர்களாகவும் விளங்குவர். இலக்கியங்களில் ‘கவின்’, ‘நலம்’ எனும் இரு சொற்கள் தோற்றச்சிறப்பை விளக்கப் பொதுவாக வழங்கப்பட்ட சொற்களாகும்.

**“பெருங்கவின்”** (ஐங். பா. எ. - 20)

**“மாமைக் கவின்”** (குறுந். பா.எ. - 27).

**“தொல்கவின்”** (நற். பா.எ. - 14, 350)

**“இருங்கவின்”** (அகம். பா.எ. - 185)

**“பூவின்கவின்”** (கலி. பா.எ. - 86)

**“ஆய்நலம்”** (ஐங். பா.எ. - 275, 318, 330)

**“எழில் நலம்”** (நற். பா.எ. - 13)

**“இள நலம்”** (அகம். பா.எ. - 239)

**“விறல் நலம்”** (கலி. பா.எ. - 3)

உடல் உடலியல் வளர்ச்சியால் ஏற்பட்ட தோற்றச்சிறப்பை இவ்வரிகள் எடுத்தியம்புகின்றன. உடல் வளர்ச்சி அடைய அடைய மேனி அழகு பெறுவதனைக் குறிக்க இளந்தளிர் உவமையாக எடுத்தாளப்பட்டது.

**“மாந்தளிரன்ன நல்மாமேனி”** (குறுந். பா.எ. - 147)

**“தளிரேர் மேனி”** (நற். பா.எ. - 251)

மேலும் இளமைப்பருவத்தில் பற்கள் ஒளி மிகுந்திருந்தமையால், அவை “வாலெயிறு” எனப்பட்டன. (ஐங். பா.எ. - 241; குறுந். பா.எ. - 2, 337; கலி. பா.எ. - 95) பற்கள் முத்துக்களைப்போல வெண்மையுடன் இருந்தன. அவை வரிசையாக, ஒழுங்காக அமைந்தமையின் “செறியெயிறு” (குறுந். பா.எ. - 286; நற். பா.எ. - 120; அகம் பா.எ. - 193; கலி.

பா.எ. - 15, 102) எனக் குறிக்கப்பட்டன. பற்கள் கூர்மையாக இருந்தமையும் குறிப்பிடப்பெற்றுள்ளன. (நற். பா.எ. - 120)

தோள்கள் "பணைத்தோள்" (ஐங். பா.எ. - 291; குறுந். பா.எ. 338; நற். பா.எ. - 93; 193; அகம். பா.எ. - 132; கலி. பா.எ. 132; 143) எனவும் சுட்டப்பட்டன. நல்ல வடிவத்துடன் கூடிய தோள்கள் பெண்களின் அழகினை மேம்படுத்துவன. அவை மென்மையுடனும் விளங்கியமையால், "மென்றோள்" (ஐங். பா.எ. -230; குறுந். பா.எ. - 90; நற். பா.எ. 225; அகம். பா.எ. - 132; கலி. பா.எ. - 132, 243) எனப்பட்டன. மூங்கிலைப்போல வலிமையுடையதாய்த் தோள்கள் திகழ்ந்தன. நல்ல உணவுப் பழக்கமும் வளமான சுற்றுச்சூழலும் குழந்தைகளின் நல்ல உடல் வளர்ச்சியினைத் தீர்மானித்தன.

## உடல் இயக்கங்களின் வளர்ச்சி : (Motor Development)

உலகில் படைக்கப்படும் அனைத்துச் செல்வங்களிலும் மழலைச் செல்வமே அனைத்திலும் இணையற்ற செல்வமாகக் குறிப்பிடப்படுகிறது. இது குடும்பத்திற்கும் உற்றார், உறவினருக்கும் அளவற்ற இன்பத்தை நல்க வல்லது. குழந்தைப் பேற்றினால் பெறும் இன்பங்களைத் திருவள்ளுவர் மக்கட்பேறு என்ற அதிகாரத்தில் தெளிவாக எடுத்தியம்புகிறார். அவ்வதிகாரத்தில்,

**"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற"** (குறள். 61)

என்றவாறு மக்கட்பேற்றின் மகத்துவத்தை உணர்த்துகிறார்.

இல்வாழ்வார் பெறவேண்டிய பேறுகளுள், அறிய வேண்டியவற்றை அறியும் நல்ல மக்களைப் பெறுதலே சிறந்த பேறாகும்.

பாண்டியன் அறிவுடை நம்பி பாடிய புறநானூற்றுப்பாடல் மக்கட்பேற்றால் பெறும் தூய இன்பத்தை ஈடு இணையற்ற முறையில் எடுத்துக்கூறுகிறது.

**படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப்பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்**
**குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,**
**இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே.** (புறம். பா.எ - 188)

இப்பாடலில் குழந்தையின் உடலியக்க வளர்ச்சி எளிமையாக விளக்கப்பட்டுள்ளது. படைக்கப்படும் எல்லாச் செல்வங்களையும் பெற்றுப் பலரோடு கூடி உண்ணும் உடைமை நிரம்பிய செல்வம் கொண்டோராயினும், தத்தித் தத்தி நடந்து, பிஞ்சுக்கையை நீட்டித் தட்டிலே உள்ளதைத் தரையில் இட்டும், மேலும் மேலும் பிசைந்தும் வாயால் கௌவியும், கையால் துழாவியும் நெய் கலந்த சோற்றை உடம்பெல்லாம் சிதறியும் அக்குழந்தை நடமாடுகிறது. இவ்வாறு அறிவை இன்பத்தால் பயக்கும் மக்கள் இல்லாதவருக்குத் தம் வாழ்நாளில் பயனாகிய முடிக்கப்படும் பொருள் இல்லை என்கிறது இப்பாடல்.

## கையாளும் திறன்கள் : (Manipulative skills)

தத்தி, நடந்து செயல்படும்போது உடலின் பல்வேறு தசைகள்

துரிதமாகச் செயல்படுகின்றன. இவ்வாறு உடலியக்க வளர்ச்சியில் குழந்தைகளது கை கால்கள், உடலின் பல்வேறு தசைகள் முதலியன வலுப்பெற்று இணைந்த வகையில் இவை திட்டமாகவும், வேகமாகவும் செயற்படுகின்றன. இவற்றை உளவியலறிஞர்கள் “கையாளும் திறன்கள்” என்றும் குறிப்பிடுகின்றனர்.

## கண் – கை இணைந்து செயல்படல் : (Eye - Hand Co-Ordination)

உடலியக்கங்களின் வளர்ச்சி புவி ஈர்ப்புக்கு (Gravity) எதிரான போராட்டமாகும். இதற்கு அடிப்படையாக அமைவது கண் - கை இணைந்து செயல்படுதல் ஆகும்.

(நாகராஜன்.கி., க. உ. ப.எ. 51)

குழந்தையின் கண்ணும் கையும் இணைந்து செயற்படுவது குழந்தை பிறப்பிற்குப்பின் தாமாகச் செயற்படும்போது நிகழும் நிகழ்வாகும். குழந்தை இயல்பாக விளையாடிக் கொண்டிருக்கிறது. அப்போது அழகிய சிறுதேரையும் இழுத்துக்கொண்டு உருட்டிக்கொண்டிருக்கிறது. தேரில் கட்டப்பட்ட மணியைக் கையால் இழுத்துக்கொண்டே, காலால் நடந்து கொண்டு முன்னோக்கிய வழியைப் பார்த்துக்கொண்டே தத்தித் தத்திச் செல்கிறது. ஆகவே, உடல் வளர்ச்சியோடு இணைந்த வகையில் குழந்தையின் புலன்களது வளர்ச்சியும் நிகழ்கின்றது.

## உடல் வளர்ச்சியும் கட்டுப்பாடும்:

பேதையாக விளையாடிக் கொண்டிருந்த பெண் குழந்தை, இளமைப் பருவத்து அழகிய பெண்ணாக வளர்ந்தாள். அவள் வளர்ச்சியைச் சுட்டிக்காட்டி, இனி வெளியே செல்லல் வேண்டா எனச் செவிலி

அறிவுறுத்தினாள். இதனை,

**"முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின**
**தலைமுடி சான்ற தண்தழை யுடையை**
**அலமரல் ஆயமொடு யாங்கணும் படாஅல்**
**மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய**
**காப்பும் பூண்டிசின் கடையும் போகலை**
**பேதை அல்லை மேதையங் குறுமகள்**
**பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை புறத்து"** (அகம். பா.எ. 7)

என்ற பாடல் அறிவுறுத்துகிறது.

குமரப்பருவத்தில் (Adolesent Period) தலைவி வெளியே சென்று மலர் கொய்தல், நீராடல் முதலிய செயல்களில் ஈடுபட்டாள். பின்னர், உடல் வளர்ச்சி கண்டு குழந்தைப்பருவ நிகழ்ச்சிகள் கட்டுப்படுத்தப்பட்டன. இவ்வாறு கட்டுப்படுத்தப்பட்டதால், மகளிருக்கு உடல், உள்ளத்தில் ஏற்படும் பல இன்னல்கள் தடுக்கப்பட்டன.

தற்காலத்தில் இளையோர்களுக்குச் சிறு பருவத்திலேயே உடல் வளர்ச்சி, உள வளர்ச்சி மற்றும் உள மாறுபாடு பற்றிய செய்திகளை முறையாக அறிவுறுத்தப்படாததால், பல இன்னல்கள் மகளிருக்கும் இளையோருக்கும் ஏற்பட்டு வருகின்றன. ஆகவே, அனைவருக்கும் முறையான விழிப்புணர்வு ஏற்படுத்தப்பட்டு சங்ககால வாழ்வியல் நெறிமுறைகள் அனைவருக்கும் கற்பிக்கப்பட்டுக் காக்கப்பட வேண்டும்.

உடலியக்கச் செயல்களான கண்களைச் சுழற்றுதல், தலையைத் திருப்புதல், அமர்தல், எழுந்திருத்தல், நடத்தல், ஓடுதல், உயரமாக ஏறுதல்

முதலியவற்றிலும் புலனியக்கச் செயல்களான பொருட்களை நேர்த்தியாகக் கையாளுதல், கண் - கை இணக்கச் செயல்பாடு, இயக்கங்களைத் துல்லியமாகக் கட்டுப்படுத்துதல், விரைவான கை, கால் அசைவுகள், இலக்கை நோக்குதல் முதலியவற்றிலும் குழந்தைப் பருவத்தில் ஏற்படும் வளர்ச்சி அன்றாட வாழ்வுப் பணிகளைச் செய்திடவும், அறிவு வளர்ச்சிக்கும், மொழி வளர்ச்சிக்கும் மிகவும் தேவைப்படுகிறது. குழந்தைப் பருவத்தில் உடல் இயக்கச் செயல்கள் மூலமே, வெளி உலகத் தொடர்பு பெறப்படுவதால் அவை பின்பு ஏற்படும் மனவளர்ச்சி, மனவெழுச்சி வளர்ச்சி, சமூக வளர்ச்சி ஆகியவற்றிற்கு ஏதுவாக அமைகிறது.

உடல் வளர்ச்சியில் குழந்தைகளுக்கிடையே தனியாள் வேறுபாடுகள் காணப்பட்டாலும், உடல் வளர்ச்சியில் பெருத்த பின்னடைவு ஏற்பட அந்நிலையில் அவ்வாறான குழந்தைகட்குச் சிறப்புப் பயிற்சியும் நந்நெறியினையும் சங்ககால மாந்தர்கள் அளித்துள்ளனர். தாய், தந்தையும் செவிலி, தோழி முதலிய உற்றாரும், குருமார்களும் குழந்தைகளிடத்துப் பொருத்தப்பாடுடைய நடத்தையை (Well adjustment behaviour) மேம்படுத்தியுள்ளமை சங்ககால மாந்தர்களின் வாழ்வியல் விழுமியங்களை வெளிப்படுத்துகிறது.

முறையான உடல் வளர்ச்சியும், உடலியக்கச் செயல்களில் தேர்ச்சியும், குழந்தை தன் அன்றாட வாழ்க்கைப் பணிகளைத் திறம்படச் செய்திட உதவும் என்பதனை உணர்ந்த இன்றைய உளவியலாளர்கள் ‘குழந்தை உளவியல்’ என்ற தனிப்பிரிவினைத் தோற்றுவித்துப் பல நாடுகளிலும் பல்வேறு வகையான ஆய்வுகளைச் செய்து வருகின்றனர்.

**அன்பும் அறிவும் ஊட்டுவதில் சங்க மாந்தர் :**

குழந்தைக்கு அழகும் அறிவும் ஊட்டுவதில் சங்க மகளிர் மிகச் சிறந்தவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர். அழகூட்டுவதிலும், அறிவூட்டுவதிலும் இயற்கையான முறையில் பல நுட்பமான செயல்பாடுகளைக் கையாண்டிருக்கின்றனர். தன்னையும் பேணிக் குழந்தையையும் காத்த சங்க மகளிர் குறித்து,

**“ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணிப்**
**பசுநெய் கூர்ந்த மென்மை யாக்கை”** (நற். பா. 370)

என்ற வரிகளில் மெலிந்த உடலை மேன்மைப்படுத்திய செய்தி வெளிப்படுகிறது. குழந்தைப்பேற்றினால் உடல் மெலியும். ஆகவே, எண்ணெய் தேய்த்துக் குளிக்கும்போது வெண்சிறு கடுகைப் பயன்படுத்தியமை இப்பாடலடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும், தாயானவள் குழந்தையை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுகிறாள். பின்பு நறுமணம் கமழும் புகை இட்டவுடன் மைகொண்டு கண்களை அழகு செய்கிறாள். அவற்றால் அவள் ஆடை அழுக்கடைந்தது. மேலும் குழந்தையைத் தழுவவும் பால் சுரக்கிறது. அதனால் அவளுடைய ஆடை மேலும் அழுக்கடைகிறது. அவளது தோள்களில் ஈன்று அணிமைத்தாய முடைநாற்றம் வீசியது என்பதனை,

**“நெய்யும் குய்யும் ஆடி மையொடு**
**மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்**
**திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்**
**புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே”** (நற். பா.எ. 380)

என்ற வரிகள் தாய்மையின் இயல்பினை எடுத்தியம்புகிறது. ‘சுவர் இருந்தால்தான் சித்திரம் வரைய இயலும்’ என்பது சான்றோர் முதுமொழி.

அதுபோல உடலும் உள்ளமும் நலம் பெற்றால்தான் வாழ்வில் வளம்பெற முடியும் என்ற கருத்து இங்கு உணர்த்தப்பெறுகிறது.

குழந்தையுடன் கூடிய தலைமக்களின் அன்பையும் அரவணைப்பையும் இனிய முறையில் விளக்குகிறது இப்பாடல்.

**“புதல்வன் கவையினன் தந்தை மென்மொழிப்**
**புதல்வன் தாயோ இருவரும் கவையினள்**
**இனிதுமன்ற அவர் கிடக்கை”** (ஐங். பா.எ. - 409)

தலைவன் தன் குழந்தையைத் தழுவிக்கொண்டு படுக்கையில் இருந்தான். இதனைக் கண்ட தலைவி, ஒருசேர இருவரின் மேலும் அன்பு கொண்டாள். அந்த இனிய காட்சியைச் செவிலித்தாய் கண்டு இன்புற்றமையை விவரிக்கிறது இப்பாடல்.

## பரத்தையும், குழந்தையும் :

பரத்தை பெற்ற குழந்தையைப் பற்றிய செய்திகள் இல்லை. இருப்பினும் அவள் குழந்தை மீது ஆசை உடையவள். அதனால், தலைவியின் குழந்தையை அணைத்துக் கொண்டாள் என்ற செய்தி,

**“யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனை**
**தேர் வழங்கு தெருவில்**
**கூர்எயிற்று அரிவை குறுகினள் யாவரும்**
**காணுநர் இன்மையின்**
.......... ............ ............. ............
**வருகமாள என் உயிர்”** (அகம். பா.எ. - 16)

என்பதன்வழி விளங்கலாகிறது. தாயைத்தவிர, ஏனையோரும் குழந்தையின்மீது அன்பும் அரவணைப்பும் கொண்டிருந்தனர் என்பது இங்கு விளக்கம் பெறுகிறது.

குழந்தைக்கு அன்பினை ஊட்டி அழகுணர்ச்சியைப் பெருக்கி, அறிவினைப் புகட்டுவதில் சங்க மாந்தர்க்கு இணை யாரும் இல்லை என்பதனை மேற்காண் செய்திகள் தெளிவுபடுத்துகின்றன.

குழந்தையின் துரிதமான உடல் வளர்ச்சிக்கு முதலில் தாய்ப்பாலும், அது அன்போடும் அரவணைப்போடும் கொடுக்கப்படுதலும் ஆகும். மேலும் சத்துமிக்க உணவும் சுகாதாரமான சூழ்நிலையும் போதுமான உறக்கமும் நிறைவான புலன் தூண்டல்களும் உடல் இயக்கச் செயல்களும் மிகவும் இன்றியமையாதவை என்பது குழந்தை உளவியலாரின் முடிவாகும்.

உடலும் உள்ளமும் மேன்மை பெற்றிருந்தால்தான் ஒரு மனிதன் மேம்பாடு அடைந்து, அதன்வழி தன்னைச் சார்ந்தோரையும் சமூகத்தையும் வளமாக்க முடியும். உடல் நலம் பெறாவிடின் உளநலம் பெற முடியாது. உடல் நலமும் உளநலனும் குன்றியிருப்பின் அன்போடும் அறிவோடும் குழந்தையை வளர்க்க முடியாது என்பதை உணர்ந்த சங்க மாந்தர்கள் வழிநின்று நலம் பேண வேண்டும் என்பது விளக்கமடைகிறது.

### விளையாட்டும் கற்றல் உளவியலும் :

சங்க மாந்தர்கள் குழந்தையுடன் பொழுது போக்கிய செய்தி சங்க இலக்கியத்தில் பலவிடங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது. குழந்தை அழகிய சிறுதேரை உருட்டி விளையாடிக் கொண்டிருக்கிறது. தேரில் கட்டப்பட்ட கயிற்றை இழுத்துக் கொண்டு குறுநடை பயில்கிறது. இவ்வாறு சிறுதேரை உருட்டி மகிழ்ந்து விளையாடும்போது குழந்தை நடைபயிலக் கற்றுக் கொள்கிறது. சிறுதேரை உருட்டி நடைபயிலும்போது கையால் தேரைத் தள்ளிக்கொண்டு, முன்னோக்கிப் பார்த்த வண்ணம் குழந்தை நடக்கிறது. அப்போது கண்ணும் கையும் இணைந்து செயல்படுகிறது. இதனைக் கண் - கை இணக்கச் செயல்பாடு என்கிறது உளவியல்.

குழந்தை சிறுதேரை உருட்டி நடக்க முற்படும்போது அக்குழந்தை அணிந்திருந்த ஆபரணங்கள் பல்வேறு வகையான இனிய ஓசைகளை எழுப்பின. இவ்வோசைகளும் சுற்றுச்சூழலில் எழுந்த பலவகையான ஓசைகளும் பல்வேறு ஒலி வேறுபாடுடைய ஓசைகளைக் கற்றுக்கொள்ளச் செய்கின்றன.

மேலும், குழந்தை விளையாடும்பொழுது தனது தந்தையை எண்ணிக்கொண்டு, "அத்தா, அத்தா" என்று சொல்லிக் கொண்டிருக்கிறது. அப்போது தாயானவள், தான் சொல்லிக் கொடுத்ததைக் குழந்தை சொல்லக் கேட்டு இன்புற்றாள் என்ற செய்தி,

**"கிளர்மணி ஆர்ப்ப ஆர்ப்பச் சாய்ச்சா அய்ச் செல்லும்**
**தளர்நடை காண்டல் இனிது; மற்று இன்னாதே**
**உளம்என்னா நுந்தைமாட்டு எவ்வம் உழப்பார்**
**வளைநெகிழ்பு யாம்காணுங் கால்**
**ஐயகாமரு நோக்கினை அத்தா அத்தா, என்னும்நின்**
**தேமொழி கேட்டல் இனிது.** (கலி. பா.எ. - 80)

என்ற வரிகளின்வழி வெளிப்படுகிறது. இங்கு குழந்தை மொழியினைக் கற்றுக் கொள்கிறது. இவ்வாறு ஒவ்வொரு செயல்பாட்டிலும் குழந்தை ஒவ்வொன்றனைக் கற்றுக் கொள்கிறது.

## முறைப்பெயரிட்டு அழைக்கக் கற்றல் :

மகளிர் தங்கள் குழந்தையைப் பலவிதமாக அழகு செய்துள்ளனர். அவற்றுள் கலித்தொகைப் பாடலடிகள், தலைவி தன் மகனை அழகு செய்யும் முறையை,

**“காலவை சுடுபொன் வளைஇய ஈரமை சுற்றொடு**
**பொடியழற் புறம்தந்த நெவ்வுறு கிண்கிணி**
**உடுத்தவை கைவினைப் பொலிந்த காசமை பொலங்காழ் மேல்**
**மையில் செந்துகிர்க் கோவை அவற்றின் மேல்**
**தைஇய பூந்துகில் ஐதுகழல் ஒருதிரை**
........... ................. ............. ......... (கலி. பா.எ. 85)

என்றவாறு எடுத்தியம்புகிறது.

மகனின் சிறுகால்களில் பொன்னாலான கிண்கிணிக் காப்பினை இட்டாள். மார்பில் தங்கச் சங்கிலியையும் பவள வடத்தையும் அணிவித்தாள். அவற்றின்மேல் நுண்ணிய பூந்துகில் விளங்கியது. கைகளில் நண்டின் கண்ணோடு கூடிய கைகளின் வடிவத்தில் ஒளிமிக்க வளையல்களும் எறியா வாளும் எற்றி மழுவும் இடையில் செறியக் கட்டினாள். முன்றுவட முத்துமாலையும் வைர மாலையும் தலையில் அணி செய்தன. குழந்தையின் சிறு கால்களும் மெல் விரல்களும் சிறுதேர் இழுத்தமையால் வருந்தின. இத்தகைய அணிமணிகளுடன் குறுநடை நடந்து கொண்டே பாலைக் குடித்தான். இடையிடையே மறுத்துச் சிணுங்கினான்.

‘எங்கே உன் தந்தைக்காக ஒருவாய் குடி பார்க்கலாம்’ என்று சொல்லி ஒருவாய் பாலூட்டினாள். இப்படிக் கொஞ்சிக் கொண்டே செவிலித் தாய்க்காக ஒருமுறை என்று சொல்லிப் பாலூட்டினாள். இப்படியே தனக்காக ஒருமுறை என்று சொல்லி மீண்டும் பாலூட்டினாள். அடம் பிடிக்கும் குழந்தை, முதலில் சினத்தை உண்டுபண்ணினாலும் அக்குழந்தை செய்யும் குறும்பு விளையாடல்கள் எல்லோருக்கும் இன்பம் அளிப்பவை. இவ்வாறு விளையாட்டினிடையே பாலையும் ஊட்டி உற்றார், உறவினர்களை முறைப்பெயரிட்டு அழைக்கவும் கற்றுக்கொடுத்தாள் சங்கத்தாய்.

சான்றோரை உடையதும் நல்ல வளமிக்கதுமாகிய நல்லியக்கோடனுடைய ஆமூர். அங்குள்ள மகளானவள் நும்மை முறையாக அழைத்து, வெள்ளிய அரிசியால் ஆக்கிய சோற்றினை நண்டினது கலவையோடு தந்த செய்தியினை,

**"தொடிக்கை மகடூஉ மகமுறை தடுப்ப",**

**"அவைப்புமாண் அரிசி அமலைவெண் சோறு**

**கவைத்தாள் அலவன் கலவையொடு"** (சிறு. பா.அ. 192, 194-195)

என்றவாறு உணர்த்துகிறது. மேலும் நல்ல விருந்தினரைப் பெற்ற மகிழ்ச்சியில் குறமகள், தத்தம் பிள்ளைகளைக் கொண்டு முறைகூவி அழைத்து நும்மைப் போற்றுவாள் என்பதனை,

**"அகமலி உவகை ஆர்வமொடு அளைஇ**

**மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்"**

(கூத்தர். பா.அ. 184, 185)

என்ற மலைபடுகடாம் வரிகளிலும், சங்ககால மகளிர் தங்கள் குழந்தைகட்கு முறைப்பெயரிட்டு அழைக்கக் கற்றுக் கொடுத்தமை தெளிவாகிறது. சங்க மகளிர் குழந்தையின் ஒவ்வொரு வளர்ச்சியிலும் ஒவ்வொன்றனைக் கற்றுக் கொடுத்து அக்குழந்தை மழலைமொழி பேசுவதைக் கண்டும் கேட்டும் உளமகிழ்ந்தனர்.

## நிலவைக் கற்றல் :

வானத்தில் நிலா தோன்றுகிறது. நிலவைப் பார்த்த தாய், அந்நிலவைத் தன் குழந்தையோடு விளையாட வருமாறு அழைக்கிறாள். அப்போது நிலவைப் பற்றிய சிறப்பியல்புகளை எடுத்துரைக்கிறாள். இவ்வாறு ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாக எளிமையாக விளையாட்டின் வழி குழந்தை கற்றுக் கொள்கிறது என்ற செய்தியினை,

**“முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்**
**பொன்னுடைத் தாலி யென்மகன் ஏற்றி**
**வருகுவை யாயின் தருகுவென் பாலெனா**
**விலங்கமர்க் கண்ணன் விரல்விளி பயிற்றி”** (அகம். பா.எ. 79)

எனும் அகப்பாடலடிகள் எடுத்தியம்புகின்றன.

குழந்தை மனமகிழ்வுடன் விளையாடியதும் அவ்விளையாட்டால் பல்வேறு செயல்பாடுகளைக் கண்டும் கேட்டும் பல செய்திகளைக் கற்றுக் கொள்கிறது. இந்நிகழ்வுகள்வழி விளையாட்டு வழிக்கற்றல் என்ற உளவியல் கூறு வெளிப்படுகிறது. கல்வியைக் கற்பதற்கும் விளையாட்டு வழிக்கற்றல் முறை உதவுகிறது. இளஞ்சிறார்களுக்கு விளையாட்டு முறையில் கல்வி கற்றுக் கொடுப்பது எளிமையான செயல்பாடு. ஆகையால் விளையாட்டு முறைக்கல்விக் கூடங்களும் பல இடங்களில் தோற்றம் பெற்றுள்ளன.

விளையாட்டு முறையில் கல்வி கற்பிப்பதால் குழந்தைகள் எளிமையான புரிதலுடன் தெளிவாகக் கற்றுக் கொள்கின்றனர் என்பதனைக் கல்வியாளர்களும் மெய்ப்பித்துள்ளனர். விளையாட்டுமுறைக் கல்வியில் மாண்டிசோரி அம்மையார் ஏற்படுத்திய மாண்டிசோரிக் கல்விமுறை பல இடங்களில் செயல்பட்டு வருகிறது.

## மன வளர்ச்சியும் கற்றலும் :

மன வளர்ச்சி என்பது அறிதிறன் வளர்ச்சி (Cognitive development) என்றும் கூறப்படுகிறது. மன வளர்ச்சி என்பதன் மூலம் அறிதிறன் வளர்ச்சிக் கூறுகளான கவனித்தல், புலன்காட்சி, கண்டறிதல், கற்பனை செய்தல், சிந்தித்தல், தீர்மானித்தல், ஆய்ந்தறிதல் முதலியவற்றில் ஏற்படும் வளர்ச்சியையும் அதனால் விளையும் பொருளறிவுப் பெருக்கத்தையும் குறிப்பிடுகிறது.

தொடக்கத்தில் தன் உடலின் உள்ளிருந்து எழும் தூண்டல்களுக்கு மட்டுமே செயல்படும் சிறுகுழந்தை, விரைவிலேயே 'கவனித்தல், புலன்காட்சித் திறன்' முதலியவற்றின் வளர்ச்சி தொடங்கியவுடன் வெளியுலகத் தூண்டல்களையும் உணரத் தொடங்குகிறது. அதன் சாயல் திறன் வளர்ச்சி பெறுவதாலும் பழைய அனுபவங்களின் நினைவாற்றலாலும் அறிதிறன் வளர்ச்சியும் அதன் விளைவாகப் பொருளறிவுப் பெருக்கமும் ஏற்படுகின்றன.

இரண்டு வயதில் நினைவாற்றல் ஏற்படத் தொடங்குகிறது. மூன்றாம் வயதில் கற்பனைத்திறன் உருவாகி, விளையாட்டுகளில் பிரதிபலிக்கத் தொடங்குகிறது. இந்நிலையில் தாய்மொழி வழியே அறிவு வளர்ச்சிக்கான வாய்ப்புகள் மிக விரைவாக அதிகரிக்கின்றன. சிந்திக்க, மதிப்பிட, எளிய பிரச்சனைகளுக்குத் தீர்வு காண உதவும் திறன்களும் வளர்ச்சி பெற்று அறிவுப் பெருக்கத்திற்கு உதவுகின்றன. புலனியக்கச் சிந்தனை நிலையிலிருந்து, பருப்பொருள் நிலைக்குச் சிந்திக்கும் ஆற்றல் உயர்ந்து, கருத்தியல் நிலைக்கு முன்னேற்றமடைகிறது. இவ்வாறு சிந்திக்கும் ஆற்றல் படிப்படியாக முன்னேற்றமடைகிறது என்பதைப் 'பியாஜே'யும், 'புரூணரும்' தங்கள் கோட்பாடுகள் வழி விளக்கியுள்ளனர். ஆக்கத்திறன் விரிசிந்தனைக்கு வழிகோலுகிறது. புதிய கோணங்களில் சிந்திக்கவும் புதுமைகளைப் படைக்கவும் உதவுகிறது.

## பியாஜேயின் அறிதல் வளர்ச்சிப் படிநிலைக் கோட்பாடு :

புலன் உறுப்புகள் மூலம் பெறப்படும் செய்திகளைத் தொகுத்தல், சுருக்கியமைத்தல், விரிவு படுத்தல், நினைவுகூர்தல் என்ற உளச்செயல்களின் அடிப்படையில் ஆராய்ந்து அவைபற்றி அறிந்து கொள்ளுதல் அறிதிறன்

எனப்படும். "வெளி உலகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவும் உளச்செயல்களே அறிதிறன் செயல்கள்" எனப்படும் என்பது கெய்சா என்ற அறிஞரின் கருத்தாகும். (கி. நாகராஜன், க.உ. ப. - 189)

இத்தகைய அறிதிறன் செயல்கள் அனைத்தும் நமது புலன்காட்சி, கவனம், சிந்தனை, ஆராய்ந்தறிதல் சிக்கல்களுக்குத் தீர்வு காணல், நினைவு ஆகிய செயல்களுக்கு அடிப்படையாக அமைகின்றன.

## அறிதிறன் வளர்ச்சி :

சுவிட்சர்லாந்து நாட்டு அறிஞரான ஜீன் பியாஜே என்பாரது கருத்துப்படி, அறிதிறன் வளர்ச்சியானது தொடர்ச்சியானதாக மட்டுமின்றி, வரிசையாக அமைந்த பல படிநிலைகளில் நிகழ்கிறது. அறிதிறன் வளர்ச்சியில் இவ்வொவ்வொரு வளர்ச்சி நிலையினையும் குழந்தை கடக்க வேண்டும்.

## ஒருங்கமைதலும் இணக்கமும் : (Organisation and Adaptation)

மனிதனிடம் இயல்பாகவே இரு அடிப்படைப் போக்குகள் இருப்பதாக பியாஜே கூறுகிறார். இவை ஒருங்கமைத்தல், இணங்குதல் என்பன. இவ்விரு போக்குகளுக்கு இடையே சமநிலைப்படுத்தும் செயல்முறை உதவுகிறது. ஒருங்கமைத்தல், இணங்குதல் ஆகியன சேர்ந்து பெறப்படும் அனுபவங்களைப் பிரித்து உணர்ந்தும், தொகுத்துணர்ந்தும் அறிவினைப் பெறக் குழந்தைக்கு உதவுகின்றன. இணங்குதலில் தன்வயப்படுத்துதல், பொருத்துதல் ஆகியன காணப்படுகின்றன.

குழந்தை வளர்ச்சி அடைய அடைய, சூழ்நிலையினின்றும் அது பெறும் அனுபவங்கள் ஒருங்கிணைக்கப்படுதலும், இணக்கம் பெறுதலும் அந்தக் குழந்தையின் அப்போதைய வளர்ச்சி நிலையைப் பொறுத்தது. ஆனால்,

எந்த நேரத்திலும் அறிதல் வளர்ச்சியின் அடிப்படை ஒருங்கமைத்தலும் இணங்குதலும் ஆகும். இவற்றை மாறாச் செயல்கூறுகள் என்று கூறுகிறார் பியாஜே.

**புலனியக்க நிலை : (Sensory Motor Stage)**

குழந்தை பல்வேறு பொருட்களின் பண்புகளைத் தனது புலன்களின் வழியேயும், உடலியக்கங்களின் மூலமாகவும் உணர்ந்து புரிந்து கொள்கிறது.

புலன்களினின்றும் மறைக்கப்பட்டவை மறக்கப்படுகின்றன. பிறந்து பத்துத் திங்கள்கள் சென்றபின் பொருள்களின் நிலைத்த தன்மை (Object Permanence) பற்றிக் குழந்தை அறிகிறது. இயல்பூக்க நடத்தையிலிருந்து நோக்க அடிப்படையிலான நடத்தைக்குக் குழந்தை மாறுகிறது. எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் (Curiosity) முயன்று தவறிக் கற்றல் மூலம் சூழ்நிலையைப் புரிந்து கொள்ள முயல்தலும் இந்நிலையில் காணப்படுகிறது. தான் வேறு, தன்னைச் சுற்றியுள்ள பொருட்கள் வேறு என்று புரிந்து கொள்வதன் மூலம் தற்கருத்துத் தோன்றத் தொடங்குகிறது.

எனவேதான் சங்க மாந்தர்கள் குழந்தைகட்குச் சுற்றுப்புறத்திலுள்ள ஒவ்வொன்றனையும் குழந்தைகளிடம் சுட்டிக்காட்டி, அவற்றிடம் பேசுவதுபோல் அதன் சிறப்பு இயல்புகளை எடுத்துக்கூறியமை பற்றி இங்கு அறியலாகின்றது.

புலன் இயக்க நிலையில் குழந்தையின் செயல்பாடு, நுண்ணறிவு, பார்த்தல், பற்றுதல், உறிஞ்சுதல் முதலிய செய்திறன்கள் மூலம் தோன்றத் தொடங்கியிருப்பதால், தன் உடனடிச் சூழ்நிலைகளையும், அதில் உள்ள பொருட்களைக் கையாள்வதிலும் தேர்ச்சி பெறுகிறது.

## மரபுப் பண்புகள் :

தந்தை, பாட்டன் பெயர்களை மக்களுக்கிடும் வழக்கம் தொன்றுதொட்டு வருவது என்பதைச் சங்கப்பாடல்களால் அறிய முடிகிறது. அதுபோலவே, முன்னோர்களின் மரபுப்பண்புகளும் குழந்தைகட்குக் கடத்தப்படுகின்றன. இச்செய்தியினை,

**“தான்தன்**
**முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற**
**புதல்வன்”** (கலி. பா.எ. 79)

**“மேதக்க எந்தை பெயரனை யாங்கொள்வேன்”** (ஐங். பா.எ. 81)

மகன் தந்தை பெயரை மட்டுமல்லாமல், தந்தையின் பண்புகளையும் கொண்டவன். கலித்தொகைத் தலைவி மகனைத் தந்தையுடன் ஒப்பிடுகிறாள். தந்தையின் அறஞ்சாராப் பண்புகளைப் பின்பற்றாமல், மகன் நல்ல பண்புகளைப் பின்பற்ற வேண்டுமென அவள் விரும்பினாள். தன் கணவனின் சாயல் மகனிடம் விளங்குதலைத் தாய் என்ற நிலையில் கண்டு பெருமிதமடைகிறாள். இதனை,

**“செம்மால்! வனப்பெல்லாம் நுந்தையை ஒப்பினும் நுந்தை**
**நிலைப்பாலுன் ஒத்த குறிஎன்வாய்க் கேட்டு ஒத்து**
**கன்றிய தெவ்வர்க் கடந்த களம்கொள்ளும்**
**வென்று மாட்டுஒத்தி பெரும!”** (கலி. பா.எ. 86)

என்ற அடிகள் வழி அறிய இயலுகிறது. இது குழந்தைக்குக் கூறும் அறிவுரையோடு நில்லாமல், தந்தைக்கு விடும் எச்சரிக்கையாகவும் அமைகிறது.

இதற்குப் பொருத்தமான விதியைத் தொல்காப்பியமும்,

**“தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்**
**அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்”**

(தொல். கற்பியல். நூ.எ.- 6)

என்ற நூற்பாவில் குறிப்பிடுகின்றார். இவ்வாறு முன்னோர் மரபுப்பண்புகள் அடுத்த தலைமுறையினருக்குக் கடத்தப்படும் என்பதனை சங்கச் செய்திகள் உணர்த்துகின்றன.

## மரபுப் பண்புகளின் தாக்கம் :

மரபுப் பண்புகள் கடத்தப்படுதலில் சில மரபுப் பண்புகளை வரையறுத்துள்ளனர் உளவியலார். ஒரு குழந்தை மரபுக் காரணிகளால் தீர்மானிக்கப்பட்ட குறிப்பிட்ட சில திறன்களையும், பண்புகளையும் பெற்றுப் பிறந்தாலும், அத்திறன்கள் ஒளிர்விடச் சாதகமான சூழ்நிலை தேவை. மரபின் செல்வாக்கும் மரபின் பங்கும் குழந்தை பிறந்த உடனேயே முடிந்து விடுகிறது. எனவே, மரபின் பங்கு சிறிய எல்லைக்குள்ளே அமைகிறது. இருப்பினும் மரபுப் பண்புகளே ஒருவரின் வளர்ச்சிப் பருவத்தில் ஏற்படக்கூடிய வளர்ச்சிகளுக்கு வித்தாக அமைகிறது.

உயிரியல் மரபுக்கூறுகள் பெற்றோர்களிடமிருந்து குழந்தைகளுக்கு “ஜீன்கள்” வாயிலாகத் தானாகவே கடத்தப்படுகின்றன. ஆனால், சமூக மரபு என்பது ஒரு குறிப்பிட்ட சமூகச் சூழலில் வாழ்ந்து கற்றுக்கொள்வதால் மட்டுமே பெற முடியும். ஒரு குழந்தையின் சமூக மரபு என்பது அக்குழந்தை பிறந்து வளர்ந்த சமுகச் சூழலைக் குறிக்கின்றது. குழந்தை பிறந்து சமூகச் சூழலைத் தனதாக்கிக் கொள்ளும் முறைக்குச் “சமூக நெறிப்படுத்துதல்” (Socialisation) என்று பெயர். எனவேதான், சங்கத்

தாய்மார்களும் சங்க மாந்தர்களும் குழந்தையின் ஒவ்வொரு நிலையிலும் மனிதர்களின் பண்புகளையும் பொருட்களையும் சிறப்பு இயல்புகளையும் விளக்கியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

**முடிவுகள் :**

சங்க மாந்தரின் வாழ்வியலில் குழந்தை வளர்ப்பியலில் கையாளப்பட்ட பெரும்பான்மையான செயல்பாடுகள் குழந்தை உளவியலின் பல்வேறு நிலைகளில் பொருந்திக் காணப்படுகின்றன.

- குழந்தை வளர்ப்பில் சங்க மாந்தரின் இயல்பான நடத்தையும் அறிவாண்மைச் செயல்பாடுகளும் குழந்தை உளவியலின் முக்கியக்கூறாக அமைந்துள்ளன.
- குழந்தையின் இருப்பும் வளர்ச்சியும் சுமையாக இல்லாமல் தாய், தந்தையர் மட்டுமன்றி, மற்றைய மாந்தர்கள் அனைவரும் குழந்தையை வளமாகவே கருதி மன நலமுடன் வாழ்ந்தனர்.
- குழந்தை வளர்ப்பின் ஒவ்வொரு செயல்பாடும் காரண காரியத்துடனே செயல்படுத்தப்பட்டன. இதில் பல அறிவியல் சிந்தனைகளும் உளவியல் கொள்கைகளும் இடம் பெற்றிருக்கின்றன.
- ஒவ்வொன்றனையும் கற்றுக்கொள்வது குழந்தையின் உளவளர்ச்சி என்றும் அறிவு வளர்ச்சி என்றும் உளவியலறிஞர் வகைப்படுத்தியுள்ளனர். சங்க மாந்தர் இதனை இயல்பாகவே கடைப்பிடித்து வந்துள்ளனர்.

## இயல் – 4

# சங்க மாந்தரின் நுண்ணறிவும் ஆக்கத்திறனும்

மனிதனின் நடத்தைக்கு அடிப்படையாக அமைந்திருக்கும் சிறப்பான உள்ளச்சக்திகளில் நுண்ணறிவுத் திறனும் ஒன்றாகும். நுண்ணறிவுத்திறன் சிறப்பாக அமைய உடலும், உள்ளமும் நலமுற்றிருத்தல் அவசியம். சங்க மாந்தரிடத்தில் உடல்வன்மை சிறந்திருந்தது. இன்றைய மனிதரிடத்தில் நுண்ணறிவு பக்குவமடைந்துள்ளது. நுண்ணறிவு, பரிணாமத்தின் சின்னம் என்றும் கருதப்படுகிறது. சங்க மாந்தர்கள் உடல்வன்மை, நுண்ணறிவு, ஆக்கத்திறன், ஆளுமை என்று எதனையும் தனித்தனியாகக் கருதாமல் அனைத்தையும் ஒரு கூறாகவே கருதி வாழ்ந்தனர். மனிதர்கள் விலங்குகளிடமிருந்து பல்வேறு வகைகளில் மாறுபட்டு மேம்பாட்டுடன் திகழ்வதற்கும், தனித்தன்மைகளுடன் விளங்குவதற்கும் அடிப்படைக்காரணம் நுண்ணறிவும் அதனால் வெளிப்படும் ஆக்கத்திறனும் ஆகும். நுண்ணறிவு இல்லையெனில் ஒருவனிடத்துச் சிறந்த ஆளுமைப்பண்பு வெளிப்படுவதில்லை. புதியன புனையும் ஆக்கத்திறனும் தோன்றுவதில்லை. இருப்பினும் சங்க மாந்தர்கள் பல்வேறு சூழல்களில் பல்வேறு நடத்தைகளின் மூலம் வெளிப்படுத்திய செயல்பாடுகள் அவர்களை நுண்ணறிவும் ஆக்கத்திறனும் உடையவர்களாகக் காட்டியுள்ளன. இதனால் அவர்களது ஆளுமை சிறந்திருக்கிறது. சங்க மாந்தரிடத்து வெளிப்பட்ட இவ்வியல்புகள் யாவும் இயல்பாகவே அவர்களது நடத்தையில் வெளிப்பட்டவை. இவ்வியல்புகளைப் பெற இன்று மக்கள் தனித்தனிப்

பயிற்சி பெற்று வருகின்றனர். சங்க மாந்தரிடத்து இருந்த நுண்ணறிவு, ஆக்கத்திறன் செயல்பாடுகளின் அடிப்படையில் உளவியலரால் கூறப்பட்ட நுண்ணறிவு, ஆக்கத்திறனை விவரிப்பதாக இவ்வியல் அமைகிறது.

## நுண்ணறிவு:

நுண்ணறிவினை 'உள்ளதன் நுணுக்கம்' என்றும் கூறுவர். ஒருவரின் எடை, உயரம், கற்றல் திறன், கேட்டல் திறன், பார்த்தல் திறன் ஆகியவற்றைப் போன்று நுண்ணறிவும் ஒரு பண்பாகும். ஒருவரின் நடத்தையின் மூலம் நுண்ணறிவினை அளந்தறிய முடியாது. ஒருவர் வெளிப்படுத்தும் நடத்தைகளிலிருந்தே நுண்ணறிவைக் கண்டறிய இயலும். வெஸ்லர் என்பவரின் வரையறையின்படி, நுண்ணறிவு என்பது, "நோக்கத்தோடு செயல்படுவதும், பகுத்தறிவோடு சிந்திப்பதும், சூழ்நிலையைத் திறமையோடு சமாளிப்பதுமான இணைந்த கூட்டுச் செயலாற்றலாகும். (கலைச்செல்வி, வெ.மணிவண்ணன், மா வ.அ.ப, ப117)

மேலும், ஆல்பிரட் பீனே என்பவர், "புரிந்துகொள்ளல், புதுமை புனைதல், தொடங்கிய செயலைத் தொடர்ந்து முடித்தல், தனது நடத்தையிலுள்ள குறைபாடுகளைத் தானே உணர்தல் முதலிய கூறுகள் நுண்ணறிவினுள் அடங்கியுள்ளன என்கிறார். (...... Advanced General Psychology, P-148)

நுண்ணறிவு என்பதனை இலக்கியங்கள் அறிவாண்மை என்ற சொல்லால் குறிக்கின்றன. 'தானம், புத்தி, உணர்வு என்றும் ஆண்மை என்பது ஆளுமைத் தன்மை என்றும் (Tamil Lexicon, Vol-1, P-222-225)

தமிழ் லெக்சிகன் பொருள் கூறுகிறது. ஆகவே, அறிவாண்மை என்பதற்கு நுணுகிய அதாவது உயர்நிலை அறிவினைக் கொண்டு ஆளும் தன்மை என்ற பொருள் அமைகிறது.

## நுண்ணறிவின் வகைப்பாடுகள்:

சங்க மாந்தர்கள் நுண்ணறிவு என்ற ஒன்றையே தனியாக வகைப்படுத்தவில்லை. ஆனால், உளவியலர் நுண்ணறிவினை ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாகப் பிரித்துள்ளனர். அமெரிக்க உளவியலாளர்களான தார்ண்டைக் ஹொவர்டு கார்டனர், ஜாக்மேயர், பீட்டர் சலோவே முதலியோர் நுண்ணறிவு பலவகைப்பட்டது என்று வலியுறுத்துகின்றனர்.

## தார்ண்டைக்கின் வகைப்பாடு:

தார்ண்டைக் என்னும் அறிஞர் சமூக நுண்ணறிவு, பொறிசார்ந்த நுண்ணறிவு, கருத்தியல் நுண்ணறிவு என்ற மூன்று வகை இயல்புகளில் ஏதேனும் ஒன்றினையாவது பெற்றிருக்க வேண்டும் என்கிறார் (நாகராஜன் கி.கல்வி உளவியல், ப - 316)

### அ. சமூக நுண்ணறிவு :

சமூக நுண்ணறிவு என்பது பிறரைப்புரிந்து கொண்டு செயலாற்றுதல் ஆகும். சமூக நுண்ணறிவுமிக்கவர்கள் எல்லோரையும் அரவணைத்துச் செல்லும் திறன் மிகுந்தவர்களாக இருப்பர். மிக எளிதாக எல்லோரையும் தன்பால் ஈர்க்கும் திறன் கொண்டு விளங்குவர்.

கொடைத்தன்மையும், ஆற்றலும் மிக்கவர் கோப்பெருஞ்சோழன். இம்மன்னன் தன்குடிகள் அனைவரையும் அரவணைத்துச் செல்பவன். இவன்பால் ஈடுபாடு கொண்டு புலவர்களும், கலைஞர்களும் வந்து பரிசில் பெற்றுச் செல்வர். கோப்பெருஞ்சோழனை நேரில் காணாமலேயே இம்மன்னன் மீது ஒரு பெரும்புலவர் நட்புக் கொண்டிருந்தார். மன்னனும் அவ்வாறே நட்புக் கொண்டிருந்தான். மன்னன் வடக்கிருக்கும்போது பிசிராந்தையாருக்கும் ஓரிடம் விட்டிருந்தான். இதனை,

**'தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்**
**பிசிரோ னென்பவென் னுயிரோம் புநனே**
**செல்வக் காலை நிற்பினும்**
**அல்லற் காலை நில்லலன் மன்னே** (புறம் பா.எ.215)

என்றும் மேலும்

**'இசை மரபாக நட்புக் கந்தாக**
**இனையதோர் காலை யீங்கு வருதல்**
**வருவ னென்ற கோனது பெருமையும்**
**அதுபழு தின்றி வந்தவன் அறிவும்**
**வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே'** (புறம், பா.எ217)

என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையர் நட்பு வெளிப்படுத்தப்பட்டதோடு இல்லாமல், இம்மன்னனின் அரவணைத்துச் செல்லும் பண்பும், பிசிராந்தையார் வருவார் என்ற அறிவுடன் காத்திருந்தமையும் வெளிப்படுகிறது. இவன் கொடை வளத்தால் எல்லோரையும் தன்பால் ஈர்க்கும் திறன் கொண்டிருந்தமையும் அறிய

முடிகிறது. இத்தகைய தன்மைகள் இம்மன்னனின் சமூக நுண்ணறிவினைப் புலப்படுத்துகின்றன.

கடையெழு வள்ளல்களும் மக்களின் மனங்களைப் புரிந்து செயலாற்றியவர்கள். தன்னுடைய கொடைத்தன்மையால் அனைவரையும் அரவணைத்து, மிக எளிதாகத் தன்பால் ஈர்க்கும் திறனும் கொண்டு விளங்கியிருந்தனர்.

**பேகன் :**

மழைகண்ட இடத்தில் பெய்தல் போலப் பேகன் தன்னை நாடிவந்த அனைவருக்கும் இரக்கவுணர்வால் உதவி செய்வான் இவ்வள்ளல், என்பார் பெருஞ்சித்திரனார் எனும் புலவர். ஆயின் அவனுக்குக் கொடையில் உள்ள அறியாமை போரில் இல்லை. அவன் போரில் தெளிந்த அறிவுடன் பணிபுரிவான் என்று கூறி அவனது கொடைப்பண்பைப் பாராட்டியுள்ளார்.

**‘வானம் வாய்த்த வளமலைக் காவஅன்**
**கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய**
**அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்**
**பெருங்கல் நாடன் பேகனும்’** (சிறு . பாஆ 84 - 87)

என்ற வரிகள் பேகனின் வள்ளல் தன்மையை வெளிப்படுத்துகிறது.

**வள்ளல் பாரி :**

பாரி என்ற வள்ளல் பறம்புமலைக்கு அரசன். முல்லைக்கொடி ஒன்று படரக் கொம்பின்றித் தவித்துக் கொண்டிருந்தது. இதனைக் கண்ட பாரி, தன் பெரிய தேரினை முல்லைக்கு கொடுத்தான் என்பதனை,

**‘கரும்புண**

**நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்**

**சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**

**பிறங்கு வெள்ளருவி வீழும் சாரல்**

**பறம்பின் கோமான் பாரியும்”** (சிறு, பா.அ 88 - 91)

என்ற அடிகளால் அறியமுடிகிறது. எவ்வுயிரும் துன்புறக்கூடாது என்று இரக்கம் காட்டிய வள்ளல் பாரி பிற உயிர்களின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு செயலாற்றிய நுண்ணறிவினை அறிய முடிகிறது.

## வள்ளல் காரி :

மலையமான் காரி, திருமுடிக்காரி எனப் பெயர் பெற்றான். இவன் சிறந்த போர்வீரன். உலகம் வியக்கும்படி ஒலிக்கின்ற மணிகளையும், வெண்மையான பிடரி மயிரினையும் உடைய குதிரைகளையும் ஏனைய செல்வங்களையும் இனிய மொழிகளுடன் இரவலர்க்கு இல்லையெனாது ஈந்தவன். நெருப்பைப்போல் சுடர் விடுகின்ற, பகைவர்கள் கண்டு அஞ்சுகின்ற நெடிய வேற்படையை உடையவன். வீரக்கழலையும், தோள் வளையத்தையும் அணிந்தவன். நீண்ட கரங்களையும் உடையவன். இத்தன்மையை,

**‘கறங்கு மணி**

**வால் உளைப் புரவியொடு வையகம் மருள**

**ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த**

**அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்**

**கழல் தொடித் தடக்கைக் காரியும்’** (சிறு, பா.அ. 91- 95)

என்ற அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. நீண்ட கரங்களைக் கொண்டு இல்லையெனாது இரவலர்க்கு ஈந்த வள்ளல் காரியின் சமூக நுண்ணறிவு இப்பாடலடிகளில் அறிய முடிகிறது.

**வள்ளல் ஆய் :**

ஆய் என்ற வள்ளல் பொதியின் மலைநாட்டை ஆண்டுவந்தான். ஒளிபொருந்திய நீல நிறமுள்ள நச்சரவம் ஒன்று தனக்குக் கொடுத்த ஓர் அரிய ஆடையைக் கல்லாலின் கீழ் அமர்ந்த சிவபெருமானுக்கு அளித்தான். இரவலர்கள்பால் என்றும் அன்புடைய நன்மொழிகளையே நவில்பவன் என்பதனை

**'நிழல்திகழ்**
**நீலநாகம் நல்கிய கலிங்கம்**
**ஆலமர் செல்வர்க்கு அமர்ந்தனன் கொடுத்த**
**சாவந்த தாங்கிய சாந்துயுலர் திணிதோள்**
**ஆர்வ நன்மொழி ஆயும்'** (சிறு, பா.அ. 95 - 99)

என்ற பாடலடிகளில் வள்ளல் ஆயின் அரவணைத்துச் செல்லும் திறனும், நன்மொழிகளை நவின்று அனைவரையும் தன்பால் ஈர்க்கும் தன்மையும், இவ்வள்ளலின் சமூக நுண்ணறிவினை உணர்த்துகின்றன.

**வள்ளல் அதியமான் :**

தகடூரை ஆண்ட அதியமான் நெடுமான் அஞ்சியின் முன்னோர் தேவர்களைப் போற்றி வழிபட்டு வேள்விகள் செய்தவர்கள். கரும்பைத் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வந்தவர்கள். பெரிய மலைச்சாரலில் பொருந்தி இருந்த நெல்லி மரத்தில் அமிழ்தத்தைப் போன்ற சாவாத்தன்மையுடைய

இனிய நெல்லிக்கனி கிடைத்தது. அதனைத்தான் உண்ணாமல் நீண்டநாள் வாழ்தற் பொருட்டு ஔவைக்கு அளித்தான். பெரிய படைகளைக் கொண்டு வீரத்திலும் சிறந்தவனாக இருந்தமையை

**'மால்வரைக்**

**கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி**

**அமிழ்துவிளை தீம்கனி ஔவைக்கு ஈந்த**

**உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**

**அரவக்கடல் தானை அதிகனும்'** (சிறு, பா.அ. 99 - 103)

என்ற சிறுபாணாற்றுப்படை வரிகள் அதிகனின் கொடைத்தன்மையையும், வீரத்தையும் எடுத்தியம்புகின்றன. மேலும், தன்னைவிட, ஔவைப்பிராட்டியினால் உலகிற்கு அதிக நன்மை பயக்கும் என்று எண்ணிச் செயலாற்றிய பாங்கு அதிகனின் சமூக நுண்ணறிவினைக் குறிப்பிடுகிறது.

## வள்ளல் நள்ளி :

வள்ளல் நள்ளி தன்னிடத்துள்ள பொருளை என்றும் மறைக்காதவன். தன்பால் அன்பு காட்டுவோர் அனைவரும் மகிழும்படிச் செய்தவன். வறியோர்கள் வகையறிந்து வாழ்தற்பொருட்டுத் தன்னுடைய செல்வங்கள் அனைத்தையும் கொடுத்தவன். போர்முறையில் வெற்றி பெற்ற ஆற்றலுடையவன்.

**'கரவாது**

**நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம்**

**முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்**

**துளிமழை பொழியும் வளிதுஞ்ச நெடுங்கோட்டு**

**நளிமணல் நாடன் நள்ளியும்'** (சிறு, பா.அ 103 - 107)

என்ற அடிகள் வறியோர்கள் வகையறிந்து, அவர்களை வாழ வைக்கும் பொருட்டு, அரவணைத்துச் சென்ற பாங்குடையவன் என்பதில் நள்ளியின் சமூக நுண்ணறிவு புலனாகிறது.

## வள்ளல் ஓரி :

வள்ளல் ஓரி கொல்லிமலை நாட்டிற்குத் தலைவன் ஆவான். இந்நாட்டைக் கூத்தாடுவோருக்குப் பரிசிலாகக் கொடுத்தவன். காரி என்னும் குதிரையை உடையவன் என்பதனை

**'நளிசினை**

**நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்**

**குறும் பொறை நன்னாடு கோடியர்க்கீந்த**

**காரிக் குதிரைக் காரியொடு மலைந்த**

**ஓரிக் குதிரை ஓரியும்'** (சிறு. பா.அ. 107 - 111)

என்றவாறு அறிய இயலுகிறது. தன்னலம் கருதாது பிறர்நலம் பேணிக்காத்தமை வள்ளல் ஓரியின் திறன்மிக்க பண்பினை எடுத்துரைக்கிறது.

இந்த ஏழு வள்ளல்கள் மட்டுமல்லாமல் நல்லியக்கோடன், கரிகாலன், இளந்திரையன், நன்னன் சேய் நன்னன் முதலிய பலரும் கொடைத்தன்மையிலும் ஆட்;சியிலும் சிறந்து விளங்கினர்.

இவர்கள் மக்களின் நிலைமையைப் புரிந்து செயல்பட்ட திறனும், அத்திறனால் அனைவரையும் ஈர்த்தமையும், அவர்களை அன்புடன் அரவணைத்துச் சென்ற பான்மையும் இவ்வள்ளல்களின் சமூகம் சார்ந்த நுண்ணறிவினை வெளிப்படுத்தியுள்ளன.

**ஆ) பொறிசார்ந்த நுண்ணறிவு :**

பல்வேறு கருவிகளை எளிதாகவும், திறமையாகவும் கையாளும் திறனையும், கருவிகளை உருவாக்கி (அல்லது) வடிவமைத்து இயக்கிப் பழுதுபார்க்கும் திறன்களையும் பெற்றுத் திகழ்வதே இவ்வகை நுண்ணறிவு ஆகும். (நாகராஜன் கி, க.உ., ப316).

சங்க மாந்தர்கள் தங்களது தொழிலுக்கேற்றவாறு கருவிகளை தயாரித்தும், பழுதுபார்த்தும், இயக்கியும் வந்துள்ளனர் என்பது அவர்கள் செய்த தொழிலின் அடிப்படையில் அறியமுடிகிறது.

**பயிர்த்தொழில் :**

மனித வாழ்விற்கு அடிப்படையானது உணவு. ஒவ்வொருவரது பெருமைக்கும், ஏனைச் சிறுமைக்கும் அவரவரது கருமமே கட்டளைக் கல்லாய் அமையும். ஒருவர் சிறந்த பண்பைப் பெற அடிப்படையாய் இருக்க வேண்டியது வறுமையின்மை. உணவு இன்றேல் பண்பாடும் இல்லை. பழம் பெருமையும் இல்லை. ஆதலின் உணவுப்பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து அவற்றைப் பெருக்கினர். உழவுத்தொழில் தலைமைத் தொழிலாக, உயிர்த் தொழிலாகப் போற்றப்பட்டது. இந்த உழவுத் தொழிலுக்குத் தேவையான கருவிகளைத் தாங்களே தயாரித்தும், ஒரு சில கருவிகட்குப் பிறரின் உதவியுடனும் தயாரித்து இயக்கினர்.

கலப்பை, மண்வெட்டி, அறுவடை செய்யக்கத்தி மற்றும் இதரப் பொருட்கள் மரத்தாலும், இரும்பாலும் தயாரிக்கப்பட்டன.

இத்தகைய கருவிகளைப் பயன்படுத்திப் பயிர் செய்தமையால் பயிர்கள் நன்கு விளைந்தன என்பதனை,

**‘பால்வார்பு கெழீஇப் பல்கவர் வளி போழ்வு**

**வாலிதின் விளைந்தன ஐவனம் வெண்ணெல்’**

(மலை, பா.அ. 114, 115)

எனும் இப்பாடலடி அறிவுறுத்துகின்றது. மேலும், உழவுத் தொழிலில் பயின்ற எருதுகளைப் பூட்டி ஏரை உழுதனர். கலப்பையின் கொழு நிலத்தில் மறைய அமுக்கி உழுதனர் என்பதை,

**‘பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்**

**உடுப்புமுக முழுக்கொழு மூழ்க ஊன்றி**

**தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை’**

(பெரும். பா.அ. 198 - 200)

என்ற அடிகள் கருவிகளை இயக்கியமையைக் குறிப்பிடுகின்றது. இயற்கையான உரங்கள் தயாரித்துப் பயிர் செய்வித்தும், மரக்கருவிகள் இரும்புக்கருவிகளைப் பயன்படுத்தி உழவுத் தொழில் செய்தும், சங்க மாந்தர் வாழ்ந்தனர். கருவிகளைத் தயாரித்து இயக்கியமை, பழுதுபார்த்தமை சங்க மாந்தரின் பொருள் சார்ந்த நுண்ணறிவினைப் புலப்படுத்துகிறது.

## நெசவுத் தொழில் :

மக்கள் சமுதாயத்திற்கு உணவினை அடுத்து இன்றியமையாது வேண்டப்படுவது ஆடையாகும். விலங்குகளைப் போலன்றி உடலை

மறைத்தற்குரிய உடையினை அணிந்து மானத்துடன் வாழும் முறை மக்கள் வாழ்க்கையின் சிறப்பம்சமாகும். நாகரிகம் வளராத மிகப் பழங்காலத்தே மக்கள் இலை, தழை, ஆடைகளையும் உடையாக அணிந்தனர். பின்பு நாகரிகம் வளர வளரப் பலவித வண்ண ஆடைகளைத் தயாரிக்கக் கற்றுக் கொண்டனர்.

நூலை நூற்கும் கருவிகளைத் தயாரித்து இயக்கினர். பின்னர் வண்ண ஆடைகளுக்கான நுட்பத்தைக் கண்டறிந்து அதற்கேற்ற கருவிகளும் கண்டறியப்பட்டன.

நெசவுத் தொழில் அக்காலத்தில் சிறப்புற்று விளங்கியது. பட்டு உடை தயாரிக்கப் பயன்படும் பொறியை மிகவும் சிரத்தையுடன் இயக்க வேண்டும். இல்லையெனில் விலை உயர்ந்து பட்டுத்துணிகள் பழுதாகிவிடும். இந்தப் பட்டு உடைகளின் கரைகளில் திரளமுடிந்த முடிகள் அழகு பெற அமைக்கப்பட்டன என்பதை,

**'கொட்டைக் கரைய பட்டுடை நல்கி'** (பொருநர்: பா.அ 155)

என்ற அடிகள் விளக்குகின்றது.

இழை ஓடிய வழி இன்னது என்று பார்வைக்குத் தெரியாதவாறு அத்துணை நுண்மை உடையவனாக ஆடைகள் நெய்யப்பட்டன என்னும் உண்மையை,

**'நோக்கு நுழை கல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுரியன்ன அறுவை** (மேலது. பா.அ. 82 - 83)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய நுணுக்கமான கருவிகளையும் சங்க மாந்தர்கள் இயக்கியுள்ளமை அவர்களது பொறி சார்ந்த நுண்ணறிவினை வெளிப்படுத்துகின்றன.

பண்பாட்டில் சிறந்த தமிழர்கள் தங்களது ஆடைகளைத் தானே தயாரித்துக் கொண்டமையும் இதன்வழி அறிய முடிகிறது.

## தச்சுத் தொழில் :

சங்க காலத்தில் தச்சுத் தொழில் ஒரு தனிப்பெருங் கலைத் தொழிலாக வளர்ந்து சிறந்து விளங்கியுள்ளது. இத்தொழிலின் வளத்தைப் பற்றி நெடுநல்வாடை சிறப்பாகக் குறிப்பிடுகின்றது. இத்தொழிலைப் பயன்படுத்திக் கருவிகள் செய்தமையை சிறுபாணாற்றுப் படையும், பெரும்பாணாற்றுப்படையும் எடுத்தியம்புகின்றன.

'அக்காலத் தச்சர்கள் செய்த தேர் ஒன்றைச் சிறுபாணாற்றுப் படை கூறுகின்றது. தேர் எவ்வகையான குற்றமும் இன்றி உருண்டு ஓடும் தன்மையது. உபயோகத்திற்கு ஏற்றது. கூரிய வாளினால் செதுக்கப்பட்ட குறட்டினையுடையது. சில்லுகளில் பொருத்தப்பட்ட ஆர்கள் கூதிர்காலத்தே வானில் தோன்றும் மதியின் கிரணங்கள் போல் தோன்றும் பல வகைகள் செல்வாக்குப் பூசப்பெற்றுப் பல்வகைச் சித்திரங்களை உடையனவாக இருந்தன'. (சசிவல்லி, வி.சி.பண்டைத் தமிழர் தொழில்கள், ப.99) இது சங்க மாந்தரின் பொறிசார்ந்த நுண்ணறிவினைப் புலப்படுத்துகின்றது. மேலும்,

**'தச்சர் சிறாஅர் நச்சப் புனைந்த**

**ஊரா நற்றேர் குருட்டிய புதல்வர்'** (பெரும் . பா.அ. (248 - 249)

என்ற அடிகளால் சிறு பிள்ளைகள் இழுத்து விளையாடுவதற்காக அக்காலத் தச்சர்கள் சிறுதேர் செய்தனர் என்பதைத் தச்சர் குடியில் பிறந்த

சிறுவரும் சிறுதேர் செய்தனர் என்பதனால் சிறுவர்களிடமும் தங்களுடைய குலத்தொழில் சார்ந்த பொறி சார்ந்த நுண்ணறிவு இருந்தமையை அறிய முடிகிறது. அந்தந்த இனம் சார்ந்த மரபுப்பண்புகள் குழந்தைகட்குக் கடத்தப்படுகின்றன என்பதும் இங்கு மெய்ப்பிக்கலாகிறது.

சிறுபாணாற்றுப்படையில் உமணர்கள் வளர்த்த குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்து செய்த மரத்தாலான மணிமாலையை அணிவித்தனர் என்ற குறிப்புக் காணப்படுகிறது என்பதை,

**நறவுவா யுறைக்கு நாகுமுதிர் நுணவந்து**
**அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத**
**கைபுனை செப்பங் கடைந்த மார்பின்**
**செய் பூங்கண்ணி செவிமுதல் திருத்தி**
**நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**மகாஅர் அன்ன மந்தி மடவோர்'** (சிறு. பா.அ. 51 - 56).

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகின்றது. உளியால் குடைந்து மணிமாலையாகச் செய்வது மிகவும் நுணுக்கமான வேலைப்பாடு ஆகும். இக்கருவிகளைப் பயன்படுத்த அறிந்தவர்கள் மட்டுமே இத்தொழிலைச் செய்ய இயலும்.

தேர், பாண்டில், உளி, உலக்கை, நுகம், அச்சு, பார், உருளை என்னும் பொருள்கள் அக்காலத் தச்சுத் தொழிலை நினைவூட்டுகின்றன. தச்சர், 'கருந்தொழில் வினைஞர்' என்று குறிக்கப்பட்டுள்ளனர் என்பதை

**'கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி'** (மேலது, பா.அ. 257)

என்ற பாடலடிகளில் குறிப்பிடப்படுகின்றன. இவ்வாறு சங்க மாந்தர்கள் தச்சுத் தொழிலில் சிறப்புப் பெற்றிருந்தமை அவர்களின் தச்சுத்தொழில்

சார்ந்த கருவிகளின் நுண்ணறிவினை வெளிப்படுத்துகின்றன. மேலும் தச்சுத் தொழிலில் பல புதியன புனையும் ஆற்றல், பல்வேறு வடிவங்களை உருவாக்குதல் முதலிவை அவர்களது ஆக்கத் திறனையும் வெளிப்படுத்துவதாக அமைகின்றன.

இக்கருவிகளில் ஏதேனும் பழுது ஏற்படினும் அதனைத் தானே சரிசெய்து இயக்கிக் கொண்டுள்ளனர்.

## மட்கலத் தொழில் :

புதிய கற்காலத்தில் பயிர்த்தொழில் செய்யவும், விலங்குகளைப் பழக்கவும், நெசவு முதலிய தொழில்கள் கற்கவும் நேர்ந்தது. மக்கள் உணவுப் பொருட்களைச் சேமித்து வைக்க மண்பாண்டங்களைச் செய்து கொண்டனர். இவர்களுக்கு முன் வாழ்ந்த மக்கள் விலங்குகளின் தோலினாலாகிய பைகள், தாவரக்கனிகளின் ஓடுகள் முதலியவற்றைப் பயன்படுத்தினர். அதிக அளவில் மண்பாத்திரங்கள் செய்யச் சக்கரங்கள் பயன்படுத்தப்பட்டன என்பதை,

**'வனைகலம் திகிரியின் குமிழி சுழலும்**
**துணை செலல் தலைவாய் ஓவிறந்து விரிக்கும்**

(மலை, பா.அ. 474 - 475)

என்பதனால் அறிய முடிகின்றது. குயவன் வனைகின்ற மட்கலத்தில் சக்கரம் போலக் குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினை உடையவாய் ஒழிவின்றி ஓடும் ஆறு என்பது பொருளாகும். நீரின்கட் சுழலுக்கு உவமையாகக் குயவன் மட்கலஞ் செய்யும் உருளையின் சுழற்சி கூறப்படுகிறது.

மேலும், புளியங்காய், நெல்லிக்காய் முதலிய ஊறுகாய்கள் வைக்கப்பட்ட மிடா, காடி வைத்த கலன் எனப்பட்டது. உணவுப் பண்டமான அப்பம் சுடுவதற்கும் மண்ணாலாகிய அகன்ற சட்டி பயன்படுத்தப்பட்டது என்பதை,

**‘காரகற் கூவியல் பாககொடு பிடித்த’** (பெரும். பா.அ. 377)

என்ற பாடலடி குறிப்பிடுகின்றது. புறத்தே கரிபடிந்து கரிய சட்டியாகக் காணப்பட்டதை, ‘காரகற் கூவியல் பாககொடு பிடித்த என்று கூறுகின்றனர். குழிசி, அடுப்பு என்னும் பெயர்களைக் கொண்டு,

**‘முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி’** (மேலது, பா.அ. 99)

என்றும் குறிப்பிடுவதிலிருந்து மட்பாண்டத் தொழிலிலும் சங்க கால மக்கள் சிறப்புற்று விளங்கியமை அறியமுடிகின்றது. மண்ணினை பக்குவப்படுத்திப் பலவிதமான பொருட்கள் செய்ததிலிருந்து அவர்களிடம் மட்கலக்கருவி சார்ந்த நுண்ணறிவும், ஆக்கத்திறனும் நிறைவாக இருந்ததனை அறிய இயலுகின்றது.

## கொல்லுத் தொழில் :

சங்க மாந்தரிடத்தில் இரும்புத் தொழில் செய்யும் கொல்லன் இருந்தான். அவன் தொழில் செய்யும் உலைக்கூடம் இருந்தது. அவன் வைகறையில் வேலை செய்யத் தொடங்கியதும், அவன் இரும்படித்த ஓசை கேட்டு, மாடத்து உறங்கிய புறவின் சேவல் அஞ்சி உறக்கத்திலிருந்து விழித்தது என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. இச்செய்தியை,

**‘பொன்மொழித் திழிதரும் போக்கருங் கங்கை**

**பெருநீர் போகும் இரியல் மாக்கள்**

**ஒருமரப் பாணியில் தூங்கி யாங்குத்**

**தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇ’**

(மேலது பா.அ. 431 - 434)

என்ற அடிகளால் அறிய முடிகின்றது. சங்க காலப் பொருளியல் வாழ்வில் கொல்லரும் தச்சரும் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தனர். கொல்லர்கள் தோலாலான துருத்தியைக் காலால் மிதித்துத் தீயுண்டாக்கினர், குறட்டினைப் பயன்படுத்தினர் என்ற செய்தியினை,

**‘...............மென்றோல்**

**மிதியுலைக் கொல்லன் முறிகொடிற்றன்ன’**

(மேலது பா.அ. 206 - 207)

என்ற வரிகள் விவரிக்கின்றன. கொல்லர்கள் இரும்பைக் காயவைத்து சம்மட்டியால் அடித்தனர் என்பதனை,

**‘கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த’**

(மேலது, பா.அ. 437)

என்பதனால் அறிய முடிகிறது. இவையல்லாமல் உழுகொழு, குயம், கத்தரிகை, யானைக் கொழுந்தொடி, யானையை அடக்கும் தோட்டி, இரும்புத் தகடு, கவைமுட்கருவி முதலியவற்றையும் சிறப்பாகச் செய்யக் கற்றுக் கொண்டிருந்தனர் என்பதன் வழி சங்க மாந்தரின் இரும்புத் தொழில் சார்ந்த நுண்ணறிவு புலப்படுகிறது.

## உலோகத் தொழில் :

சங்க மாந்தர்கள் பல்வகை உலோகங்களைப் பயன்படுத்தி தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்வதில் சிறப்புற்றிருந்தனர். இரும்பு, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு தொழில் செய்யும் கொல்லர்கள் இருந்தது போலவே வெண்கலம், செம்பு முதலிய உலோகங்களை உருக்கும் திறன்பெற்று, அவற்றால் மக்கள், பயன்படுத்துவதற்குரிய பலவகையான பொருட்களையும் செய்ய வல்லவர்கள். ஊர்தோறும் தங்களுக்குரிய தொழில் வகைகளைப் பெருக்கியிருந்தனர். வெண்கலத்தை உருக்கிக் கலங்கள் முதலியன செய்பவர் கஞ்சக்காரர் என்றும், செம்பினால் கலம் செய்வார் செம்பு கொட்டிகள் என்றும் அழைக்கப்பட்டனர்.

செல்வந்தர் இல்லங்களில் அன்றாடத் தேவைக்குப் பொன்னாலும், வெள்ளியாலும் பாத்திரங்களைப் பயன்படுத்தினர். வைரக்கற்கள் இழைத்த கலன்களும் வழக்கில் இருந்தன. கரிகாலன் அரண்மனையில் இருந்த பணிப்பெண்டிர் அரசனுக்கும் அவனுடைய பணிப்பெண்டிருக்கும் பொற்கலத்தில் கள்ளை ஊற்றிக் கொடுத்தனர் என்பதை,

**'இழையணி வனப்பின் இன்னகை மகளிர்**

**போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்'**

(பொருநர். பா.அ. 85 - 86)

என்ற அடிகளால் வெள்ளியாலான கலம் உண்கலமாகவும் பயன்பட்டது என்பது பெறப்படுகிறது.

சிறிய வெள்ளிக்கலன்கள் குழந்தைகள் உண்ணப்பயன்பட்டன. பெரிய வெள்ளிக்கலன் பெரியவர்கள் உண்ணப் பயன்பட்டன. இளந்திரையன் அரண்மனையில் இவ்வெள்ளிக் கலன்கள் இருந்தன என்பதை,

**'மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி**
**மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து**
**ஆனா விருப்பிற் றானின் றூட்டி**
**மங்குல், வானத்துத் திங்கள் ஏய்க்கும்'**

(பெரும். பா.அ. 477 - 480)

என்ற வரிகள் விளக்குகின்றன. இவ்வாறு சங்க கால மக்கள் உலோகக்கருவி சார்ந்த தொழிலிலும் சிறந்து விளங்கியமை, அவர்களின் உலோகக்கருவி சார்ந்த நுண்ணறிவினை வெளிப்படுத்துகிறது.

## தோல் தொழில் :

பண்டையத் தமிழர்கள் தங்களுடைய கால்களுக்குத் தேவைப்படும் காலணிகளைத் தாங்களே தயாரித்து அணிந்தனர் என்பதை,

**'புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ'** (மேலது. பா.அ. 159)

என்ற அடிகளில் இடையர்கள், காடு மேடுகளில் திரிய வேண்டியிருப்பதால் எப்பொழுதும் தொடுதோல் உடையராக இருப்பர் என்பதை அறியமுடிகிறது.

வன்மை ஒலியைத் தருவதற்கேற்ற வகையில் போர் முரசங்களுக்குத் தோல்களைப் போர்த்தினர். அதைப்போலவே மென்மையான ஒலியைத்

தரவல்ல பல தோற்கருவிகளும் செய்தனர். இதற்கு மானின் தோலைப் பயன்படுத்தினர். முழவு, பதலை, சிறுமுழா, இணைப்பாறை, தடாரி, துடி, தண்ணுமை முதலிய தோற்கருவிகளும் செய்யப்பட்டன என்பதை,

**'மான்தோல் சிறுபறை கறங்க'** (மலை. பா.அ. 321)

என்ற பாடல் வரி குறிப்பிடுகின்றது.

விலங்குகளின் தோலைக்கொண்டு அவற்றின் தன்மை. உறுதிக்கேற்ற வகையில் பயன்படு பொருளாக ஆக்கினர். சங்க கால இசைவாணர்கள் யாழ் என்னும் இசைக்கருவிக்குப் பாதுகாப்பாகத் தோலைப் போர்த்தியுள்ளனர். யாழின் குமிழினுடைய பழத்தினது நிறத்தை ஒப்பத் துவரூட்டிக் கைத்தொழிலால் பொலிவுபெறச் செய்தனர் என்பதை,

**'கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்**
**புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு'** (சிறு. பா.அ. 225 - 226)

என்ற அடிகளால் அறியமுடிகிறது. இவ்வாறு சங்க மாந்தர்கள் தோல் கருவியைச் செய்வதிலும் இயக்குவதிலும் தேர்ந்த நுண்ணறிவு பெற்றுச் சிறந்து விளங்கியமை மெய்ப்படுகிறது.

## அணிகலத்தொழில் :

சங்ககால அரசரது முடி (கிரீடம்), அரசமா தேவியின் முடி, பலவகைக் கழுத்தணிகள், கையணிகள், மேகலை, பலவகை மோதிரங்கள் முதலிய அணிவகைகள் குறிக்கப்பட்டுள்ளன. பொன் மட்டும் கொண்டு செய்யப்பட்ட நகைகளும், பொன்னில் கல்பதித்துச் செய்யப்பட்ட நகைகளும் என இருவகை நகைகள் குறிக்கப்பட்டுள்ளன. முதல்

வகையைச் செய்தவர் உருக்குத்தட்டார் எனவும், பின்னதைச் செய்தவர் இரத்தினப் பணித்தட்டர் எனவும் குறிக்கப்பட்டனர். இவர்கள் பொன்னால் பல்வேறு அணிகலன்களைச் செய்தனர்.

விறலி தன் ஒப்பனை மிகுந்த கூந்தல் அழகுபெறத்தக்க முறையில் பொன்மாலை அணிந்திருந்தாள் என்பதை,

**'புனையிருங் கதுப்பகம் பொலியப் பொன்னின்**
**தொடையாமை மாலை விறலியர் மலைய'**

(பெரும். பா.அ. 485 - 486)

என்றவாறு அறிய முடிகின்றது. சங்க கால மக்கள் பல்வேறு கருவிகள் கொண்டு அணிகலன்களைத் தயாரித்தமை, அவர்களது தொழில் சார்ந்த நுண்ணறிவினை வெளிப்படுத்துகின்றன.

சங்க காலத்தில் ஒரு குறிப்பிட்ட தொழிலைப் புரியும் ஒவ்வொரு இனத்தவரும் தங்களது தொழில்சார்ந்த கருவிகளைத் தயாரிக்கவும், அதனை இயக்கவும், பழுதுபார்க்கவும் அறிந்திருந்தனர் என்பதன் வழி அவர்களின் கருவிசார்ந்த நுண்ணறிவு புலப்படுகின்றது.

## வேறு காரணம் கூறி ஆற்றுவிக்கும் நுண்ணறிவு:

தலைவி தோழி கூறும் ஆறுதல் மொழியிலும் நுண்ணறிவு வெளிப்படுகிறது. கார் காலத்திற்கு முன் வருவதாகச் சொன்ன தலைவன் கார்காலம் வந்தும் வரவில்லை. தோழி, கார்காலம் வருவதற்கு முன்னரே காலமற்ற காலத்து வந்த புதுமழையைக்காரென மதித்துக் கொம்பெல்லாம் மலர்விட்ட கொன்றை மடமையுடையது எனத் தலைவியை ஆற்றுவிக்கிறாள்.

**'மடவமன்ற தடவுநிலைக் கொன்றை**
**கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய**
**பருவம் வாரா வளவை நெரிதரக்**
**கொம்புசேர் கொடியினை ளூழ்த்த**
**வம்ப மாரியைக் காரென மதித்தே'** (குறுந்.பா.எ. 66)

என்ற குறுந்தொகைப் பாடலடிகளில் தோழியானவள் தலைவன் வருகின்ற காலத்து வராமையை, உணர்ந்த தலைவிக்கு, அவளை மேலும் புண்படுத்தாமல் வேறு காரணம் கூறி ஆற்றுவிக்கும் நுண்ணறிவு வெளிப்படுகிறது.

மற்றொரு குறுந்தொகைத் தோழி, இது புதுவதாய் வந்த மழையே, கார்கால மழையாயின் தலைவர் வந்திருப்பார், என்பதனை,

**'வம்புப் பெய்யுமால் மழையே வம்பன்று**
**காரிது பருவம் ஆயின்**
**வாரா ரோநம் காத லோரே'**

என்று தலைவன் வராமையாலேயே அது கார்காலமன்று எனப்பேசும் தோழியின் அறிவு நுண்மையானது.

மாரிக் காலத்து எஞ்சிய மழைநீரைப் புதுநீர் போல வானம் பொழிகிறது. அதனைக் காரென மதித்து ஆடும் மயில்களும் பூத்த பிடவ மலர்களும் மடைமை உடையன, எனக்கூறித் தலைவியை ஆற்றுவிக்கிறாள் என்பதனை,

**'மடவ வாழி மஞ்ஞை மாயினங்**
**கால மாரி பெய்தென அதனெதிர்**
**ஆலவும் ஆலின பிடவும் பூத்தன'** (குறுந். பா.எ. 251)

என்ற குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது. மேலும், நற்றிணைத்தோழி,

**‘பிடவுங் கொன்றையும் கோடலும்**

**மடவ ஆதலின் மலர்ந்தன பலவே’** (நற்.பா.எ. 99)

என்றவாறு ஆற்றுப்படுத்தும் நுண்ணறிவு இப்பாடலில் புலனாகிறது.

**‘பேரஞர் உள்ளம் நடுங்கல் காணியர்**

**அன்பின் மையிற் பண்பில பயிற்றும்**

**பொய்யிடி அதிர்குரல் வாய்செத் தாலும்**

**இனமயில் மடக்கணம் போல**

**நினைமருள் வேனோ வாழியர் மழையே’** (நற்.பா.எ. 248)

என்ற வரிகளில் மழையை நோக்கிப் பேசினாலும் தலைவி மனத்தை ஆற்றுவிக்கப் பேசும் தோழியின் கூற்றில் அறிவார்ந்த விளக்கத்தின் நுட்பம் உள்ளது.

‘நமது நடத்தையின் காரணங்களைப் பிறர் கேள்வி கேட்டால் மனக்கிளர்ச்சி அடையும்போது, நாம் அறிவார்ந்த விளக்க நடத்தையை மேற்கொள்கிறோம் என்று (James C.Coleman, Psychology and effective behavior, P-222) உளவியலர் விளக்கம் தருகின்றனர்.

தலைவியை ஆற்றுவிக்கத் தோழி கூறும் காரணங்கள் தலைவியால் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் அமைவதால் இவ்விடத்துத் தோழியின் நுண்ணறிவு வெளிப்படுகிறது. மேலும் தேவையான இடத்து தகுந்த சொற்களைக் கையாளும் திறனைக் கொண்டிருப்பதால் மொழியியல் நுண்ணறிவு வெளிப்படுகிறது. மேலும் ‘தேவையான இடத்துத் தகுந்த

சொற்களைக் கையாளும் திறனை மொழியியல் நுண்ணறிவு' (நாகராஜன்.கி. க.உ. ப. 317) என்;று ஹொவர்டு கார்டனர் என்பார் குறிப்பிடுகிறார்.

**கார்டனரின் இடரீதியான நுண்ணறிவு : (Spatial Intelligence)**

இடங்களைப் பற்றிய பல்வேறுபட்ட அறிவும் இதில் குறிப்பிடப்படுகிறது. சங்க மாந்தரின் பகற்குறியும், இரவுக்குறியும் இட நுண்ணறிவின் அடிப்படையில் அமைகின்றன. பகற்குறிக்கு எவ்விடம் சரியானதாக அமையுமென்றும், இரவுக் குறிக்குப் பொருத்தமானது எது என்றும் தேர்ந்தெடுப்பவளாகத் தோழி அமைந்து இருக்கிறாள். இதனால் தோழியிடத்தமைந்த இடநுண்ணறிவும் வெளிப்படுகிறது. பகற்குறி பற்றித் தொல்காப்பியம்,

**'பகர்புணர் களனே புறனென மொழிப**
**அவளறிவு உணர வருவழி யான'**

(தொல். பொருள், களவியல், நூ.எ42)

என்று குறிப்பிடுவதால் பகற்குறி தலைவி சொல்லும் எவ்விடத்தும் அமையும் இரவுக்குறியை,

**'இரவுக் குறியே இல்லகத் துள்ளும்**
**மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே**
**மனையகம் புகாஅக் காலை யான'**

(தொல். பொருள், களவியல், நூ.எ. 41)

என்பதனால் இரவுக்காலத்துத் தலைவி வெளியிடத்துச் செல்லாததால் இல்லின் உள் நிகழும் என்றும் கூறப்படுகிறது.

தலைவன் வரும் வழியின் துன்பத்தை எண்ணித் தலைவி துன்பப்படுவதிலும் உண்டு. இவ்வாறு இடத்தின் தன்மையை உணர்ந்தவர்களாகவும் சங்க மாந்தர் விளங்கியமை அவர்களின் இட நுண்ணறிவினை உணர்த்துகிறது.

## கார்டனரின் உடலியக்கம் தொடர்பான நுண்ணறிவு:

ஒவ்வொரு நிலையிலும் மனித உடலின் இயக்கத்தை அறிந்து அதற்கேற்றவாறு செயல்படுதல் இவ்வகை நுண்ணறிவு ஆகும். சங்க மாந்தர்கள் ஒவ்வொரு பருவத்திலும் தங்களது உடலின் இயக்க வளர்ச்சி நிலையை அறிந்திருந்தனர் என்பதனை,

**‘முலைமுகஞ் செய்தன முன்ளெயி றிலங்கின**
**தலைமுடி சான்றை தண்தழை யுடையை**
**அலமரல் ஆயமொடு யாங்கனும் படாஅல்**
**மூப்புடை முதுபதி தாக்கணங்கு உடைய**
**காப்பும் பூண்டிசின் கடையும் போகலை’** (அகம். பா.எ. 7)

என்ற பாடலடிகளில் செவிலி தலைவியின் வளர்ச்சி நிலைகளைச் சுட்டிக் கூறுகிறாள். இவ்வளர்ச்சியினால் தலைவியின் உடலியக்கம் மாறுபடும் என்பதைச் செவிலித்தாய் உணர்ந்திருந்தாள். இப்பருவம் குமரப்பருவம் ஆகும். (Adolesent Period) ‘இப்பருவத்தில் மனித உடலின் இரத்த ஓட்டம் வேகமாக இருப்பதால் எதனையும் ஆராயாமல் விரைவில் முடிவெடுக்கும் தன்மை உடையவர்களாக இப்பருவத்தினர் இருப்பர் (.... Life Span Psychology, P-298) எனவேதான், இப்பருவத்தின் உடலியக்க வளர்ச்சியைச் சுட்டி, தலைவிக்கு அறிவுறுத்தும் நுண்ணறிவு மிக்கவளாகச் செவிலி திகழ்ந்திருக்கிறாள்.

## கார்டனரின் இசை தொடர்பான நுண்ணறிவு:

இசை இசைவிப்பது, தன்வயப்படுத்துவது ஆகும். சங்க மாந்தர்கள் குழந்தைப் பருவத்தில் தாலாட்டுப் பாடல்களையும் ஊஞ்சற் பாடல்களையும் கேட்டனர். விளையாடும் பருவத்தில் பந்து விளையாடும் பாடல்கள், அம்மானை, பொற்சுண்ணம், சாழல், தெள்ளேணம், உந்தி பறத்தல், தோள் நோக்கம் முதலிய ஆடல்களுக்குரிய பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். இதனால் பல்வேறு பொருட்களைப் பற்றிய அறிவினைச் சிறு வயதிலேயே பெற்றனர். மணத்தில் மங்கல வாழ்த்தும், வள்ளைப்பாட்டு, ஏற்றப்பாட்டு முதலிய உழைப்புத் தொழில்கள் அனைத்திற்கும் இசையின் மூலம் களைப்பைப் போக்கினர். தமிழன் இறந்த பின்னரும் ஒப்பாரிப் பாட்டுப் பாடப்பட்டது. பழந்தமிழர் தம் பிறப்பு முதல் இறப்பு வரை இசையிலேயே வாழ்ந்து வந்துள்ளனர். தமிழிசைப் பண்கள் குரல், துத்தம், உழை, கைக்கிளை, இளி, விளரி, தாரம் என ஏழாகும். இவற்றிலிருந்து பிறப்பன திறங்கள் எனப்பட்டன. தமிழ்ப் பெரும்பண்கள் குறிஞ்சிப்பண், முல்லைப்பண், பாலைப்பண், மருதப்பண், நெய்தற்பண் என்னும் ஐந்தாகும்.

'மனித உள்ளத்திற்கு இசையே அமுதமாய்ப் பயன்பட்டது'. (சேதுராமன் பி., ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல், ப.55) குறிஞ்சி நில மக்கள், இறை வழிபாட்டில் இனிமையாய்ப் பாடிக்கொண்டு குன்றக்குரவை ஆடினார்கள். கொற்றவையை வழிபடப் பாலை நிலமக்கள் இசைக்கருவிகளையும் பயன்படுத்தி வேட்டுவ வரி பாடினார்கள். முல்லை நில ஆய்ச்சியர் தாம் பாடிய ஆய்ச்சியர் குரவையில் முல்லை நிலத்திற்கு உரிய இசைக்கருவிகளையும் பண்களையும் பயன்படுத்தினர். மருதயாழும்

மருதப்பண்ணும் மருத நிலத்திற்குரியவை. நெய்தல் நிலத்திற்கு நெய்தல் யாழும் நெய்தல் பண்ணும் உரியவையாகும்.

மனிதன் மகிழ்ச்சி நிலையில் தன் விருப்பப்படி பலவகை ஓசைகளை எழுப்ப, அவ்வோசைகள், சில சமயங்களில் அவனையறியாது அவனுக்கு இன்பத்தை அளிக்க அவன் மீண்டும் மீண்டும் அவ்வோசைகளை எழுப்பி அனுபவிக்க இவ்வாறு எழுப்பப்பட்ட ஒலிகளின் சேர்க்கை காதுகளுக்கு இன்பமளித்த நிலையில், அவனைப் பின்பற்றிப் பலர் அத்துறையில் இறங்கியிருக்கலாம்' (இராசமாணிக்கனார். மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 617) என்று இசை மற்றும் இசைக்கருவிகளின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுகின்றார் மா.இராசமாணிக்கனார்.

முழவு, ஆகுளி, தாளம், நெடுவங்கியம், குறுந்தூம்பு, குழல், கரடிகை, எல்லரி, பதலை என்பவற்றைக் கூத்தர் பயன்படுத்தினர். இவை ஒவ்வொன்றையும் தனித்தனி உறையில் இட்டு எடுத்துச் சென்றனர் என்பதை,

**'விண்அதிர் இமிழ்இசை கடுப்ப, மண்அமைத்து**

**திண்வார் வசித்த முழவொடு ஆகுளி**

..........................................................................

**நொடிதரு பாணிய பதலையும் பிறவும்**

**கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப."** (மலை. பா.அ. 212)

என்ற வரிகள் இதனைக் குறிப்பிடுகின்றன. இச்செய்தி இசைக்கருவிகளைப் பாதுகாப்பாகச் செய்த நுண்ணறிவினை புலப்படுத்துகிறது.

வழியில் செல்வோரைத் துன்புறுத்தும் கள்வரும், யாழின் ஓசை கேட்டபின் தம் கைப்படையை நழுவவிட்டுத் தம் கொடுஞ் செயலையும் மறக்கச் செய்யும் இன்னிசையை வெளிப்படுத்த வல்லது என்பதனை,

**‘பாசிலை ஒழித்த பராஅரைப் பாதிரி**

**வள்இதழ் மாமலர் வயிற்றிடை**

**…………………………………………………**

**புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண**

**பெருவறம் கூர்ந்த காணம் கல்லென’** (பெரும். பா.அ. 422)

என்ற அடிகளில் இசையின் நுண்மையையும், கலைஞர்களின் இசை சார்ந்த நுண்ணறிவினையும் அறிய முடிகின்றது. இவை தவிர பாணர், பொருநர், விறலியர், கூத்தர் ஆகியோரின் இசை சார்ந்த நுண்ணறிவு ஆற்றுப்படை நூல்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இவற்றிலிருந்து சங்க மாந்தர்களும், கலைஞர்களும் இசைசார்ந்த நுண்ணறிவினைப் பெற்றிருந்தமையை அறிய முடிகிறது.

**மனவயது (Mental Age):**

மனிதனின் வலிமையை உடல் வலிமை, மன வலிமை என்ற நிலைகளில் அடக்குவர். இந்த இரண்டிற்கும் மிகுந்த தொடர்புடையது நுண்ணறிவு. கால வயதின் அடிப்படையில் செய்யக்கூடிய செயல்களின் அடிப்படையிலும் மனவயது கணக்கிடப்படுகிறது.

சங்க மாந்தர்களின் குழந்தைகள் நுண்ணறிவு மிக்கவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர். அக்குழந்தைகளும் மகளிரும் பல்வேறு சூழல்களில் தமது நுண்ணறிவினை வெளிப்படுத்தியுள்ளனர். அவ்வகையில் மகளிரின் மனவலிமை, நுண்ணறிவும், குழந்தைகளின் ஆற்றல், மன வலிமை,

நுண்ணறிவு ஆகியவற்றிற்கும் மூதின் முல்லைத்துறையில் அமைந்த ஒக்கூர் மாசாத்தியார் பாடல் குறிப்பிடத்தக்கதாகும். இதனை, ஐயனாரிதனார்,

**‘அடல்வேல் ஆடவர்க்கு அன்றியும் அவ்இல்**
**மடவரல் மகளிர்க்கும் மறம்மிகுத் தன்று’**

(ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பாமாலை,
வாகைப்படலம் கொளு 20)

என்றவாறு குறிப்பிடுகின்றார். மேலும்,

**‘கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே**
**மூதின் மகளிர் ஆதல் தகுமே**
**மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை**
**யானை எறிந்து களத்து ஒழிந்தனனே**
**நெருறல் உற்றசெருவிற்கு இவள் கொழுநன்**
**பெருநிரை விலக்கி ஆண்டுப் பட்டனனே**
**இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**
**ஒரு மகன் அல்லது இல்லோள்**
**செருமுகம் நோக்கிச் செல்க என விடுமே’** (புறம், பா.எ. 279)

என்ற பாடலால் அறியமுடிகிறது. இம்மகளிர் மனஉறுதியுடன் போருக்காகத் தன் தந்தையையும், தலைவனையும், அருமைப் புதல்வனையும் தன் நாட்டினைக் காக்க அனுப்பியமை சங்க மகளிரின் மனவலிமைக்கும் நுண்ணறிவிற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

மேலும், அக்குழந்தை எட்டு வயதான குழந்தை, எட்டு வயதில் குழந்தையின் மனது விளையாட வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருக்கும். ஆனால், போர்க்களத்தில் விளையாட எண்ணியிருக்காது, இருப்பினும் போர்க்களம் சென்று வீரத்துடனும், அறிவுடனும் செயல்பட்டமையும், இதனால் தாய் பெருமிதமடைந்ததும் புறநானூற்றில் கூறப்பட்டுள்ளது.

**'படை அழிந்து மாறினன் என்று பலர்கூற**
**மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்**
**முலை அறுத்திடுவென் யான்எனச் சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**
**செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய**
**படுமகன் கிடக்கை காணூஉ,**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே'** (புறம், பா.எ. 278)

இப்பாடலடிகளில் சிறுவனின் ஆற்றலும், அறிவும் பெரியோருக்கான இணையான செயலாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் இச்சிறுவன் இளம்பருவத்தில் பெரியோருக்கு இணையான மனவயதினைப் பெற்று இருப்பதால் அவனது நுண்ணறிவு ஈவும் அதிகரிக்கிறது.

**மன வயதைக் கணக்கிடுதல் :**

மனவயது என்பது ஒருவரது நுண்ணறிவு முதிர்ச்சி நிலையைக் குறிக்கிறது. ஒரு மனிதன் எந்தக் குறிப்பிட்ட வயதுடையோர் செய்யக்கூடிய செயல்களை வெற்றிகரமாகச் செய்ய முடிகிறதோ அதுவே அவரது மனவயதாகும். (நாகராஜன்.கி, க.உ, ப. 335) ஒரு குழந்தையின் மனவயது எட்டு எனில், அக்குழந்தை, எட்டு வயதுடைய குழந்தைகள்

செய்யக்கூடிய செயல் நிறைவேற்றத்தை வெற்றிகரமாக முடிக்க வேண்டும். மனவயது, நுண்ணறிவுச் சோதனையில் செயல் நிறைவேற்றும் நிலையுடன் தொடர்புடையதாகும். இத்தொடர்பு கால வயதைக் (Chronological Age) கணக்கிடாமல் காணக்கூடியதாகும்.

ஒருவனுடைய கால வயது, எட்டாக இருந்து, அவன் பத்து வயது உடையோருக்குரிய சோதனையை வெற்றிகரமாகச் செய்ய முடிந்தால், அவனது மனவயது பத்து ஆகும் (....Advanced Psychology, P-150).

புறநானூற்றில் கூறப்பட்ட சிறுவன் இளைஞருக்கான செயலைச் செய்து வெற்றியும் பெற்றுள்ளான். இதனால் இச்சிறுவன் இளைஞனுக்கான மனவயதினைப் பெற்றிருந்திருக்கிறான் என்பதிலிருந்து சங்க காலச் சிறுவர்களும் நுண்ணறிவுடன் விளங்கியமை தெளிவாகிறது.

**நுண்ணறிவு ஈவு (Intelligence Quotient):**

ஒருவருடைய மனவயதுடன், காலவயதை ஒப்புநோக்கும் போதுதான் அவரது திறன் தெளிவாகும்.

ஸ்டெர்ன் என்பவரின் வரையறையின்படி,

$$\text{நுண்ணறிவு ஈவு} : \frac{\text{மனவயது (மாதங்களில்)}}{\text{காலவயது (மாதங்களில்)}} \times 100$$

இதன்படி நுண்ணறிவு ஈவு 100 ஆக இருப்பின் சாதாரண நுண்ணறிவையும், நூற்றுக்கு மேற்பட்டால் நுண்ணறிவு மிகுதியையும், நூறுக்குக் குறைவாக இருப்பின் நுண்ணறிவுக்குறைவையும் குறிக்கிறது.

(நாகராஜன்.கி, க.உ. ப. 336) போரில் வென்ற சிறுவன், இளைஞருக்கான ஆற்றல், அறிவினைப் பெற்றிருப்பதால் சராசரி நுண்ணறிவு ஈவினைவிட மிகுந்து காணப்படுகிறது.

**நுண்ணறிவுப் பரவலும், மாந்தர்களின் வகைபாடும்:**

நுண்ணறிவுப் பரவலுக்கேற்ப உலக மாந்தர்களை வகைப்படுத்தியுள்ளனர். அவ்வகையில் நுண்ணறிவு ஈவு சமுதாயத்தில் கீழ்க்கண்டவாறு அமைக்கப்பட்டுள்ளது. (நாகராஜன்.கி, க.உ. ப.346)

| **நுண்ணறிவு ஈவு** | **வகைபாடு** | **மக்கள் தொகையில் சதவீதம்** |
|---|---|---|
| 140க்கு மேல் | மேதைகள் | 1 |
| 120 - 139 | மீத்திறமிக்கவர்கள் | 5 |
| 110 - 119 | திறன்மிக்கவர்கள் | 14 |
| 90 - 109 | சராசரி திறன் படைத்தவர்கள் | 60 |
| 80 - 89 | பின்தங்கியவர்கள் அல்லது மெதுவாகக் கற்போர் | 14 |
| 70 - 79 | மந்தமானவர்கள் | 5 |
| 50 - 69 | பேதையர் (Monons) } ஊனமுற்றோர் | 1 |
| 25 - 49 | மூடர்கள் (Imbeciles) } ஊனமுற்றோர் | |
| 0 - 24 | முட்டாள்கள் (Idiots) } ஊனமுற்றோர் | |

சமுதாயத்தில் பெரும்பாலானோர், சராசரி நுண்ணறிவு ஈவு படைத்தவர்களாகக் காணப்படுகின்றனர். சுமார் ஒரு சதவீத மேதைகளும், ஒரு சதவீத ஊனமுற்றவர்களும் காணப்படுகின்றனர். ஊனமுள்ளோருக்கு மரபு நிலையே முக்கியக் காரணமாக அமைகிறது. இன்றைய காலத்தில் ஊனமுள்ளோருக்குச் சிறப்புப் பள்ளிகள், சிறப்பு ஆசிரியர்கள் அமைக்கப்பட்டு அவர்கள் மாற்றுத்திறன் உடையவர்களாக மாறிவருவதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## டெர்மனின் நுண்ணறிவு ஈவு – வகைப்பாடு :

டெர்மன் எனும் உளவியலறிஞர் தனது ஆய்வில் வெவ்வேறு துறைகளில் சிறந்து விளங்குபவர்களின் சராசரி நுண்ணறிவு ஈவினைக் கணித்தார். அதனடிப்படையில் நுண்ணறிவு ஈவு குறிப்பிடப்பெறுகிறது. (சண்முகம்.தா.ஏ, உளவியல் I. ப. 115)

| **வல்லுநர்கள்** | | **சராசரி நுண்ணறிவு ஈவு** |
|---|---|---|
| தத்துவவியலறிஞர்கள் | - | 170 |
| கவிஞர், கலைஞர், கட்டுரையாளர் நாட்டுத்தலைவர்கள் | - | 160 |
| விஞ்ஞானிகள் | - | 155 |
| இசையாளர்கள் | - | 145 |
| ஓவியர்கள் | - | 140 |
| போர்ப்படைத் தலைவர்கள் | - | 125 |

என்ற அடிப்படையில் வகைப்படுத்தியுள்ளார். அவ்வகையில் போருக்குச் சென்று வென்ற சிறுவன் போர்ப்படைத்தலைவர்கள் என்ற வல்லுநரின் அடிப்படையில் அமையும்போது அச்சிறுவனின் நுண்ணறிவு ஈவு 125 ஆக அமைகிறது. சிறுவனின் நுண்ணறிவு ஈவு 125 எனில் நுண்ணறிவு வகைப்பாட்டில் மீத்திறமிக்கவர்கள் என்ற நிலையைப் பெறுகிறான்.

**கற்பித்தலும், கற்றலும் :**

குழந்தைகளுக்கு இளமைப்பருவத்திலிருந்து நல்ல கற்பித்தலின் அடிப்படையில் கற்றல் அமைகிறது. 'கற்றல் என்பது பயிற்சி, அனுபவங்களின் அடிப்படையில் ஒருவனிடம் ஏற்படக்கூடிய ஓரளவு நிலையான நடத்தை மாற்றத்தைக் குறிப்பதாகும்' (............Applied General Psychology, P-81) என்றவாறு உளவியல் அறிஞர்கள் கற்றலை வரையறுக்கின்றனர்.

எனவே, கற்றல் என்பது, நமது மற்றும் பிறர் அனுபவங்களில் இருந்து நாம் பெறும் படிப்பினை அல்லது விளைபயன்கள் ஆகும்.

சங்க கால மாந்தர்கள் தங்களது குழந்தைகளைச் சிறு வயதிலிருந்தே வீர உணர்வும், நுண்ணறிவும் உடையவர்களாக வளரத் தங்களது தொழில் அனுபவங்களின் அடிப்படையில் கற்றும் கொடுத்தனர். குழந்தைகளும் ஒவ்வொருவரிடம் இருந்தும் ஒவ்வொன்றனைக் கற்றுக் கொண்டனர் என்பதனை,

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**

**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**

**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**

**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"** (புறம், பா.எ. 312)

என்ற பொன்முடியார் பாடல் விவரிக்கின்றது. ஆகவே சங்க காலத்தில் சிறுவர்கள் இளமைப்பருவத்திலிருந்து ஆற்றலும், நுண்ணறிவு மிகுந்தும் காணப்பட்டனர். இத்தகு அறிவினைப் பெற்றதற்கு அச்சிறுவர்களின் தாயும் தந்தையும் காரணமாக அமைந்தனர் என்பதும் தெளிவாகிறது.

## ஔவையாரின் நுண்ணறிவு:

நீண்ட காலம் வாழக்கூடிய நெல்லிக்கனியைப் பெற்ற ஔவையார், ஆணுக்கு நிகராக அரசனுக்கு அறிவுரை கூறி, போரைத் தடுத்து நிறுத்தும் நுண்ணறிவு மிக்க பெண்ணாக அமைகிறார். அதியமான் காலத்தில் தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான், அதியமான் மீது பகைமை கொண்டு தன்னிடம் படைவலிமை மிகுந்து இருப்பதாக எண்ணி, அவ்வேந்தன் செருக்குடன் இருந்தான். அவனது அறியாமையை அறிந்த அதியமான், போரின் கொடுமையையும், அதனால் அவன் வலிமையிழந்து கெடுவதன் உறுதியையும், நாட்டுக்கும், நாட்டு மக்களுக்கு வரும் துன்பத்தையும் அறிவதற்கு ஔவையாரைத் தூதாக அனுப்பினான்.

ஒரு நாட்டின் அல்லது மன்னனின் தூதாகப் பிறநாடு செல்வது எளிதன்று. சாதாரணக் காலங்களில் தூது செல்லலாம். ஆனால் போர் நிகழக்கூடிய அறிகுறிகள் தோன்றும்போது தூது செல்லல் மிக மிகத் துன்பம் தருவதாகும். ஏனெனில் சங்க காலத்தில் போக்குவரத்து என்பது பெரும்பாலும் நாடோடி வாழ்க்கையாக இருப்பதும், தான் செல்லும் வழியினை அறிந்திருக்க வேண்டும் என்பதும் நினைத்தற்குரியது.

அதனையும் மீறிச் செல்ல வேண்டுமாயின் சில இயல்புகள் வேண்டுமென்று வள்ளுவர் உரைக்கிறார்.

**'அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூது உரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று'** (குறள் 682)

என்ற மூன்றியல்புகள் தூது செல்வாருக்கு இருக்க வேண்டும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

அதாவது தூது செல்பவருக்குத் தன் அரசரிடம் அன்பு இருக்க வேண்டும். நிறைந்த அன்பு உடையவர் மட்டும் அல்லாது சூழலுக்கு ஏற்றவாறு செயல்படும் அறிவுத்திறமும் வேண்டும். ஏனெனில், அறிவு நுட்பமில்லாத அன்பு மட்டும் உள்ளவர்கள் அரசன் கூறிய செய்தியை மட்டும் கூறிவருவர். ஆனால், நுட்பத்துடன் கூடிய அன்பானது எப்பொழுது எதனைக் கூறவேண்டும் என்பதைக் கொண்டு செயல்படும். எனவே, இவ்விரண்டோடு சொல்வன்மையும் இருத்தல் அவசியம். ஏனெனில் எத்துணை அன்பும், அறிவும் இருப்பினும், தூதுவருடைய செயல் வேற்று மன்னனிடம் எடுத்துக் கூறவேண்டிய செயலாக இருப்பதால் சொல்வன்மை அவசியமாகிறது. ஏனெனில், சொல்வன்மை காரணமாகப் பகையுடைய இருவரை சேர்க்கவும், நட்புடைய இருவரைப் பிரித்துவிடவும் கூடும் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும்,

**'தொகச் சொல்லி தூவாதநீக்கி நகச்சொல்லி**
**நன்றி பயப்பதாம் தூது'** (குறள் 685)

என்று தூது சென்று வேற்றரசனுக்கும் பல காரண காரியங்களைச் சொல்லும்போது கடுமையான சொற்களைப் பயன்படுத்தாமல், இனிய சொற்களால் அவன் மனமகிழச் சொல்லி, தன் அரசனுக்கு நன்மை செய்பவர் நல்ல தூதுவர் என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

எனவே, வள்ளுவர் உரைத்த தூதுக்கு உரிய அன்பு, அறிவு, சொல்வன்மை இயல்புகளைக் கொண்ட நுண்ணறிவு மிக்கவர் ஔவையார் என்பதால் அதியமான் ஔவையாரைத் தூதாக அனுப்பினான் என்பதை உணரமுடிகிறது.

ஔவையார் தொண்டைமானைச் சென்று சந்திக்கும்பொழுது, தொண்டைமான் தன் படைப்பெருமையை அவருக்குக் காட்டிட, அதன் உட்பொருளை அறிந்த ஔவையார், அதியமானின் படைக்களங்களைப் பழிப்பது போலப் புகழ்ந்தும், தொண்டைமானின் படைக்களங்களைப் புகழ்வது போலப் பழித்தும் கூறுகிறார். இதனை,

**'இவ்வே, பீலிஅணிந்து மாலை சூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்தி நெய்அணிந்து**
**கடியுடை வியன்நகர் அவ்வே அவ்வே**
**பகைவர்க் குத்தி கோடுநுதி சிதைந்து**
**கொல்துறைக் குற்றில மாதோ! என்றும்**
**உண்டாயின் பதம் கொடுத்து**
**இல்லாயின் உடன் உண்ணும்**
**இல்லோர் ஒக்கல் தலைவன்**
**அண்ணல் எம்கோமான்வைந் நுதிவேலே'** (புறம். பா.எ. 95)

என்று தொண்டைமானிடம் அதியமானின் வலிமையை மறைமுகமாகக் குறிப்பால் உணர்த்தி, தொண்டைமானின் செருக்கினை அடக்கி ஔவையார் போரை நிறுத்துகின்றார்.

இவ்வாறு போரை நிறுத்தும் அளவிற்குப் புலமைச்சிறப்பு மிக்கவராகவும், மதிநுட்பத்துடன் பேசும் வீரமிக்கவராகவும் விளங்கிய ஔவையாரின் நுண்ணறிவு குறிப்பிடத்தகுந்தது.

## நுண்ணறிவில் பால் வேற்றுமை:

ஆடவரிடத்தும் பெண்டிரிடத்தும் உள இயல்புகளில் வேறுபாடு உண்டு. மொழியைக் கற்றல், விளையாட்டில் விருப்பம் முதலியவற்றில் இருபாலரிடமும் வேற்றுமை உண்டு. அதேபோல் நுண்ணறிவிலும் இருபாலரிடமும் உள்ள வேற்றுமைகளை உளவியலறிஞர்கள் ஸ்டான்போர்டு பீனே, மற்றும் சிரில் பர்ட் ஆகியோர் ஆராய்ந்தனர். இதில் சிரில்பர்ட்டின் சோதனை முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ஆண்களைவிடப் பெண்களின் நுண்ணறிவு விரைவில் முதிர்ச்சி அடைகிறது என்பது இவரது ஆய்வு முடிவாகும் (சண்முகம்.தா.ஏ, உளவியல் ஐ, ப. 166, 117).

இதனடிப்படையில் நோக்கும்போது ஒளவையாரின் நுண்ணறிவும், மற்ற பெண்பாற் புலவர்கள், மகளிரின் வீரம், ஆற்றல் ஆளுமை, கடமையுணர்ச்சி ஆகிய பல்வேறு சூழல்களிலும் மகளிரின் நுண்ணறிவு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## போர்க்களக் காட்சி உரைத்தமை:

மகளிர் வீட்டகத்து மட்டுமல்லாமல் அஞ்சாது போர்க்களம் சென்று அங்கு நிகழ்ந்த நிகழ்வுகளைப் பதிவு செய்தமை சங்க மகளிரின் அறிவாண்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும் இதனை,

**‘பருத்தி வேலிச் சீறூர் மன்னன்**
**உழுத்து அதர்உண்ட ஓய்நடைப் புரவி**
**கடல்மண்டு தோணியின் படைமுகம் போழ**
**நெய்ம்மிதி அருந்திய, கொய்சுவல் எருத்தின்**
**தண்ணடை மன்னர், தாருடைப் புரவி’** (புறம், பா.எ. 299)

என்ற பொன்முடியார் பாடலால் மகளிரின் வீரமும், அறிவாண்மையும் அறியப்படுகிறது.

## புலமையில் சிறந்திருந்தமை:

சங்க மகளிர் கல்வியறிவில் சிறந்திருந்தனர். தங்கள் புலமையால் மன்னர்களைப் பாடிப்பரிசில் பெற்றனர். புலமையை மதிக்காதவர்களை இடித்துரைக்கவும் தயங்கவில்லை. மாறோக்கத்து நப்பசலையார் எனும் புலவர், நெடுந்தேரையுடைய அவியனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றமையை,

**'நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தித்**
**தன்புகழ் ஏத்தினென் ஆகஎன் வலத்து**
........................................
**கழைபடு சொலியின் இழைஅணி வாரா**
**ஒண்பூங் கலிங்கம் உடிஇ'** (புறம், பா.எ. 383)

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. இதில் மகளிரின் புலமையும் நுண்ணறிவும் வெளிப்படுகிறது.

## விருந்தோம்பல் :

சங்க மாந்தரிடத்தில் விருந்தோம்பல் ஓர் சிறந்த மரபாகக் கருதப்படுகிறது. இனக்குழுக்களாகத் தனித்து வாழ்ந்தவர்களிடையே, புதியவர் வரும்பொழுது அவர்களுக்கு ஓர் உற்சாகமும், மகிழ்வும் ஏற்படுவது இயல்பாகும். அதனால் வந்தோரை வரவேற்றல் ஒரு சமுதாயப்

பண்பாடாக, குடும்பத்தை மேலாண்மை செய்யும் இல்லக்கிழத்தியின் பணியாக விருந்தோம்பல் பண்பு மாறியது. விருந்து ஓம்பல் என்பது விருந்தினருக்கு ஏற்ற வகையில், நேரத்திற்கு உகந்தவாறு முகம் கோணாது நடந்து கொள்வதில் மகளிரின் நுண்ணறிவு இன்றியமையாததாகிறது.

சங்க மகளிர் நள்ளிரவு ஆயினும் விருந்தினர் வரின் அவர்களை முகம் மாறுபடாமல் வரவேற்று உபசரிக்கும் பண்பு உள்ளவர்கள் என்பதை,

**'அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்**
**முல்லை சான்ற கற்பின்**
**மெல்லியள் குறுமகள் உறைவின் ஊரே'** (நற்.பா.எ. 142)

என்றவாறு அறியமுடிகிறது. விருந்தோம்பலின் ஒவ்வொரு நிகழ்விலும் சங்க மகளிரின் நுண்ணறிவு புலப்படுகிறது.

## இல்லறப் பொறுமை காத்தமை:

சங்க கால மகளிரிடத்துப் பொறுமை என்ற பண்பு அதிகம் இருந்தது. மகளிர் அகவாழ்வு, புறவாழ்வு என்ற இரு நிலைகளிலும் பொறுமை காத்து நின்றமையும் அவர்களின் நுண்ணறிவினைக் குறிப்பிடுகிறது.

## தோழி :

தோழி சிறுவயதிலிருந்து தலைவியுடன் இருப்பவள். அவளை நன்முறையில் புரிந்து கொண்டிருப்பவள், தலைவியின் அகம், புறம் என்ற இரு நிலைகளில் ஏதேனும் துன்பம் ஏற்படுகின்றபோது அதனைத் தீர்ப்பவர்

புரிந்து கொள்ளலும், நுண்ணறிவும் உடைய ஒருவரால் மட்டுமே முடியும். அத்தகைய செயலைத் தோழி செவ்வனே செய்து வந்தமை அவளின் நுண்ணறிவினை வெளிப்படுத்துகிறது.

## தலைவியின் உயர்ந்த பண்பு:

களவு வாழ்வில் தலைவன், தலைவியின் அன்பு எல்லை கடக்கும்போது தலைவனால் பின்பற்ற இயலாத ஒழுங்குமுறைகளைத் தலைவி சீராகப் பின்பற்றுகிறாள். தலைவனே, தலைவியின் இவ்வுயர் பண்பினை எண்ணி வியந்தான். கடல் அளவு காமத்தால் வருந்தியும் கூட மடல் ஏற முற்படாத பெண்ணைக்காட்டிலும் பெருந்தன்மை மிக்கவள் வேறு யாருமிலர் என்று தலைவன் தலைவியைப் போற்றிப் புகழ்ந்தான். தலைவியின் இப்பண்பினை,

**'கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்**
**பெண்ணிற் பெருந்தக்க தில்'** (குறள் 137)

என்றவாறு போற்றுகின்றார் வள்ளுவர். களவுக்காலத்திலேயே இத்தகைய வியத்தகு பொறுமை கொண்ட தலைவியின் பெருந்தன்மையும் நுண்ணறிவும் கற்புக்காலததும் தொடர்கிறது.

இவ்வாறு பல்வேறு சூழல்களிலும் சங்க மகளிர் அக, புற வாழ்வியலில் நுண்ணறிவு மிக்கவர்களாகச் செயல்பட்டிருக்கின்றனர் என்பது சான்றுகளின் வழி தெளிவாகிறது.

இவ்வாறு ஒவ்வொரு நிலையிலும் சங்க மாந்தரின் நுண்ணறிவும் ஆக்கத்திறனும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

**முடிவுகள்:**

- சங்க மாந்தர்கள் அவர்கள் சார்ந்துள்ள சூழல், சமுதாயத்திற்கு ஏற்ற நுண்ணறிவுத்திறன் பெற்றிருந்தனர். பிறரின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு, அரவணைத்துச் செல்லும் பாங்கும் சங்க மாந்தரின் நுண்ணறிவினை வெளிப்படுத்துகின்றன.

- சங்க மாந்தர் அவரவர் தொழில் சார்ந்த இயந்திரங்களைத் தயாரித்தல், செயல்படுத்தல், பழுதுபார்த்தல் என்ற நிலையில் கருவி சார்ந்த நுண்ணறிவினைப் பெற்றிருந்தமை அவர்களது நுண்ணறிவிற்குச் சான்றாகின்றன.

- மனவயது, நுண்ணறிவு ஈவு கணக்கிடும்போது சிறுவர்கள் முதல் ஒவ்வொருவரும் சிறந்த செயல்திறன், ஆற்றல், வீரம், பண்பு ஆகிய நற்பண்புகள் பலவற்றைப் பெற்று விளங்கியமை தெளிவுபடுத்தப்பட்டுள்ளன.

- ஆடவர்களுடன் ஒப்பிடும்போது மகளிர் நுண்ணறிவு அதிகம் பெற்றுள்ளதாக, உளவியலரின் ஆய்வுகள் குறிப்பிட்டுள்ளன. அதன் அடிப்படையில் சங்க மகளிரின் நுண்ணறிவுத்திறன் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

## இயல் – 5

# சங்க மாந்தரின் ஆளுமையும் ஆளுமைக் கோட்பாடுகளும்

ஒருவரது ஆளுமைப்பண்பு ஒருவரை மற்றவர்களிடமிருந்து தனியே பிரித்துக் காட்டுகிறது. ஒரே இனம், பண்பாடு கொண்டவர்களிடம் சில பண்புகள் பொதுவாக இருப்பினும் தனிமனிதர்களையொட்டிச் சில பண்புகள் வேறுபடுகின்றன. பிற மனிதர்களிடம் உறவு கொள்வதன் அடிப்படையில் ஒரு மனிதனின் மெய்மைப்பண்புகள் வெளிப்படும். அவ்வாறு வெளிப்படும் பண்புகள் நேரியலாகவோ எதிர்மறையாகவோ பரிந்துரைக்கப்படுகின்றன. சமூக உறவுகளைக்கண்டு விலகிச் செல்வது ஒரு வகையில் அச்சம், கவலை மற்றும் தோல்வி மனப்பான்மை ஆகியவற்றின் விளைவாகக் கருதப்படுகிறது. பல்வேறு ஆளுமைப் பண்பின் கூறுகளில் மனிதனிடம் சில ஆளுமைப் பண்புகள் வெளிப்பட்டும், வெளிப்படாமலும் இருக்கின்றன. சில பண்புகள் சூழ்நிலையால் தாமதமாக வெளிப்படுதலும் உண்;டு. மனிதனிடமுள்ள பல்வேறு பண்புகளின் மொத்த அமைப்பே ஆளுமைப் பண்பாகக் குறிப்பிடப்படுகின்றன. இந்த ஆளுமைப் பண்புகள் சங்க மாந்தரிடத்து பல்வேறு நிலைகளிலும் காணப்பட்டன. சங்க மாந்தர்களின் ஆளுமை அறிவாண்மையாகவும் வெளிப்பட்டன. மெய்யியல் நோக்கில் ஆளுமை உள்ளம் சார்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. இன்றைய சூழலில் ஆளுமையை மேம்படுத்த ஆளுமைப்பயிற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. உளவியலர் வகுத்த ஆளுமை பற்றிய விளக்கங்களும் கோட்பாடுகளும் சங்க மாந்தரின் ஆளுமைப் பண்புகளுடன் பொருந்திக்

காணப்படுகின்றன என்பதனை விவரிக்கும் வகையாக இவ்வியல் அமைகிறது.

**ஆளுமை:**

ஆங்கிலத்தில் ஆளுமையைக் குறிக்கும் ‘பர்சனாலிடி’ என்னும் சொல், (Personality) இலத்தீன் மொழியிலுள்ள ‘பர்சொனா’ என்ற சொல்லிலிருந்து பிறந்தது. நாடக மேடையில் அக்காலத்தில் நடிப்பவர்கள் தாங்கள் ஏற்றிருக்கும் பாத்திரத்தின் இயல்புக்குத் தக்கபடி அணிந்திருந்த முகமூடியை ‘பர்ஸொனா’ என்ற இலத்தீன் சொல் குறித்தது. ஆளுமையைக் குறிக்கும் ‘பர்ஸனாலிடி’ என்ற சொல்லின் பொருள் ஒருவனது பண்புகளைக் குறிக்கும் வெளித்தோற்றம்’ என்பதாக இருந்தது. ஆனால் இன்று ஆளுமை என்பது ஒருவனிடம் காணப்படும் உடற்கவர்ச்சியின் அளவு என்று பலரும் குறிப்பிடுகின்றனர். பிறரைக் காட்டிலும் குறிப்பிட்ட ஒரு பண்பில் அல்லது திறனில் மிகச்சிறந்து விளங்குபவனை, சிறந்த ஆளுமையுடையோன் என்பர். ஆனால் உளவியலில் ஆளுமை எனும் சொல் மிகப் பரந்த பொருளுடையதாகும். ஒவ்வொரு தனி மனிதனிடமும் அவன் சமூகத்தில் எந்த நிலையிருப்பினும் ஆளுமையானது வெளிப்படுகிறது. (நாகராஜன். கி, க.உ,ப395)

ஆளுமையைப் பற்றி ஆல்போர்ட் எனும் உளஅறிஞர், ‘ஒவ்வொரு மனிதனிடமும் குறிப்பிட்ட ஒரு வகையில் அவனது உடல் மனப்பண்புகள் சேர்ந்து ஒருங்கமைத்திருக்கும். இவ்வொருங்கமைப்பின் இயல்பு மனிதனுக்கு மனிதன் சிறிதேனும் மாறுபட்டிருக்கும். தனிமனிதன் ஒருவன் தன் சூழ்நிலையில் எவ்வாறு செயல்படுகிறான் என்பது

இவ்வொருங்கமைப்பின் தன்மையைப் பொறுத்ததாகும். இத்தகைய உடல் மனப்பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பு ஒருவனது ஆளுமையாகும் என்று வரையறுக்கிறார். (மேலவர், மேலது ப.396) ஆளுமையைப் பொறுத்தவரை ஆல்போர்ட் முன்மொழிந்த வறையறையே மிகவும் சிறந்ததாகக் கொள்ளப்படுகிறது.

ஆளுமை என்பது "ஒருவரின் குறிப்பிட்ட குணாதிசயம் பற்றியதல்லாமல், அனேக சிறப்பியல்புகளின் சேர்க்கை" (தேவ்நாத், சி.எஸ்.வெற்றிதரும் ஆளுமை ஆற்றல், ப5) என்பர், 'ஒரு மனிதன் தன் பாரம்பரியத்தினாலும், சூழ்நிலையினாலும் பெற்றுள்ள உள்ளார்ந்த மனப்போக்குகள், உளத்துடிப்புகள், செய்முறைகள், உடல் வேட்கைகள் மற்றும் இயல்பூக்கங்கள் ஆகியவற்றின் தொகுப்பே ஆளுமையாகும். (...., Advanced General Psychology, P-218) மேற்காண் வரையறைகளின்படி ஆளுமை என்பது ஒருவரின் பண்பான நடத்தை மற்றும் சிந்தனை ஆகியவற்றைத் தீர்மானிக்கிற உள மற்றும் உடல்சார்ந்த அமைப்புகளின் மாறக்கூடிய நடத்தைகள் ஆகும்.

## மெய்யியல் நோக்கில் ஆளுமைப்பண்பு :

மனிதன் தனது சுற்றுச்சூழலுடன் தொடர்பு கொள்ளும்போது அவனது நான்கு பாகங்கள் அதில் பங்கு கொள்கின்றன. அவை அவனது உடல், உள்ளம், அறிவு மற்றும் தெளி உணர்நிலை ஆகும். இவற்றில் உள்ளம் அறிவுச் சாதனம் சுற்றுச்சூழல் தொடர்பால் இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கிறது. அந்த உள்ளம் அறிவுச் சேர்க்கை சரியான சமச்சீர் நிலையில் இருக்கும்போது மனிதன் தனது வாழ்க்கையிலும் அமைதியும்

நிம்மதியும் மகிழ்ச்சியும் பெறுகிறான். உள்ளம் அறிவில் சமச்சீர் இல்லாதபோது வாழ்க்கையில் அமைதியும் நிம்மதியும் கிடைப்பதில்லை.

மனிதனது உடல் அவனது ஆளுமையின் முதல் கட்ட வெளிப்பாடு. அதில் ஐந்து உணர்புலன்களும் (Organs of Perception) ஐந்து வினைப்புலன்களும் அடங்கியுள்ளன. அப்புலன்களின் வடிவமைப்பு ஒருவருக்கு ஒருவர் மாறுபட்டிருப்பினும் அவற்றின் நோக்கமும் செயலும் ஒன்றே ஆகும். நுட்பமான தெளிஉணர்நிலை ஒவ்வொருவரிடமும் உள்ளது.

உள்ளம் அறிவு இணை சாதனமே ஒருவருக்கொருவர் அமைப்பிலும் தன்மையிலும் மாறுபடுகிறது என மெய்ஞானிகள் தங்கள் ஆய்வின் மூலம் கண்டுள்ளார்கள். உள்ளம் என்பது உணர்ச்சிகள், எண்ணங்கள் ஆகியவற்றின் உறைவிடம். அறிவு என்பது நல்லது கெட்டது, சரி தவறு என்று வேறுபடுத்தி அறியக்கூடியது.

எனவே, உள்ளம் அறிவு ஆகியவற்றின் இயக்கம் ஒன்றுக்கொன்று மாறுபட்டது. ஒருவன் உணர்ச்சிகளால் ஆளப்படும்போது அவனது அறிவு மங்குகிறது. அறிவு முழுமையாக ஆட்டுவிக்கும்போது உணர்வுகள் அடங்குகின்றன.

## உள்ளத்தின் மூன்று நிலைகள்:

மனித உள்ளம் மூன்று வகையான எண்ண நிலைகளில் செயல்படுகிறது என்று மெய்யியல் வழி உளவியல் ஆய்வு தெரிவிக்கிறது. சத்வம் தூயது, சிறந்தது. ராஜசம் உணர்ச்சியும், வேகமும் உடையது.

தாமசம் மந்தமானது, செயல்வேகம் அற்றது. இந்த மூன்று எண்ண நிலைகளும் வெவ்வேறு விகிதத்தில் மனிதனிடம் இடம்பெற்று அவனது ஆளுமைப் பண்பினைத் தீர்மானிக்கின்றன. ஒரு மனிதனது பண்பு மற்றும் நடத்தைகளை அவனது உள்ளத்தில் நிலை கொண்டுள்ள இம்மூவகைப் பண்புகளுமே தீர்மானிக்கின்றன.

**தாமச குணம் :**

தாமச குணம் முழுமந்த நிலையில் உள்ளது. தேவையற்ற செயல்களில் ஈடுபடுவது எதைப் பற்றியும் கவலை கொள்ளாதது, குறிப்பிட்ட நோக்கத்தில் நிலைப்பாடோ, உணர்ச்சியில் நளினமோ, செய்கையில் சிறப்போ அற்றது ஆகும்.

**இராஜச குணம் :**

இராஜச குணம் எப்போதும் வேகமும், போர்க்குணமும், ஆசைகளும், உணர்ச்சிகளும், செயல்பாடுகளையும் உள்ளடக்கிய மனநிலை ஆகும்.

**சாத்வ குணம் :**

சாத்வ குணம் என்பது இம்மூன்றிலும் சிறந்தது. சமச்சீரான இன்பம், அமைதி, மனநிறைவு, ஆக்கப்பூர்வமான எண்ணம் செயல்பாடு நிறைந்தது.

இம்மூன்று வகைச் சிந்தனைகளும் மனித மனம் மற்றும் அறிவில் அடங்கி உள்ளன. மனதிற்கும் அறிவிற்கும் உள்ளவேறுபாடு அவற்றிற்குரிய செயலில் தான் உள்ளது. மனம் உணர்ச்சி மற்றும் உணர்வுகளின் இருப்பிடம், அறிவு பிரித்துணர்ந்து முடிவெடுக்கிறது.

மனிதனது வாழ்க்கைத் தொடர் அனுபவங்களாகவே அமைகிறது. சுற்றுப்புறத்திலிருந்து ஒரு தூண்டலைப் பெற்று அதற்குப் பதிலளிக்கும்போது ஒரு மனிதன் அனுபவத்தைப் பெறுகிறான்.

அனுபவிப்போர் பற்றிய ஆராய்ச்சி மெய்ஞ்ஞானிகளால் மேற்கொள்ளப்படுகிறது. அது வாழ்க்கையின் தரத்தை மேம்படுத்த உதவுகிறது. அனுபவிக்கப்படுவது பற்றி ஆராய்ச்சி விஞ்ஞானிகளால் மேற்கொள்ளப்படுகிறது. அது வாழும் தரத்தை மேம்படுத்த உதவுகிறது.

## உடலியல் ஆளுமை :

உடலியல் ஆளுமை நமது புலன்களைப் பொறுத்து அமையும். அவற்றின் வளர்ச்சிக்குச் சத்தான சமச்சீர் உணவு, கேளிக்கை, இசை, உற்றார் உறவினரின் பரிவு, பாசம், உழைப்பு ஆகியவை தேவை.

(சுந்தர சீனிவாசன்.எஸ், ஆளுமை மேம்பாடு, ப.18)

மனிதன் உயிர்வாழ இன்றியமையாத பொருள் உணவாகும். சங்க மாந்தர்கள் நல்ல உடல்வளம், வலிமை பெறுவதற்காக இயற்கையான உணவுப் பழக்கங்களை மேற்கொண்டிருந்தனர்.

## குறிஞ்சி நில மக்களின் உணவு:

சோழநாட்டுக் குறிஞ்சி நிலமக்கள் தேனையும், கிழங்கையும் உண்டார்கள். பிற நிலத்தாருக்கும் விற்ற மீன், நெய்யையும், நறவையும் வாங்கிச் சென்றார்கள் என்பதனை,

**'தேன் நெய்யோடு கிழங்கு மாறியோர்**

**மீன் நெய்யோடு நறவு மறுகவும்'** (பொருநர் பா.அ. 214 - 215)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

## பாலை நில மக்களின் உணவு:

வேட்டுவர்கள் புளியிட்டுச் சமைத்த சோற்றையும் ஆமாவின் சூட்டிறைச்சியையும் உண்டனர் என்பது,

**'எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு**
**தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவிர்"** (சிறு பா.அ. 175 - 177)

என்ற வரிகளால் அறிய முடிகின்றது.

## முல்லை நில மக்களின் உணவு:

நல்ல அரிசிச் சோற்றையும், காய்கறிகளையும் அதிகமாக உண்டனர். மேலும் இம்மக்கள் கரும்பும், அவலும் குறிஞ்சி நிலத்தார்க்கும் கொடுத்து மான் தசையைப் பெற்றுக் கொண்டனர்.

## நெய்தல் நில மக்களின் உணவு:

நுளைச்சி அரித்த கள்ளையும், உலர்ந்த குழல் மீனின் சூட்டிறைச்சியையும் உட்கொண்டனர்.

இந்த உணவுகள் அந்தந்த நிலத்தாருக்கு உரிய வலிமையைத் தருவதாக அமைந்தன. இத்தகைய இயற்கையான உணவுகளை உட்கொண்ட மக்கள் ஆற்றலுடன் திகழ்ந்தனர்.

பாணர், கூத்தர், விறலியர், பொருநர் ஆகியோர் பல்வேறு கலைகளைச் செய்வித்து மக்களை மகிழ்வித்தனர்.

பிரித்துணர்ந்து செயல்படுதல் புலன்களின் சீரான வளர்ச்சிக்கு முக்கிய தேவையாகும். இல்லையெனில் புலனுணர்ச்சிகளில் அளவுக்கு மீறிய ஈடுபாடு ஏற்பட்டு உடலில் சமச்சீர் பாதிக்கப்படும். ஆகவே, இயற்கையாகக் கிடைத்த உணவை அளவோடு உண்டு நல்ல ஆளுமையுடன் திகழ்ந்தனர்.

## ஆற்றல் ஆளுமை :

உடலியல் ஆளுமையை விட முக்கியத்துவம் கொண்டது ஆற்றல் ஆளுமை ஆகும். வளர்சிதை மாற்றம், ஆற்றல் வெளிப்பாடு ஆகியவற்றை அடக்கியது இது. (சுந்தரசீனிவாசன்.எஸ்., ஆளுமை மேம்பாடு, ப.18) இந்த ஆற்றல் ஆளுமையைத் திருவள்ளுவர்,

**‘படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு’** (குறள் : 381)

என்ற ஆறும் ஆற்றலும் உடையோனே அரசருள் சிறந்த ஆளுமை உடைய அரசன் என்கிறார்.

கரிகாலன் எனும் மன்னன் உலகை ஒரு குடையின் கீழ் வைத்து ஆண்டு வந்தான். குடிமக்களின்பால் குறையாத அன்பு கொண்டவன். அறம்கூர் நூல்களை அறிந்து, முறைப்படி ஆண்டு வந்தான். வெண்ணிப்போரில் பகைவர்களை வென்ற சிறந்த வீரன். தீமையிலாத ஆட்சியையும், ஆண்மையையும் பாராட்டுகின்றவன் என்பதை,

**‘ஒரு குடையான் ஒன்று கூறப்**
**பெரிதாண்ட பெருங்கேண்மை**

**அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்**

**அன்னோன் வாழி வெல்வேற் குரிசில்'**

(பொருநர், பா.அ. 228- 231)

என்ற அடிகளில் நல்ல ஆளுமைப்பண்பினை உடைய மன்னனின் மாட்சி வெளிப்படுகிறது. பல மன்னர்கள் சங்க காலத்தில் சிறந்த ஆளுமை பெற்றிருந்தனர் என்பதும், மன்னர்களின்றி மற்றைய மாந்தர்களும் மிகச்சிறந்த ஆளுமை பெற்றிருந்தமை சங்கமாந்தர் வாழ்வியலை அறியும்போது வெளிப்படுகிறது. நல்ல ஆளுமை உடையவர்களை இறைவனுக்கு ஒப்பாகப் போற்றினர் என்பது,

**'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன்'**

(பெரியாழ்வார் திருவாய்மொழி பா.எண் 34)

என்ற பெரியாழ்வார் பாடலடியால் உணரப்படுகிறது.

எனவே, நல்ல ஆளுமை உடையவர்கள் உலகில் நிலைத்தபேறு பெறுகின்றனர்.

**மன ஆளுமை :**

மனத்தை கட்டுப்படுத்துவது இதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. மன அமைதி, மனம் ஒன்றுதல், மனக்கட்டுப்பாடு, தன்னலமின்மை ஆகியவை இதன் சிறப்பிற்குத் தேவை.

**அறிவு ஆளுமை :**

இது தக்க அறிவினைப் பெற்று அதன்படி பகுத்துணர்ந்து சிந்தித்துச் செயல்படுவதைக் குறிக்கும். பொதுவான கல்வி மட்டுமின்றி,

அறநூல்களையும் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளையும், நல்ல இலக்கியங்களையும், தத்துவ மேதைகளின் நூல்களையும் படிப்பது, பேச்சுக்களைக் கேட்பது இவ்வகை ஆளுமை சிறக்க உதவுகின்றன.

(சுந்தர சீனிவாசன் எஸ்.ஆளுமை மேம்பாடு, ப18)

ஔவையாரின் அறிவுரையைக் கேட்ட அதியமான் நடத்தை இதற்குச் சிறந்த சான்றாகும். குடும்ப அமைப்பில் கணவனுக்கு அஞ்சி வாழும் மகளிருக்கு இடையில் அரசனுக்கு அறிவுரை கூறும் பெண்ணாக, மகளிர் வாழ்ந்திருக்கின்றனர். ஔவையாரின் உற்ற நட்பாக இருந்த அதியமான், தன்னைப் பகைத்தும் போர் செய்யக்கருதும் மன்னனுடன் போர் செய்வதற்குத் தயாராக இருந்த நிலையில், அடிக்கடி நிகழும் போர்களால் வீரர்கள் பலர் இறப்பதும், பொருள்கேடு உண்டாவதும் அவன் நினைவில் தோன்றி வருத்தியது. போரைச் செய்யாமல் நிறுத்தினாலும் அதனால் வரும் கேடும் அதியமான் அறிந்திருந்தான். குழப்பமான நிலையில் அதியமான் இருப்பதை உணர்ந்த ஔவையார், அதியமானுக்கு,

**‘மறப்புலி உடலின் மான்கணம் உளவோ!**
**மருளின விசும்பின் மாதிரத்து ஈண்டிய**
**இருளும் உண்டோ ஞாயிறு சினவின்!**
**அச்சொடு தாக்கிப் பார்உற்று இயங்கிய**
**பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய**
**அரிமணல் ஞெமரக் கல்பக நடக்கும்**
**பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ!**
**எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை**

**வழுவுஇல் வன்கை மழவர் பெரும**

**இருநிலம் மண்கொண்டு சிலைக்கும்**

**பொருநரும் உளரோ நீகளம் புகினே"** (புறம் பா.எ. 90)

என்று புலிமுன் மான் நில்லாதது போல, ஞாயிறு முன் இருள் நில்லாதது போல, அதியமான் முன் பகைவர் நிற்க இயலாது என்று அதியமானுக்கு ஔவையார் பல்வேறு சான்றுகளைக் கூறி அறிவுறுத்தினார். இவற்றைப் போன்ற பல்வேறு நிகழ்வுகள் அறிவு ஆளுமைக்குச்சான்றாக அமைகின்றன. சங்க மாந்தர்கள் ஆன்றோர்களின் அறிவுரையையும் சான்றோர்களின் வாழ்வியலையும் அறிந்து சிறந்த வாழ்வை எய்தினர்.

## மகிழ்வு ஆளுமை :

அமைதியோடும், மகிழ்ச்சியோடும் சமச்சீர் நிலைமையில் ஒருவர் இருப்பதை இந்த ஆளுமை குறிக்கிறது. இது உலகில் நடக்கும் போட்டி, பொறாமை, சிறுமை, சீரழிவு, போர், போராட்டம், துன்பங்கள் ஆகியவற்றைக் கொண்டும், கலங்காது அமைதியோடு திகழும் ஆளுமைப் பண்பாகும். (சுந்தரசீனிவாசன்.எஸ், ஆளுமை மேம்பாடு, ப19)

இந்த ஐந்து ஆளுமைப்பண்பின் கூறுகளிலும் உயர்ந்து விளங்கவேண்டுமென்றால் அதற்குத் தன் முயற்சி, தன்கட்டுப்பாடு, தன்னறிவு, தற்சாற்பு, தியாகம் ஆகியவை அவசியமாகின்றன.

உலகில் நாள்தோறும் நடக்கும் நிகழ்வுகள், தோன்றும் பொருள்கள், மனிதர்கள் முதலிய எதுவும் கட்டுப்பாட்டில் இல்லை. ஒருவரது எண்ணத்திற்கேற்ப எல்லாம் நடக்கவேண்டும் என்று நினைப்பது

அறிவுடைமை ஆகாது என்பர் சான்றோர். ஆனால் நடப்பனவற்றை முறையான கோணத்தில் பார்த்துத் தக்க எதிர்வினை அளிப்பது அவரவர் எண்ணத்தில்தான் உள்ளது. அதற்குச் சிறந்த பகுத்தறிவு, பிரித்துணர்வு, இயல்பறிவு தேவை. அவற்றை வளர்த்துக் கொண்டால் மகிழ்வான வாழ்வினை இயல்பாக அடைய முடியும்.

இவற்றிலிருந்து மெய்தான நோக்கில் நெடுங்காலமாக நமது முன்னோர் கண்டுவந்த ஆளுமைப்பண்பின் மேம்பாடு பற்றிய கோட்பாடுகளை சங்க மாந்தர் வாழ்வியலின் வழி அறிய முடிகிறது.

## ஆளுமையைப் பற்றிய உளவியல் கோட்பாடுகள்:

உளவியல் அறிஞர்கள் ஆளுமையைப் பற்றிய கோட்பாடுகளை வரையறுத்துள்ளனர். இந்த ஆளுமைக் கோட்பாடுகள் சங்க மாந்தரின் ஆளுமையுடன் பொருந்திக் காணப்படுகின்றன.

## சிக்மண்ட் பிராய்டின் உளப்பகுப்பாய்வுக் கோட்பாடு:

உளப்பகுப்பாய்வுக் கோட்பாட்டினர் (Psycho analysis) நனவிலி உளச்செயல்களின் செல்வாக்கினை சிறப்பாகக் குறிப்பிடுகின்றனர். நனவிலி மனதில் அடங்கியுள்ள பண்படா ஊக்கிகள், மனவெழுச்சிகள் முதலியவை ஒருவனது சிந்தனையையும், செயல்களையும் இவற்றின் அடிப்படையில் உருவாகும் மனிதனது ஆளுமையையும் தீர்மானிக்கின்றன. உளப்பகுப்புக் கோட்பாட்டினை உருவாக்கிய பிராய்டு என்பவரின் கருத்துப்படி, ஆளுமை அமைப்பு, தனித்தியங்கும் செயல்களையும் அதே சமயத்தில் ஒன்றோடொன்று இடைவினையாற்றி பாதித்துக் கொண்டதாகும். இவை முறையே இட் (ID) என்ற அடிநிலை மனம், தன்னுணர்ச்சியை

அடிப்படையாகக் கொண்ட ஈகோ (Ego) எனப்படும் நனவுநிலை மனம், சமூகப் பண்பாட்டுச் சூழ்நிலைகளால் உருவாகும் மேனிலை மனம் ஆகியவை ஆகும். (நாகராஜன்.கி, க.உ.ப409)

## அடிநிலை மனம் : (ID)

ஒரு மனிதனது நடத்தையின் இயல்பினையும், போக்கினையும் நிர்ணயிப்பதில் அவனது நனவிலி மனம் பெரும்பங்கு கொள்கிறது. அந்த நனவிலி மனதினை, நேரடியாக உணர முடியாது. இதில் பல்வேறு எண்ணங்கள், எழுச்சிகள், அனுபவங்கள், விருப்பங்கள் மறைந்துள்ளன என்கிறார் பிராய்டு. இதனை,

**'நனவின் வாரா நயனிலாளனைக்**
**கனவில் கண்டு, யான்செய்தது கேள்'**
**கனவினால் கண்டேன் தோழி காண்தகக்**
**கனவின் வந்தகாணல் அம்சேர்ப்பின்**
**நனவின் வருதலும் உண்டு'** (கலி. பா.எ. 128)

எனும் பாடலில், தலைவி தன் நனவிலி மனதில் உள்ள ஆசையான, தலைவனுடன் சேரும் விருப்பத்தைத் தன் கனவின் மூலம் கண்டு தலைவன் வருவான் என்று எண்ணுகிறாள்.

நனவிலி மனதில் நடக்கும் இந்நிகழ்வினையே அடிநிலை மனம் என்கின்றனர் உளவியலர். இந்நிலை ஆளுமையின் அடித்தளமாகும். இதிலிருந்து ஈகோ மற்றும் சூப்பர் ஈகோ எழுகின்றன. அடிநிலை மனம் சின்னஞ்சிறு குழந்தைகளிடமும் உள்ளது. மரபுநிலை வழியே பெறப்படும் அனைத்து ஊக்கிகளும் இதனுள் அடங்கும் என்பர். இவற்றுள் பாலூக்கம்,

பிறர்பால் வலுவந்தம் (Aggression) ஆகியவை ஆதிக்கம் பெறுபவை. அடிநிலை மனம் எனப்படும் அஃது நிலை மனம் அல்லது விலங்கியல் மனம் பிற மனநிலைகளின் இயக்கத்துக்குத் தேவைப்படும் சக்தியினைக் கொண்டது. இச்சக்தி லிபிடோ எனப்படும். இதிலடங்கிய இச்சைகள், தேவைகள் அனைத்தும் உடனடியாகக் கீழ்த்தரமான மகிழ்ச்சி பெறுதலை நோக்கமாகக் கொண்டவை. சூழ்நிலையின் உண்மை நிலைமை பற்றி அவை கவலைப்படுவதில்லை. எவ்வித வழிகளையும் பொருட்படுத்தாமல், தன் தேவைகளும் இச்சைகளும் நிறைவு செய்யப்படுவதொன்றையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படுவதாகும். இவை முழுவதும் நனவிலி நிலைப்பட்டவை ஆகும்.

சங்கத் தலைவி தான் கனவில் கண்ட நிகழ்வு உடனடியாக நடந்தேற வேண்டும் என எண்ணுவது இந்நிலைக்குப் பொருந்துமாறு உள்ளது.

## நனவு நிலை மனம் : (Ego)

தன்னுணர்வு நிலை எனப்படும் இது தொடக்கத்திலேயே தோன்றுவதில்லை. பின்னர் சூழ்நிலையின் உண்மை நிலைமைகளுடன் நடத்தை பொருந்திப் போக வேண்டிய தேவையின் காரணமாகவே 'ஈகோ' எழுகிறது. எனவே, இதன் செயல்கள் உண்மை நிலைமைக் கொள்கையைச் சார்ந்தது அமைபவை (.... Advanced General Psychology P-221) தலைவி தன்நிலை மறந்து தோழியை தழுவிக் கொண்டு மகிழ்ந்தனள். இதில் நனவிலி மனத்தின் நிலைப்பாட்டினைக் காணமுடிகிறது.

**'உயிரினும் சிறந்த நாணும் நனிமறந்து**
**உரைக்கல் உய்ந்தனனே தோழி! சாரல்**
**காந்தள் ஊதிய மணிநிறத் தும்பி**

**தீந்தொடை நரம்பின் முரலும்,**

**வான்தோய் வெற்பன் மார்பணங்கு எனவே'** (நற்.பா.எ. 17)

என்ற பாடலடிகளில் இயற்கைப் புணர்ச்சியால் தலைவனைக் கண்ட நிலையினை எண்ணி, அந்நிலையில் என்னுடைய நாணத்தையும் துறந்தேன். தலைவனது மார்பினைத் தழுவாத வருத்தத்தால் அழுததாக உரைக்க வாய்திறந்தேன். பின்னர் அதனை உரைக்காது காத்துக் கொண்டேன் என்பதில் கனவுநிலை மனம் வெளிப்படுகிறது.

அடிநிலை மனம் என்பதை அதன் இச்சைப்படி விட்டுவிட்டால் அதன் விளைவுகள் மிகவும் கடினமானதாக இருக்கும். எனவே, நனவுநிலை மனம் என்பது அடிநிலை மனத்தின் செயல்பாடுகளைக் கண்காணிக்கக்கூடிய தன்மையில் செயல்படுகிறது. எனவே, இது ஆளுமை நிர்வாகி போன்று செயற்படுகிறது.

## மேனிலை மனம் : (Super Ego)

மேனிலை மனம் சுமார் ஆறு வயதில் தொடங்குகிறது. சமுதாயத்தில் மதிப்புமிக்கவர்கள் வலியுறுத்தும் சமூக நடத்தை மதிப்புகள், தரங்கள், அறக்கோட்பாடுகள் முதலியவற்றைக் குழந்தை தன் மனத்துள் அமைத்தலால், இம்மேனிலை மனம் உருவாகிறது.

**'அரிதே காதலர்ப் பிரிதல் இன்றுசெல்**

**இளையர்த் தரூஉம் வாடையொடு**

**மயங்குஇதழ் மழைக்கண் பயந்த தூதே'** (நற்.பா.எ. 5)

என்ற பாடலில் தலைவன் பிரிவினால் உள்ளம் துன்புறும்போது தலைவியின் கண்ணீர் வெளிப்பாடு காணமுடிகிறது. இது மேனிலை மனத்தின்

வெளிப்பாடு ஆகும். தலைவன் பிரியும்போது தலைவி உடன் செல்லவும் இயலாது. துன்பத்தை ஏற்றுக் கொள்ளவும் இயலவில்லை. ஆகவே, இது வேறெந்தத் தீய நிகழ்வுகளுக்கும் இடம்கொடுக்காமல், கண்ணீர் சொரிந்து தன் மனத்தை அமைதிப்படுத்திக் கொள்கிறாள்.

மனச்சாட்சி (Conscience) வாழ்க்கைக் குறிக்கோள்கள் (Ego Ideals) ஆகியன மேனிலை மனத்தின் கூறுகளாகும். சமூகம் ஏற்காத அடிநிலை மனத்தின் ஊக்கிகளைத் தடை செய்தல், நல்லொழுக்கப் பண்புகளை நடத்தையினில் மேற்கொள்ள நனவுநிலை மனத்தைத் தூண்டுவது, குறைபாடுகளற்ற நிறைவினைப் பெறுதலை இலக்காக அமைத்துக் கொள்ளச் செய்தல் ஆகியன மேனிலை மனத்தின் செயல்பாடுகள் ஆகும். (..... Advanced General Psychology, P-221, 222). நினைத்தவற்றைச் செய்யத் தூண்டுவது அடிநிலை மனம் ஆகும். நினைத்தவற்றை ஆராய்ந்து செய்வது நனவுநிலை மனம். நினைத்தவற்றை ஆராய்ந்து அவற்றுள் தான் செய்யுமாற்றை உரைப்பது மேனிலை மனம் ஆகும். இந்த மூன்று நிலைகளும் இணைந்து செயலாற்றினால்தான் ஆளுமைச்சமநிலை ஒரு மனிதனிடத்தில் தோன்றும். இதனை இசைவான ஆளுமை வளர்ச்சி என்பர் உளவியலர். (நாகராஜன் கி, க.உ, ப411) இவை ஒன்றிற்கொன்று முரண்பட்டால் ஆளுமைச்சமநிலை சீர்குலைந்து ஆளுமை வளர்ச்சியில் சிக்கல்களைத் தோற்றுவிக்கும். இச்சிக்கல்களை ஒரு மனிதன் எவ்வாறு சமாளிக்கிறான் என்பதைப் பொறுத்து அவனது ஆளுமையின் தன்மை மாறுபடும் என்று பிராய்டு குறிப்பிடுகிறார். ஊக்கிகள் நடத்தைகளைத் தூண்டுகின்றன. இந்த நடத்தைகள் எழுவது தடைப்பட்டால் மனவிறைப்பு நிலை (Tension) தோன்றுகிறது. இதனை அகற்ற மேலும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு மனவிறைப்பு நிலை தவிர்க்கப்படுகிறது.

**ஆட்லரின் தனிநபர் உளவியல் : (Adler's Individual Psychology)**

சிக்மண்ட் பிராய்டுடன் தொடக்க காலக் குழுவினர்களில் முதன் முதலில் அவரோடு கருத்து வேறுபாடு கொண்டு பிரிந்தவர் ஆட்லர். ஒருவனிடத்தில் ஆளுமையின் தனித்தன்மையில், பாலூக்கத்தை விட ஆக்கிரமிப்பு அல்லது வலுவந்த ஊக்கத்தின் (Aggression) சக்தி, ஆளுமை வளர்ச்சியில், அடிப்படை இயல்பூக்கங்களை விடச் சமூக சக்திகளில் மிகுதியான செல்வாக்கு முதலியவற்றை ஆட்லர் வலியுறுத்தினார். தாழ்வுச்சிக்கல் (Inferiority Complex) எனும் கருத்தைத் தோற்றுவித்தவரும் இவரே ஆவார். இவரது கருத்தின்படி ஒவ்வொருவரும் குழந்தையாக இருக்கும்போது, பிறரைச் சார்ந்தே வாழ்க்கையைத் தொடங்குகிறோம். (........ Advanced General Psychology, p-227) என்கிறார். மனிதன் பல்வேறு செயல்பாடுகளிலும் பிறரைச் சார்ந்து வாழ்வது இன்றியமையாததாகி இருக்கின்றது.

சார்ந்து வாழ்தல் என்பது சங்க மாந்தரின் அறத்தொடு நிற்றல் என்பதனுடன் பொருந்தி நிற்கிறது. தலைவியானவள் குழந்தைப் பருவத்தில் செவிலியின் வளர்ப்பிலும், வளர்ந்த பின் தோழியைச் சார்ந்தும் வளர்கிறாள். தோழி செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் அறத்தொடு நிற்கின்றனர். தலைவி, வளர்ந்த பின் தனது ஒவ்வொரு சிக்கலிலும் தோழியையே சார்ந்து இருக்கின்றாள். தோழி செவிலித்தாயையும், செவிலித்தாய் நற்றாயையும் சார்ந்து உள்ளனர்.

சங்க காலத்தில் பொருளாதாரம் முழுக்க முழுக்க ஆணைச் சார்ந்தே அமைந்துள்ளது. பெண்ணின் இருப்பு ஆணைச் சார்ந்ததாகத் தற்சார்பு அற்றதாக இருந்துள்ளது. இதனால் தான்,

**‘வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்**

**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்’** (குறுந். பா.எ135)

எனப் பொருளீட்டும் வினை ஆடவர்க்கு உரியதாகவும், ஆடவர்கள் பொருளைச் சார்ந்தும், மகளிர் ஆடவரைச் சார்ந்தும் வாழ்கின்றனர் என இயம்புகிறது குறுந்தொகை.

ஆடவர் பொருளை ஈட்டுபவராகக் குடும்பத்தின் மைய அச்சாகச் செயற்படுகையில், அந்த மைய அச்சைச் சார்ந்து சுழலும் இயல்புடையவளாக மகளிர் இருந்துள்ளனர். இதனால் தான்,

**‘நீடிய வரம்பின் வாடிய விடினுங்**

**கொடியோர் நிலம்பெயர்ந் துறைவே மென்னாது**

**பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும்**

**நின்னூர்; நெய்தல் அனையேம் பெரும**

**நீயெமக்கு இன்னாதன பல செய்யினும்**

**நின்னின் றமைதல் வல்லா மாறே’** (குறுந். பா.எ.309)

எனத் தலைவி, பிடுங்கி எறியப்பட்ட வயலிலே மீளப்பூக்கும் நெய்தல் பூவைப் போலத் தலைவன் இன்னாதன பலவற்றைச் செய்தாலும் அவனைச் சாராமல் வாழ்வே இல்லை எனக் கூறும் நிலை ஏற்பட்டு உள்ளது.

**‘நீரின் றமையா வுலகம் போல**

**தம்மின் றமையா நந்நயந் தருளி**

**நறுநுதல் பசத்த லஞ்சிச்**

**சிறுமை யுறுபவோ செய்பறி யலரே’** (நற்.பா.எ.1)

எனவும் பெண்ணின் தற்சார்பின்மை, ஆடவரைச் சார்ந்து வாழ வேண்டிய நிலை என்பன உணர்த்தப்பட்டன.

குடும்பத்தின் தலைவன் எத்தகைய ஆளுமையை உடையவனாக இருக்கின்றானே, அத்தகைய ஆளுமைத் தன்மையை அவனைச் சார்ந்து வாழும் மகளிரின் வழி அவர்களுடைய குழந்தைகள் பெறுகின்றனர் என்பது ஆட்லரின் முடிவாகும்.

ஒருவர் தான் தாழ்நிலையில் இருக்கிறோம் என்று உணர்தலே, அவரை உயர்நிலையடைய முயற்சிக்க வைக்கிறது. இவ்வாறு முயற்சிக்கும் நடத்தை முதலில் குடும்பத்தில் தொடங்கிப் பின் வெளியுலக சமூக வாழ்விலும் தொடர்கிறது. ஒவ்வொரு மனிதனும் தனக்கேற்றவாறு தனித்தன்மையுடன் உயர்நிலையடைய முயற்சித்தலையே அவரது வாழ்க்கை முறை என்பர். (நாகராஜன்.கி, க.உ. ப414) இவ்வாறு உருவாகும் வாழ்க்கை முறை பொருத்தப்பாடு உடையதாகவோ அல்லது பொருத்தப்பாடற்றதாகவோ அமைகின்றன. வாழ்க்கை முறையை உருவாக்கிக் கொள்ளும்போது உலகைப்பற்றி மனிதன் ஏற்படுத்திக் கொள்ளும் தவறான அல்லது சிதைவுற்ற பொய்யான எண்ணங்கள்தான், பொருத்தப்பாடற்ற நடத்தைக்கு (Maladaptive Behaviour)அடிப்படைக் காரணமாகும். குழந்தை சிதைவுற்ற, பொய்யான எண்ணங்கள்தான், பொருத்தப்பாடற்ற நடத்தைக்கு (Maladaptive Behaviour) அடிப்படைக் காரணமாகும். குழந்தையின் பிறப்பு வரிசை நிலையும் ஒருவரது ஆளுமையை உருவாக்கும் காரணியாக அமைகின்றன.

## நனவு அனுபவ இயல் மற்றும் மனிதவியல் கருத்துக்களைச் சார்ந்த ஆளுமைக் கொள்கைகள் : (Phenomenological & Humanistic Theories)

தன்னையே தானுணர்ந்து ஏற்றுக் கொள்ளுதலை வலியுறுத்துதலை வலியுறுத்தும் கொள்கையை கார்ல் ரோஜர்ஸ் எனும் உளவியலர் குறிப்பிடுகிறார். (நாகராஜன்.கி. க.உ.ப415) ஒவ்வொருவரும் தனது உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் முழுமையாகவும் நிபந்தனைகள் இன்றியும் ஏற்றுக் கொண்டால்தான், இசைவுள்ள ஆளுமையை ஒருவரால் பெறமுடியும் என்பது ரோஜர்ஸ் கருத்தாகும்.

சங்க மாந்தர்கள் தன்னுடைய அறிவுத்திறனைப் பயன்படுத்தி அகத்தையும் புறத்தையும் அதாவது இல்லறத்தையும், சமுதாயத்தையும் சிறந்த முறையில் நெறிப்படுத்தி ஆண்டு வந்தனர். அன்பு, அறிவு, பொறுமை, அடக்கம், விருந்தோம்பல், நிர்வாகம், இல்லறம், வீரம், கற்பு, உறுதி, தெளிவு, மனத்திண்மை, இனியவை கூறல், போர் நெறி, மக்களைப் பேணல் ஆகியவற்றில் சங்க மாந்தரின் திறமான ஆளுமை வெளிப்படுகிறது. இந்த திறமான ஆளுமை வெளிப்பாட்டிற்குக் காரணம் சங்க மாந்தர்கள் நனவு உணர்ச்சிகள், அனுபவங்களை முழுமையாக வெளிப்படுத்தியவை ஆகும்.

## மகளிர் மண நிகழ்வினை முன்னின்று நடத்தியமை:

மகளிரின் ஆளுமைத் தன்மை சங்க காலத்தில் இருந்தமைக்கும் சங்கப் பாடல்கள் சான்றமைகின்றன. நாட்டை ஆளும் மன்னனுக்கு அறிவுரை பகருவோராகவும், ஒரு சமூக ஏற்பாக அமைக்கப்படும் திருமண நிகழ்வு பெண்களின் தலைமையில் நடைபெற்றது என்பதும் அவர்களது ஆளுமைத் தன்மையை வெளிப்படுத்துகின்றன.

பெண்கள் இயல்பாகவே மென்மைத் தன்மை உடையவர்கள். இத்தகையவர்கள் தன் உரிமை பறிக்கப்படும் போதும், தனக்குரிய பணியை நிறைவேற்றும் நேரங்களிலும் மேம்பட்ட ஆளுமைத் திறன் பொருந்தியவர்களாக விளங்கியிருக்கின்றனர்.

இத்தகைய ஆளுமைத் தன்மை பொருந்திய மகளிர் சங்க காலத்தில் அவைக்கு முந்தியிருந்து திருமணத்தையும் நடத்தினர். திருமணத்தை நடத்தும் மகளிர் அனைவருக்கும் முன்னோடியாகவும் அறிவாலும், வயதாலும் முதிர்ந்த அறநூலும் நீதிநூலும் சொல்லும் செம்மையான நெறியில் மங்கல மகளிர் முன்னின்று மணம் புரிவித்தனர்.

சிறந்த செங்கோலாட்சி செலுத்தி, மக்களை நல்வழியில் வாழ வைக்கும் வேந்தனை,

**‘முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும்’** (குறள் 388)

எனப்போற்றுகின்றார் திருவள்ளுவர் இவ்வேந்தன் குடிகட்கு இறைவனைப் போல இருப்பான். அதுபோல மணம்புரிவிக்கும் மங்கலப்பெண்டிர் போற்றப் பெற்றனர். இதனை,

**‘கேடில் விழுப்புகழ் நூடலை வந்தென**
**உச்சிக் குடத்தர் புத்தல் மண்டையர்**
**பொதுசெய் கம்பலை முழுசெம் பெண்டீர்**
**முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்**
**புதல்வர் பயந்த திதலை அவ்வயிற்று**

**வாலிழை மகளிர் நால்வர் கூடிக்**

**கற்பினன் வழாஅ நற்பல உதவிப்**

**பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென**

**நீரொடு சொரிந்த பிணையை ஆகென**

**நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி**

**பல்லிருங் கதுப்பின் நெல்லோடு தயங்க**

**வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்**

**கல்லென் நன்மணம் கழிந்த பின்றைக்**

**கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து**

**பேர் இற்கிளத்தி ஆகெனத் தமர்தர'** (அகம். பா.எ. 86)

என்றும், மேலும்,

**'கடிநகர் புனைந்து கடவுள் பேணிப்**

**படுமண முழவொடு பருவப்பணை இமிழ**

**வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்**

**பூக்கணும் இமையோர் நோக்குபு'** (அகம், பா.எ136)

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. இவற்றிலிருந்து மகளிர் மென்மைத் தன்மை உடையவராயினும் தனக்குரிய நேரங்களில் மிகச்சிறந்த ஆளுமைத் தன்மையுடன் விளங்கியிருக்கின்றனர் என்பது தெளிவாகிறது. முன்னோர் வழிவழி வந்த இந்த மரபுநிலை சார்ந்த அனுபவங்களை வெளிப்படுத்தும் நிலையில் தங்களது ஆளுமையை முழுமையாக வெளிப்படுத்தினர். இதனால் இம்மகளிரது முழுமையான ஆளுமைத் தன்மை இவ்விடங்களில் வெளிப்பட்டுள்ளது.

இளம்பருவத்தில் பிறரிடமிருந்து அன்பினையும் பாராட்டினையும் பெறச்சில நிபந்தனைகட்கு உட்பட்டு நடந்து கொள்வது இயல்பான போக்கினின்றும் மாற்றி, தற்கருத்துக்கும், அனுபவங்களுக்கும் இடையே முரண்பாட்டினைத் தோற்றுவிக்கும். ஆகவே, எவ்வித நிபந்தனைகட்கும் உட்படாமல் இயல்பாகச் செயற்படும் மனிதனிடத்தில் அவனது இயல்பான ஆளுமைப்பண்பு வெளிப்படுகிறது.

மனிதன் இயல்பாகவே வளர்ச்சியையும், பிறருடன் ஆக்கப் பூர்வமான, மகிழ்ச்சியான தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்வதும் சங்க மாந்தர்களிடம் இயல்பாகவே இருந்து வந்துள்ளது. தற்காலத்தில் நல்ல ஆளுமையைப் பெறுவதற்காக பல்வேறு பயிற்சிகளையும் முயற்சிகளையும் மக்கள் மேற்கொண்டு வருகின்றனர். இதற்கு உளவியல் நிபுணர்கள் வழிகாட்டுகின்றனர்.

**ஆபிரகாம் மாஸ்லோ கொள்கை:**

ஆபிரகாம் மாஸ்லோ என்பாரது கொள்கையும் மனிதவியல் சார்பினைக் கொண்டதாகும். தன் முழுத்திறன் வளர்ச்சியில் ஒவ்வொருவனுக்கும் நாட்டம் உண்டு எனவும், மனித வாழ்க்கையில் மகிழ்ச்சி, உற்சாகம், அன்பு முதலியவற்றையும் மாஸ்லோ வலியுறுத்துகிறார். மனிதத் தேவைகளை பலநிலைகளாகக் குறிப்பிடும் இவர் ஆதாரத்தேவைகள் நிறைவு பெற்றால்தான் உயர்நிலைத் தேவைகள் எழும் என்கிறார். தன்னிடம் உள்ளமைந்துள்ள ஆற்றல்களை முழுமையாக வளர்த்துக் கொண்டு முழுமை பெற்றவனாக விளங்குவதே ஆளுமையின் உயர்வளர்ச்சி நிலை என்றும், இத்தகைய ஆளுமையைப் பெற்றவனிடம் இயல்பான, சுதந்திரமான, ஆக்கத்திறன் மிகுந்த நடத்தை காணப்படும் என்றும் மாஸ்லோ குறிப்பிடுகிறார்.

## ஒருமைப்பாடுடைய ஆளுமை : (Integrated Personality)

ஒருவரது ஆளுமையில் நேர்மையான இசைந்த முழு வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தால் ஒருமைப்பாடுடைய ஆளுமையைப் பெற முடியும். ஒருமைப்பாடுடைய ஆளுமையைப் பெறுவதற்கு அடிப்படைத் தேவைகள் நிறைவுறுதலும் மனவெழுச்சிச் சமநிலையும், பொருத்தப்பாடுடைய நடத்தையையடைதலும் அவசியம் ஆகும். ஹர்லாக் என்பவர் கூற்றுப்படி, 'ஒருவர் தன்னுடைய தேவைகள், விருப்பங்கள், எதிர்ப்பார்ப்புகள் ஆகியவற்றை சமூகம் ஏற்றுக் கொள்ளும் வகையில் நிறைவு செய்து கொள்ளும் திறமையே ஒருங்கிணைந்த ஆளுமை ஆகும். (கலைச்செல்வி. வெ.மணிவண்ணன்.மா, வ.அ.ப. ப146, 147).

ஒருங்கிணைந்த ஆளுமை என்பது அறிவு வளர்ச்சி, மன உணர்வு வளர்ச்சி மற்றும் செயல்திறன் வளர்ச்சி ஆகிய மூன்றும் சமச்சீரான வளர்ச்சி பெற்றிருக்கும் நிலையைக் குறிப்பதாகும்.

ஒருங்கிணைந்த ஆளுமை பெறுவதற்கு ஆண், பெண் என்ற வேறுபாடு இல்லை. சிறந்த ஆளுமை பெற்றவர்கள் உலகில் நீண்ட காலம் நிலைத்து நிற்க முடியும் என்பதற்கும் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் சான்றோர்களும் ஆன்றோர்களும் சிறந்த சான்றுகளாவர்.

### ஔவையார்:

ஔவையாருக்கு அன்று சமூகத்தில் தனிமதிப்பு இருந்தது. தனிமதிப்பிற்குக் காரணம் சிறந்த அறிவாற்றலும் செயலாற்றலும் இணைந்த ஆளுமை ஆகும்.

அரசியலில் ஔவையார் பேச்சுக்கு எதிர்ச்சொல் இல்லை. அவர் அரசர்களால் வரவேற்கப்பட்டார். பகைவனும் தன் பகைமையை விட்டு ஒழிக்கும்படி செய்யும் வாய்த்திறமை அவருக்கு இருந்தது. அறிவும் திறமையும் இருந்த அவருக்குச் சென்றவிடமெல்லாமல் சிறப்பு. 'நல்லநாடு என்பது நல்லவர் ஆளுவதால் தான். நல்லவர் வாழ்வதால் தான்', (தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை (பெண் புலவர் களஞ்சியம், ப. 34) என்பது, ஔவையின் வாக்காகும். இவரின் அறிவும், அறிவுரையும் மேலும் நீண்ட நாள் மக்களுக்கு வேண்டும் என்று எண்ணிய அதியமான் என்ற அரசன், நீண்ட நாள் வாழ வைக்கும் அழகிய தீங்கனியாம் நெல்லிக்கனியை ஈந்து உவந்தான் என்கிறது புறநானூற்றுப்பாடல்.

**'பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின்னகத்து அடக்கிச்**
**சாதல் நீக்க எமக்கு ஈந்தனையே'** (புறம் பா.எ. 91)

**'கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி**
**அமிழ்து விளை தீங்கனி ஔவைக்கு ஈந்த**
**உரவுச் சினங் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவுக் கடல்தானை அதிகனும்** (சிறு, பா.அ. 100 - 104)

என்ற பாடலடிகள் மூலம், அதியமான் ஔவைக்கு நெல்லிக்கனி ஈந்தவன் என்பதை அறியமுடிகிறது. ஔவையாரின் சிறந்த ஆளுமைத்திறத்தால் மட்டுமே இந்நெல்லிக்கனி கிடைக்கப் பெற்றார்.

## அதியமான் நெடுமான் அஞ்சி:

அதியனின் அவைப்புலவராக விளங்கிய ஔவையார், அதியனின் ஆற்றலையும் ஆளுமையையும் புறநானூற்றில் பாடி உள்ளார். அதியமானின் ஆற்றலை ஒருநாளில் எட்டுத்தேர் செய்யும் தச்சனோடு ஒப்பிடுகிறார்.

**‘களம்புகல் ஓம்புமின் தெவ்விர் போர்எதிர்ந்து**

**எம்முளும் உளன்ஒரு பொருநன் வைகல்**

**எண்தேர் செய்யும் தச்சன்**

**திங்கள் வலித்த கால்அன் னோனே’** (புறம் பா.எ. 87)

என்ற பாடலடிகளில் அதியமானின் ஆற்றலை வெளிப்படுத்திய ஔவை, அதியனைப் பற்றி எவற்றைப் பாடினாலும் அவனுடைய வீரமே அவருக்கு முன்வருகிறது. அவன் போர்முரசு கேட்டுவிட்டால் துடித்து எழும் உள்ளம் உடையவன். தண்ணுமை காற்றில் அசைந்தால் அவ்வொலி ‘போர்முரசு ஒலியாக எழும் வீரஞ்செறிந்தவன், அதியனிடம் அது வீரஎழுச்சி ஊட்டும் என்கிறார். இதனை,

**‘மறப்புலி யுடலின் மான்கண முளவோ**

**மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய**

**இருளு முண்டோ ஞாயிறு சினவின்**

**அச்சொடு தாக்கிப்பார் உற்று இயங்கிய**

**பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய**

**வரிமணல் ஞெமரக் கல்பக நடக்கும்**

**பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ**

**எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை**

**வழுஇல் வன்கை மழவர் பெரும**

**இருநிலம் மண்கொண்டு சிலைக்கும்**

**பொருநரும் உளரோ நீகளம் புகினே'** (புறம். பா.எ. 90)

என்ற பாடலடிகளில் அதியமானின் வீரமும் அவனது ஆளுமையும் வெளிப்படுகின்றன.

## தோழியின் ஆளுமை வெளிப்பாடு:

சங்க காலத்தில் தோழி சிறந்த ஆளுமை உடையவளாகவும், தலைவன், தலைவியைப் பல்வேறு சூழல்களில் ஆற்றுப்படுத்துநராகவும் விளங்கி, ஒருங்கிணைந்த ஆளுமை உடையவளாக விளங்கி இருக்கின்றாள். தோழி தானே செவிலி மகளே ( தொல்.பொருள், களவியல் நூ.35) எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

தலைவியின் வாழ்வுக்காகப் பெரிதும் உதவுபவள் தோழி, தலைவனிடம் சென்று குறை நயத்தல், தோழியின் செயல்பாடு, தாயாரிடம் அறத்தொடு நிற்றல் என்பது இற்செறிப்பு, வெறியாட்டு என்பனவற்றுக்குப்பின் நிகழும் முக்கியச் செயற்பாடாகக் காதலைத் தாயாருக்கு வெளிப்படுத்தும் அறநெறியாக அமைந்துள்ளது.

'காதல் பெற்றோரால் இயல்பாக அறியப்படாத நிலையிலும் அது மரபுக்கு முரணானது என அறியப்பட்ட நிலையிலும் அறத்தொடு நிற்றல் சங்க இலக்கியத்தில் பெற்றுள்ள அழுத்தமான செயற்பாடு (மாதையன் பெ, சங்க இலக்கியத்தில் குடும்பம், ப26) என்று கூறப்படுகிறது.

மேலும், தலைவியின் உடன்போக்கில் உதவி செய்தல், தலைவனை வரைவுக்கு வற்புறுத்தல், தலைவன் பிரிவால் வாடும் தலைவியை ஆற்றுவித்தல், பரத்தைக்காகப் பிரிந்து சென்ற தலைவன், திரும்பித் தலைவியைச் சந்திக்க வருகின்றபோது தோழி வாயில் மறுத்தல் எனப் பல நிலைகளில் திறமையாகச் செயல்படுகிறாள் தோழி. சங்க இலக்கியங்களும் இலக்கணமும் தலைவிக்கும் தலைவனுக்குமான உறவுப்பாலமாகத் தோழி சிறந்த ஆளுமையுடன் செயற்பட்டதைச் சுட்டுகின்றன.

தலைவனைப் போல், தலைவியர் களவு வாழ்க்கையை நீட்டிக்க விரும்பவில்லை. அதனைக் கற்பாக்கி இல்லற வழிப்படும் எண்ணம் உடையவர்களாகவே தோழியும் தலைவியும் உள்ளனர். இதனால்தான் வரைவுகடாவுதல் பற்றிய கூற்றுப்பாடல்கள் சங்க இலக்கியத்தில் மிகுந்து காணப்படுகின்றன. இற்செறிப்பில் ஆற்றாத தலைவியைக் கண்டு தோழி வருந்தி வரைவுக்கு முயல்கிறாள். இதனை,

**'முரிந்த சிலம்பின் நெரிந்த வள்ளியின்**
**புறன் அழிந்து ஒலிபெரும் தாழ்இருங் கூந்தல்**
**ஆயமும் அழுங்கின்று யாயும்அஃது அறிந்தனள்**
**அருங்கடி அயர்ந்தனள் காப்பே எந்தை**
**வேறு பன்நாட்டுக் கால்தர வந்த**
**பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்**
**கலிமடைக் கள்ளின் சாடி அன்னஎம்**
**இளநலன் இற்கடை யொழியச்**
**சேறும் வாழியோ முதிர்கம் யாமே'** (நற்.பா.எ. 295)

என்ற நற்றிணைப் பாடல் விளக்கியுள்ளது. மேலும், குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகியவற்றில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

இவை களவைத் திருமணத்தின் நிறைவுறுத்திக் கற்பாக்க வேண்டி முயன்ற தோழியர்தம் மனநிலை வெளிப்பாடுகளாக உள்ளன.

களவை முற்றும் மறைத்தோ அன்றிச் செவ்விதாக வெளிப்படுத்தியோ எப்படியும் பெற்றோரின் இசைவையும் வாழ்த்தையும் பெறுவது பெண்ணாட்களுக்கு இருந்தது. (மாணிக்கம் வ.சுப., தமிழ்க்காதல், ப130) என வ.சுப.மாணிக்கம் கூறும் மனநிலையினராகவே தோழி இருந்துள்ளாள். தலைவனுக்கு இச்செறிப்பை அறிவிப்பதும், சிறைப்புறமாக இருக்கும் தலைவனுக்குத் தலைவியின் இல்லிருப்பை உணர்த்துவதும், உடன்போக்கை வலியுறுத்தி அதை மேற்கொள்ளச் செய்வதும், வரைவுகடாவித் திருமணம் செய்து கொள்ள வேண்டுவதும், பகற்குறி, இரவுக்குறி மறுத்துரைப்பதன் மூலம் திருமணத்தை வலியுறுத்துவதும், நொதுமலர் வரவுணர்த்தி வரைவுகடாவுவதும் வரையாது வருபவரை வரைந்து கொள்ளச் சொல்லி அறிவுறுத்துவதுமான களவினைக் கற்பாக்கும் செயல்களில் தோழியின் ஒருங்கிணைந்த ஆளுமை வெளிப்படுகிறது.

ஒருவர் வலிமை பெற்றவராகவும், உடல்நலம் கொண்டவராகவும் மனவிறைப்புப் பெற்றவராகவும், நிலையான மனவெழுச்சி பெற்றவராகவும், எல்லாச் சூழ்நிலைகளிலும் பொருத்தப்பாடுடையவராகவும் விளங்கும்பொழுது அவர் முழு ஆளுமை பெற்றவராகக் கருதப்படுகிறார். (கலைச்செல்வி. வெ, மணிவண்ணன். மா, வ.அ.ப, ப146) எனவே, ஆளுமை என்பது பல்வேறு பண்புக் கூறுகளை உள்ளடக்கியது. ஒருமைப்பாட்டுடைய ஆளுமை என்பது சமநிலைப்பட்ட ஆளுமையாக இருக்கும். இத்தகைய ஒருமைப்பாட்டு ஆளுமை உடையவரிடம் உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, சமூக வளர்ச்சி, மனவெழுச்சி முதிர்ச்சி, சமயப்பற்று, நுண்ணறிவு

வளர்ச்சி, நேர்மை, உண்மை, மகிழ்ச்சி, பொருத்தப்பாடுடைய நடத்தை, தற்கருத்து, சுதந்திரப்போக்கு, விரும்பத்தக்க மனப்பான்மை முதலிய பண்புகளும் காணப்படுவதால் இவர்கள் சமூகத்திலும் நிலைத்த தன்மை உடையவர்களாக விளங்குகின்றனர்.

ஒருமைப்பாடுடைய ஆளுமையை அடைவதற்கு அடிப்படைத் தேவைகள் நிறைவுறுதலும், மனவெழுச்சிச் சமநிலையும், பொருத்தப்பாடுடைய நடத்தையையடைதலும் அவசியமாகும். இத்தேவைகள் நிறைவுபெறாவிடில் விறைப்பு நிலையைத் (ஜிமீஸீடீவீஷீஸீ) தோற்றுவிக்கும். இத்தேவைகள் நிறைவுபெறின், சமநிலையையும், பொருத்தப்பாட்டினையும் அடைய முடியும். இல்லையெனில் சமன்பாட்டுப் பிறழ்வையும், பொருத்தப்பாடின்மையையும் அடைந்து துன்புறுவர். இத்தகைய ஆளுமைப் பிறழ்வினைப் போக்குவதற்காகக் குழந்தை கருவில் உருவான காலகட்டத்தில் இருந்தே பல்வேறு பயிற்சிகளும், முயற்சிகளும் வழிகாட்டுதல்களும் இன்றைய காலகட்டத்தில் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

## காட்டலின் பண்புநலன் கோட்பாடு:

ஒருவரது ஆளுமைப்பண்பில் உடல், உள்ளம், அறிவு அனைத்தும் இடம்பெறுகின்றன. “குறிப்பிட்ட காலகட்டத்தில் குறிப்பிட்ட மனிதர் எவ்வாறு நடந்துகொள்வார் என்பதை அவரது ஆளுமைப்பண்பின் அடிப்படையில் அறிய முடியும்” (சுந்தர சீனிவாசன்.எஸ், ஆளுமை மேம்பாடு, ப9) என்பது காட்டலின் கருத்தாகும்.

ஆளுமைப்பண்பினை வெவ்வேறு முக்கியப் பண்புக்கூறுகளாகப் பிரித்து, அவை ஒருவரது மரபு மற்றும் சுற்றுச்சூழல் இரண்டையும் சார்ந்தது

என்பது அவர் விளக்கமாகும். கோர்டன் ஆல்போர்ட் பாரம்பரியத்திற்கும், ஹென்ரி முர்ரே சுற்றுச்சூழலுக்கும் ஆளுமைப் பண்பில் முக்கியத்துவம் அளித்தார்கள். இவர்களது கோட்பாடுகள் ஆளுமைப் பண்பினை மதிப்பிடப் பெரிதும் உதவுகின்றன என்பர்.

அன்பு, அறிவு, பொறுமை, அடக்கம், குடும்ப மேலாண்மை, விருந்தோம்பல், இல்லறம், வீரம், போர், கற்பு, உறுதி, தெளிவு, கொடை, மனத்திண்மை, இனியவை கூறல், மக்களைப்பேணல், காரணம் கற்பித்தல், புலன்காட்சி போன்ற பலவற்றிலும் (....... Applied General Psychology, P-268, 269) மனிதனின் ஆளுமைத் தன்மை வெளிப்படும் என்கிறார். காட்டல் கூறிய மரபு மற்றும் சுற்றுச்சூழல் சார்ந்த பண்புநலன்கள் அனைத்தும் இயல்பாகவே சங்க மாந்தர்களின் பழக்கவழக்கங்களிலும், செயல்பாடுகளிலும் பொருந்தி நிற்கின்றன.

## அன்பு:

ஆளுமைப்பண்புகளில் முதன்மையாகத் திகழ்வது அன்பாகும். சங்கப் பாடலொன்றில், தலைவி தன் தலைவன்மீது கொண்ட அன்பை வெளிப்படுத்தி, எத்தனைப் பிறப்பு எடுத்தாலும் அவனையே அன்புக் கணவனாக அடைய வேண்டும் என்று விரும்புகிறாள். இதனை,

**'இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயாகியர் என் கணவனை**
**யானாகியர் நின்நெஞ்சு நேர்பவளே!** (குறுந், பா.எ49)

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் விளக்குகின்றன. அன்புடை நெஞ்சங்கள் நம்மை இணைத்து என்று தலைவன் மனைவியாகிய தலைவியிடத்து,

**“யாயும் ஞாயும் யாராகியரோ**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்”** (குறுந்.பா.எ.40)

என்ற குறுந்தொகைப் பாடலில், எனது தாயும் உனது தாயும் யாரோ, எம் தந்தையும் நும் தந்தையும் எத்தகு முறையுடையவர். நீயும் நானும் எவ்வழி அறிவோம்? ஆனால், நமது அன்பு நெஞ்சம் கலத்தலைக் குறிப்பிடுமிடத்துத் தலைவியும் ஒத்த அன்புடையவளாக விளங்கியதை உணர்த்துகிறது. தான் தன் வீட்டில் உண்ட தேன்கலந்த பாலினும், தன் தலைவனுடன் சென்று பாலைநிலத்தில் மான் உண்டு எஞ்சிய சின்னீரைப் பருகுவதையே பெரும் பேரின்பமாகத் தலைவி கருதுவாள் என்று ஐங்குநுறூற்றுப் பாடல் தலைவியின் ஆளுமைப் பண்பான அன்பைக் கூறுகிறது.

கணவன் மனைவி அன்பு, தோழியிடம் கொண்ட அன்பு, தோழி தலைவியிடம் கொண்ட அன்பு, தாயார் அன்பு, தாயாரிடம் தலைவி செலுத்திய அன்பு, பிற சூழல்களில் உள்ள அன்பு ஆகிய அனைத்தும் மிகச்சிறந்த தலைமை மனிதப்பண்பு என்பதனை அறிய முடிகிறது.

## அறிவு :

மானுடம் வளர்க்கும் வகையில் ‘அறிவு’ சிறந்த பண்பாகத் திகழ்கிறது. ‘அறிவுடையார் எல்லாம் பெற்றிருப்பர்’ என்று வள்ளுவம் கூறுகிறது. அவ்வகையில் அறிவிற் சிறந்த மாந்தர்கள் சங்க காலத்தில் வாழ்ந்துள்ளனர். மகளிரும் அறிவிற் சிறந்து விளங்கியிருக்கின்றனர். இதற்குப் பெண்பாற் புலவர்கள் சான்றாகின்றனர். நாற்பத்தைந்து பெண்பாற் புலவர்கள் 190 பாடல்களைச் சங்க இலக்கியத்தில் பாடியுள்ளமை இதற்குச் சான்றாகும்.

புறத்திணைகளுள் வெட்சி, கரந்தை, தும்பை, வாகை, பாடாண் பொதுவியல் ஆகிய ஆறு திணைகளிலும் பாடும் கல்வியறிவு பெற்று உள்ளனர். முல்லைத்திணை ஒன்றை மட்டும் மிகுதியாகப்பாடிய பெண்பாற் புலவர் என்ற பெருமை ஒக்கூர் மாசாத்தியாரைக் குறிக்கின்றது. பொறுமை என்ற நேரியல் பண்பு சங்க கால மகளிடரித்தும் அதிகம் காணப்பட்டது. தான் விரும்பிய தலைவன் மணமுடிக்கக் காலந்தாழ்த்திய இடத்தும், கற்பு வாழ்க்கையில் பொருள்வயிற் பிரிந்த தலைவனோ, பகைமேற் சென்றவனோ சொல்லிச்சென்ற காலத்து வராது காலம் தாழ்ந்த இடத்தும் பொறுமை காத்தனர்.

## விருந்தோம்பல்:

விருந்தோம்பல் என்ற ஆளுமைப்பண்பு நேரியல் பண்பு ஆகும். அப்பண்பினை சங்க மாந்தர்கள் பெரிதும் போற்றியுள்ளனர். விருந்தோம்பலைத் தான் தன் வாழ்வின் பயனாகவும், உயிராகவும் போற்றி உள்ளனர். சாவினைத் தடுக்கும் மருந்தே எனினும் விருந்தினரைப் புறத்தே விட்டுத்தாம் மட்டும் உண்ணும் உள்ளம் கொண்டவர் அல்லர் என்பதனை,

> **“இந்திரர் அமிழ்தம் இயைவ தாயினும்**
> **இனிதெனத் தமியர் உண்டலும் இலரே”** (புறம். பா.எ182)

என்ற புறநானூற்றுப்பாடலடி விளக்குகிறது. விருந்தோம்பும் பண்பாடு தோற்றம் பெற்றதனை, ‘பண்டமாற்றுமுறை வழக்கிலிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழ்நிலை நிலவியது. எனவே இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கால்நடையாகவே நடந்துசெல்ல வேண்டியிருந்தது. உணவு

விடுதிகளும் இல்லாத காரணத்தினால் உண்டிக்கும் உறையுளுக்கும் அனைவரும் செல்லும் ஊர்களையே நம்ப வேண்டியிருந்தது. ஆகவே, புதிதாக வருவோருக்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையால் விருந்தோம்பும் பண்பாடு தமிழகத்து இல்லங்களில் உருவாயிற்று'' (முத்துலக்குமி.வே, பண்பாட்டுச் சிந்தனைகள், ப83) என்றவாறு விவரிக்கின்றனர்.

இந்த விருந்தோம்பல் பண்பாடு தொல்காப்பியர் காலத்தில்

**“புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்**
**பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்**
**வேளா ணெதிரும் விருந்தின் கண்ணும்”**

(தொல்.பொருள்.களவியல், நூ.எ17)

என்று களவியலிலும்,

**“விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்”**

(தொல்.பொருள்.கற்வியல், நு.எ5)

என்று கற்பியலிலும் விருந்தோம்பல் எனும் ஆளுமைப் பண்பு விளக்கப்பட்டுள்ளது. திருவள்ளுவர், ஔவையார், சங்கப் புலவர்கள், மற்றும் பல இலக்கியங்களிலும் விருந்தோம்பல் என்ற மிகச்சிறந்த ஆளுமைக்கூறு விவரிக்கப்பட்டுள்ளது.

**உறுதியான உணர்வாற்றல்:**

ஆளுமைக்கோட்பாட்டில் உறுதியான உணர்வாற்றால் ஒரு முக்கியப்பண்பாகும். அந்த உறுதியான உணர்வாற்றல் சங்க மாந்தரிடம் காணப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பாண்டிய நாட்டின் வடவெல்லைப்பகுதியாகிய ஒல்லையூர் நாட்டை ஆண்டவன் பூதப்பாண்டியன். இம்மன்னனின் பட்டத்தரசி பெருங்கோப்பெண்டு ஆவாள். பூதப்பாண்டியன் போரில் வீரமரணம் அடைந்தான். அரசியல் நீதிகளை நன்கு கற்றிருந்த பெருங்கோப் பெண்டினை நாட்டினை ஆட்சிபுரியுமாறு சான்றோர் கூற அவர்களை எதிர்த்துத் தீப்பாயக் கருதினாள். ஆனால், பெருங்கோப்பெருண்டு தன் தலைவன் இல்லாதபொழுது, குளிர்ந்த தாமரைப்பொய்கையும், ஈமத்தீயும் ஒன்றொன்று கூறுகிறார்.

**"பல் சான்றீரே! பல் சான்றீரே!**

**செல்கெனச் செல்லாது ஒழிகென விலக்கும்**

**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே**

............................................................

**பெருங்கோட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்**

**நுமக்கு அரிதாரு தில்ல எமக்குஎம்**

**பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற**

**வள் இதழ் அவிழ்ந்த தாமரை**

**நள்ளிரும் பொய்கையும் தீயும் ஓரற்றே!"** (புறம், பா.எ. 246)

எனக்குறிப்பிட்டமையை இப்பாடலடிகள் உணர்த்துக்கின்றன. அதிகம் பேசாத மகளிருக்கு மத்தியில் சான்றோர்கள் பலர் நிறைந்திருக்கின்ற சபையில் தனது விருப்பத்தைத் தெரிவித்து, அதனை நிறைவேற்றியும் காட்டிய பெருங்கோப்பெண்டுவின் உறுதியான உணர்வாற்றல் போற்றுதற்குரிய உறுதியுடன் செயல்பட்டு வந்தமையை இப்புறநானூற்றுப் பாடலால் அறியமுடிகின்றது.

**ஆற்றியிருத்தல்:**

உறுதியான உணர்வாற்றல் கொண்ட சங்கமாந்தர்கள் பொறுமையுடன் ஆற்றியிருந்தமையும் சங்கப் பாக்களால் அறிய இயலுகிறது. களவுக்காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி, உடல்மெலிந்து, தளாச்சியுற்றுக் காணப்படுகிறாள். கற்புக்காலத்தில் கணவனின் பாதுகாப்பில் வாழ்பவள் தலைவி. திடீரெனக் கணவன் வினைமேற் செல்கின்றபோது, அவனைப் பிரியப் பொறுக்காதவள் ஆகிறாள். ஏனெனில் திருமணத்திற்கு முன் தந்தை, திருமணத்திற்குப் பின் கணவன் என்ற பாதுகாப்பில் வளர்ந்துவிட்டுத் திடீரெனக் கணவன் பிரியும்போது அதனை ஏற்க முடியாமல் பிரிவாற்றாமையால் புலம்பினாலும், பின் தலைவன் வரும்வரை ஆற்றியிருத்தல் காணமுடிகிறது. இதனை,

**"அழதக வந்த கொண்டலொடு கழிபடர்க்**

**காமர் நெஞ்சம் கையறுபு இணையத்**

**துயரம் செய்து நம்அருளாள் ஆயினும்**

**அறாலியர் அவருடைக் கேண்மை"** (அகம், பா.எ40)

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் வழி ஆற்றியிருத்தல் எனும் ஆளுமைப் பண்பினை விளங்க இயலுகின்றது. பல நேரங்களில் ஆற்றியிருத்தல் எனும் ஆளுமைப்பண்பு முறையாக அமையாவிடில் பல்வேறு இன்னல்கட்டு ஆட்பட்டுத் துன்பத்தில் உழல ஏதுவாகிறது. ஆகவே, பல இடங்களில் சங்க மாந்தர்கள் ஆற்றியிருத்தலை முறையாகக் கடைப்பிடித்துள்ளமையும் இலக்கியப் பதிவுகள் தெளிவுபடுத்துகின்றன.

## திட்பமான மனத்திறன்:

சங்க மாந்தர்கள் திட்பமான மனத்திறனுடையவர்கள். ஆளுமைப்பண்புகளில் கூறப்பெற்றுள்ள மனத்திறன் பெற்றவர்கள். குடும்பத்தலைவன் தொழில்புரிகின்றவன். குடும்பத்தலைவி அவனைப் பாதுகாத்து குடும்பத்தை மேலாண்மை செய்யும் ஆற்றல் பெற்றவள்.

இதனை, குறுந்தொகை 135 ஆவது பாடல் எடுத்தியம்புகிறது.

குடும்பத்திற்கும் பெண்டிருக்கும் உள்ள பிணைப்பு குடும்பத்திற்கும் ஆணிற்கும் உள்ள பிணைப்பைவிட வலிமையானது ஆகும். இல்லப்பணிகளான கணவர் மற்றும் குழந்தைகளைப் பேணுதல், இல்லத்தூய்மை பேணல், சுற்றம் பேணல் முதலியவற்றில் முதன்மைப் பொறுப்பாளியாக மகளிர் இருந்து வருவது உயர்ந்த ஆளுமைத்திறமாகும்.

## குடும்ப உறவுகளைப் பேணும் ஆளுமை:

குடும்பம் என்பது பல உறவுகளுடன் ஒன்றிணைந்த அமைப்பு ஆகும். “குடும்பம் என்பது கணவன், மனைவி, குழந்தைகள் ஆகியோர் சேர்ந்த ஓர் அமைப்பாகப் பண்பாட்டு வளர்ச்சியில் எந்த நிலையிலும் காணப்படுகிறது”, என (கோபாலகிருட்டிணன் ம.சு, மானிடவியல், ப118) மானிடவியல் குறிக்கின்றது.

குடும்ப உறவானது, தலைவன், தலைவி, தோழி, செவிலி, தலைவி, நற்றாய் ஆகியோரைக் கொண்டதாக அமைகிறது. இவர்கள் குடும்பத்திற்கு உறுதுணையாகவும், குடும்ப வாழ்க்கையில் தொடர்புள்ள உறவுகளாகவும் இருந்தனர். இவர்களைத் தொல்காப்பியர் வாயில்கள் என்று கூறுகின்றார். அவ்வாயில்கள்,

**“தோழி தாயே பார்ப்பன் பாங்கன்**
**பாணன் பாடினி இளையர் விருந்தினர்**
**கூத்தர் விறலியர் அறிவார் கண்டோர்**
**யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப”**

(தொல், பொருள், கற்பியல் நூ.எ52)

என்றவாறு உறவுகளைத் தொல்காப்பியர் சுட்டுகின்றார். இந்த உறவுகளையெல்லாம் ஒவ்வொருவரும் முறையோடு பேணிய ஆளுமைப்பண்பு சங்க மாந்தரிடம் இருந்து அறியமுடிகிறது.

## குடும்பத்தைச் சிக்கலுக்கு உட்படுத்தாமல் தவிர்க்கும் கணவன், மனைவி ஆளுமைப்பண்பு:

குடும்பம் என்பது தலைவனும் தலைவியும் சிக்கல் இன்றி ஒன்றுபட்டு வாழ்தல் ஆகும். தலைவனும் தலைவியும் மனம் ஒன்றி வாழ்வது குடும்பத்தின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறது. குடும்ப வாழ்வில் தலைவனின் அன்பைத் தோழியிடம், தலைவி புகழ்ந்து பேசுதல், இருவரும் மகிழ்வுடன் வாழ்வதைக் காட்டுகிறது. இருவரும் மனம் மாறுபட்டு இருப்பின் அக்குடும்பமும் சமுதாயமும் சிக்கலுக்கு உட்படும். அவ்வாறு சிக்கலுக்கு உட்படுத்தாமல் இருவரும் சிறந்த ஆளுமைத்திறத்தோடு நட்புறவுடன் மனம் ஒன்றி வாழ்பவர்களாக அமைந்திருக்கின்றனர். தலைவனும் தலைவியும் நட்புறவோடு இருப்பதால் அவர்கள் அன்போடு இல்லற நெறிபேணி வாழ்ந்து, தங்கள் குழந்தைகளிடத்தும் சிறந்த ஆளுமைப்பண்பினை ஊட்டியுள்ளனர். இதனைத் தலைவி தோழியிடம் கூறுவதிலிருந்து அறியமுடிகிறது. இதனை,

**“குடிநன்கு உடையவன் கூடுநர்ப்பிரியவன்**
**கெடுநா மொழியலன் அன்பினன் என நீ**

**வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்**

**நல்லை காணில் காதலந் தோழி**

**கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி**

............................................................

**தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்**

**எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்**

**புதுவது புனைந்த திறத்தினும்**

**வதுவை நாளினும் இனியனால் எமக்கே"** (அகம். பா.எ. 352)

என்ற பாடல் எடுத்துரைக்கிறது. நல்ல ஆளுமை பெற்றிருந்ததால் தலைவனும் தலைவியும் குடும்பத்தைச் சிக்கலுக்கு உட்படுத்தாமல் காத்தனர் என்பது பெறப்படுகிறது.

இத்தகைய பல்வேறு பண்புக்கூறுகளிலும் ஆளுமை நிலை பெற்றுள்ளது என்பதனை காட்டல் அவர்களின் கோட்பாடு விவரிக்கிறது. காட்டலின் பண்புநலன் கோட்பாடுகளுடன் சங்க மாந்தர்களின் பண்புநலன் சார்ந்த கோட்பாடு விரவி நிற்கின்றது.

## ஆளுமையுடன் வளர்த்தல்:

ஒவ்வொருவரும் குழந்தைக்கு ஒவ்வொரு விதமான பயிற்சி அளித்து, குழந்தைகட்கு நல்ல இசைவான ஆளுமையையும், அறிவையும், ஆற்றலையும் வளர்க்கின்றனர். ஒவ்வொரு வகைப்பயிற்சிக்கும் தனித்தனி மரபினர் அக்காலத்தில் பிரிக்கப்பட்டிருந்தனர். என்பதனை,

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**

**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**

**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**

**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**

**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக் களிறு**

**எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே".** (புறம். பா.எ. 312)

என்ற பொன்முடியார் பாடல்கள் இதனை உணர்த்துகின்றன. இதில் ஒவ்வொருவரின் ஆளுமைத்திறத்தையும் அக்குழந்தை கற்றுக் கொள்கிறது.

தன் மகனைச் சிறந்த ஆளுமையுடன் வளர்த்த தாய் அவனுடைய ஆளுமையைக் கண்டு மகிழ்ந்த செய்தி புறநானூற்றில் குறிப்பிடப்படுகிறது. போரில் தன்மகன் புறங்கொடுத்தான் எனக்கேள்விப்பட்ட தாய் ஒருத்தி அவ்வாறு நிகழ்ந்திருப்பின் அவனுக்குப் பாலூட்டிய என் மார்பகத்தை கொய்திடுவேன் எனச்சூளுரைத்துச் சென்றாள், தான் கொண்டு சென்ற வாளால் இறந்த உடல்களைப் புரட்டிப் பார்த்து வருகையில் தன் மகன் மார்பில் காயத்துடன் இறந்து கிடப்பதனைக் கண்டாள், அத்தாய். தன் மகன் கோழையல்ல. சிறந்த ஆளுமை பொருந்திய வீரன் எனத் தெளிந்தவுடன் அவனை ஈன்ற பொழுதைக் காட்டிலும் மிக மகிழ்ந்தாள் என்ற செய்தி,

**"கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**

**செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய**

**படுமகன் கிடக்கை காணூஉ**

**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே"** (புறம். பா.எ.278)

எனும் புறப்பாடல் வழி அறிய முடிகின்றது. இவ்வாறு சங்க மாந்தர் தங்கள் குழந்தைகளைப் பாலூட்டி மட்டும் வளர்க்காமல் மன ஆளுமையையும், உடல் ஆளுமையையும் ஊட்டி வளர்த்துள்ளமை தெளிவாகிறது.

## அன்பின் ஆளுமை:

அன்பு எனும் ஆளுமைத்திறத்தைத் திறமாகக் கொண்டிருந்தால் எதனையும் திறம்படச் செய்ய இயலும். சங்க மாந்தர்கள் ஒவ்வொருவரிடமும் அன்பு ஆளுமை இயல்பாகவே வெளிப்பட்டது. இதனால் எச்செயலையும் எளிமையுடன் இனிதே நிறைவேற்றினர். இதுமட்டுமல்லாமல் பிறர் மனத்தைக் கொள்ளை கொள்ளவும் இந்த ஆளுமைப்பண்பினைக் கையாண்டுள்ளனர் சங்க மாந்தர்கள். தலைவியொருத்தி தோழியிடம். தான் தலைவன் மீது கொண்டிருக்கும் நிலையான அன்பினை, அதன் திறத்தை எடுத்துரைக்கும் நிகழ்வினை,

**“நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று**
**நீரினும்ஆர் அளவு இன்றே சாரல்**
**கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”** (குறுந்.பா.எ. 3)

என்ற தேவகுலத்தாரின் பாடலடிகளால் உணரமுடிகிறது. தலைவியானவள் நேரடியாகத் தலைவனிடத்து உரைக்காமல், தோழியின் வழி, தலைவனிடத்துச் செல்லும்போது அவ்விடத்தில் அன்பின் ஆளுமை அதிகரிக்கிறது.

பல்வேறு சூழல்களிலும் பல்வேறு நிலைப்பாடுகளிலும் சங்க மாந்தர்கள் தங்களுடைய முன்னோர்களிடத்திருந்து இயல்பாகவே ஆளுமைப் பண்பினைப் பெற்றிருக்கின்றனர்.

## முடிவுகள்:

- பண்பட்ட சமூக உணர்வு கொண்ட பண்பு ஆளுமைப் பண்பாகும். இப்பண்பு சங்க கால மாந்தர் வாழ்வியலில் செறிவாண்மையாக உள்ளதை சங்கப்பாக்கள் இயம்புகின்றன.

- மெய்யியலில் கூறப்படும் மனத்தத்துவங்களும், உளவியல் வகுத்துள்ள ஆளுமையும், ஆளுமைக்கோட்பாடுகளும் பல்வேறு நிலைகளில் பொருந்திக் காணப்படுகின்றன.

- சங்க மாந்தரின் இயல்பான ஒவ்வொரு செயல்பாடும் உளவியலரின் ஆளுமை மற்றும் ஆளுமைக்கோட்பாடுகளுடன் இயைபு பெற்றிருக்கின்றன.

- ஆடவருடன் மகளிரும் பல்வேறு சூழ்நிலைகளில் தேர்ந்த ஆளுமைத்திறத்தை வெளிப்படுத்தியுள்ளனர். தோழி என்பவள் மிகச்சிறந்த ஆளுமைத்தன்மை உடையவளாக விளங்கியிருக்கின்றாள்.

- ஆளுமை ஒரு மனிதனை மற்றவரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் பண்புகளின் தொகுப்பாகும். ஒவ்வொரு மனிதனும் வெவ்வேறு சூழல்களில் பல்வேறு பண்புகளை வெளிப்படுத்துகின்றனர். இப்பண்புகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவையாக இருக்கின்றன. இவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்ட பண்புகளின் தொகுப்பாகச் சங்க மாந்தரின் ஆளுமை விளங்கியிருக்கின்றது.

- அறிவு சார்ந்த, செயல் சார்ந்த, உணர்ச்சி சார்ந்த அனைத்து நடத்தைகளின் கூட்டு இணைப்பாக ஆளுமை உள்ளது. அது சூழ்நிலைக்கேற்ப மாறும் தன்மை கொண்டது. குழந்தையின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கும் மரபுநிலை, சூழ்நிலை இரண்டும் ஆளுமை வளர்ச்சிக்கு முக்கியக் காரணமாகின்றன. ஒவ்வொருவரின் கற்றல் மற்றும் அனுபவங்களுக்கேற்ப ஆளுமை மேம்பட்டுள்ளது.

## இயல் – 6

# சங்க மாந்தரின்
# உளநோய் அறிதலும் தற்காத்தலும்

பிறர் துன்பம் காணப்பொறாது உதவி செய்யும் உணர்வு கொண்ட மனிதர்கள் இருக்கின்றார்கள். பிறர் நலன் நாடலும், பிறர் துன்பம் போக்கலும் மானுடத்தின் விழுமியங்கள் ஆகும். உதவி செய்வதில் பிறரது மன உணர்வுகளைப் புரிந்து, அதற்கேற்றவாறு அவர்களின் உளநலம் காப்பவர்கள் மிகச்சிறந்தவர்களாகக் கருதப்பெறுவர். அவ்வகையில், சங்க மாந்தர்கள் இச்செயலாண்மையில் சிறந்து விளங்கியமை சங்க இலக்கியங்களின்வழி அறியலாகிறது.

சங்க மாந்தர்கள் தங்களுக்குள்ளாகவே நெறிப்படுத்தித் தன்னையும் பிறரையும் தற்காத்துக் கொண்டனர். தற்காலத்தில் வழிகாட்டுவதற்கும், அறிவுரை பகர்தற்கும் (Guidance and Counselling) மையங்களும் அமைப்புகளும் செயல்பட்டு வருகின்றன. சங்க கால மக்கள் மற்றையோர்களின் மன உணர்வுகளைத் தாங்களாகவே உணர்ந்து உளநோய் அறிந்து தற்காத்தனர்.

உலகம் ஒரு சிற்றூராகச் சுருங்கிவிட்ட இக்காலத்தில் மனிதர்கள் பிறருடன் மனம் திறந்து பேசுவது இயலாததாகி விட்டது. மனிதர்கள் மனிதர்களோடு பணி செய்த காலம் மாறி, இயந்திரங்களோடு பணிசெய்யும் காலம் தோன்றிவிட்டது. இதனால் மனிதர்கள் பல வகையான உளநோய்களுக்கு ஆளாகக்கூடிய சூழல் ஏற்படுகிறது.

உளநோய்களிலிருந்து தற்காத்துக் கொள்ளவும், மீட்கவும் சங்க மாந்தர்கள் உளநலம் காத்த முறையை அறிந்து கொள்ளும் வகையில் இவ்வியல் அமைகிறது.

## ஆற்றுப்படுத்தலின் வழி உளநலம் காத்தல் :

உலகில் ஏராளமான வளங்கள் குவிந்து உள்ளன. அவற்றைப் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் மானுட வாழ்க்கையை உயர்த்தும் வழி என்பதைச் சங்கத்தமிழர் முழுமையாக உணர்ந்து போற்றினர். எனவே, ஒவ்வொருவரும் தன்னாலியன்ற வகையில் அடுத்தவர் வாழ்வு வளம்பெற வழிகாட்டினர். பொருள் நோக்கியும், புகழ் நோக்கியும், அருள் நோக்கியும் தத்தம் திறமைகளைப் புலப்படுத்தி வளமான வாழ்வுபெற வழிகூறும் நெறியாளர்களைப் புலவர்களும் கலைவாணர்களும் பெற்றிருந்த சிறப்பு சங்ககாலத் தமிழகத்திற்கு உண்டு.

அவ்வாறு நெறிப்படுத்தியோர், நெறிப்படுத்தப்பட்டோர் பற்றிய குறிப்புகளை இலக்கியங்களாகப் பதிவு செய்ததன்வழி அடுத்த தலைமுறையினருக்கு ஆக்கக் கருத்துக்களை அள்ளிக்கொடுக்கும் அரும்பணியையும் ஆற்றியுள்ளனர். இந்த அடிப்படையில் பெருமைமிகு கருத்தாக்கங்களைச் சங்கச் சான்றோர் தமிழருக்கு மட்டுமின்றி, உலகத்திற்கு உணர்த்தும் உயர்நிலையராயினர். பண்டைத்தமிழர் ஈகை செய்வது உயர்வென்னும் வாழ்நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்தனர். ஈகை என்பது பொருளை ஈதல் என்னும் பொருண்மையை மட்டும் சுட்டுவதன்று. ஒவ்வொரு மனிதனும் தனது வாழும் வாழ்க்கை முறையை முழுமையுடையதாக அமைத்துக்கொள்ள எண்ணுகிறான். அவ்வகையில்

எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதும் அதற்கான செயல்வடிவம் கொடுப்பதும் ஆற்றுப்படை இலக்கியங்கள் ஆகும்.

இந்த ஆற்றுப்படை இலக்கியங்கள் மனிதனின் பொருள் வறுமையினால் ஏற்படும் உளநோயைப் போக்க வழிகாட்டுகின்றன.

## ஆற்றுப்படுத்துதல் :

'ஆற்றுப்படை' என்னும் இலக்கிய மரபு தமிழருக்குத் தனிச்சிறப்பாய் அமைந்ததாகும். இது தமிழில் உள்ள தனி இலக்கிய வகையாகும். ஆறு என்றால் வழி. படை என்றால் படுத்துதல் அதாவது வழிப்படுத்துதல் என்பதாகும். இவ்விலக்கியங்களில் கூறப்படும் கூத்தர் என்பவர் தனிக்கூத்திலும், கதை தழுவி வரும் கூத்திலும் வல்லவர். பாணர் என்பவர் இசைத்தமிழில் வல்லவர். குழல், யாழ் முதலிய இசைக்கருவிகளோடு பாடுவர். பொருநர் என்பவர் ஏர்க்களம் அல்லது போர்க்களம் சென்று பாடும் கூத்தர். அவர் நடிப்பிலும் வல்லவர். விறலி என்பவள் உள்ளக் குறிப்பைப் புறத்தே வெளிப்படும்படி விறல்படத் திறமையாக நடிப்பவள்.

"கூத்தர், பாணர், பொருநர், விறலியர் ஆகிய நால்வரும் தமக்குத் துணையாயினரோடு சிற்றரசரிடமும் பேரரசரிடமும் சென்று தம் கலைத்திறனைக் காட்டிப் பரிசு பெற்று மீள்வர். அங்ஙனம் மீண்டு வருபவர் வள்ளல்களை நாடிச் செல்லும் தம்மைப்போன்ற கலைவாணரை வழியில் காணின், அவர்மீது இரக்கம் கொள்வர். அவர்களுக்கு உதவி செய்ய விரும்புவர். அதனால், தம்மைப் போற்றிய வள்ளலிடம் சென்று பரிசில் பெற்று மகிழுமாறு அவர்களை ஆற்றுப்படுத்துவர். இங்ஙனம் ஆற்றுப்படுத்துதல் என்பதே ஆற்றுப்படை எனப்பட்டது." (சேதுராமன். பி., ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல். ப - 2).

கூத்தன் ஒருவன் மற்றொரு கூத்தனை ஆற்றுப்படுத்துதல் கூத்தராற்றுப்படை எனப்படும். பாணன் மற்றொரு பாணனை ஆற்றுப்படுத்துதல் பாணாற்றுப்படை எனப்படும். பொருநன் ஒருவன் மற்றொரு பொருநனை ஆற்றுப்படுத்துதல் பொருநராற்றுப்படை எனப்படும். விறலி ஒருத்தி மற்றொரு விறலியை ஆற்றுப்படுத்துதல் விறலியாற்றுப்படை எனப்படும். இவ்வாறின்றி, புலவர் கூத்தரையோ, பாணரையோ, பொருநரையோ விறலியரையோ ஆற்றுப்படுத்துதலும் உண்டு. ஆற்றுப்படுத்தப்படுபவரது பெயரைக் கொண்டு அச்செய்யுள் பெயர் பெற்றது.

## தொல்காப்பியத்தில் ஆற்றுப்படை :

அருளுணர்ச்சியால் தோன்றிய இந்த ஆற்றுப்படை முறைகள் தொல்காப்பியப் புறத்திணையியலில் கூறப்பட்டுள்ளது. இதனை,

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்”**

(தொல். புறத்திணையியல். நூ.எ. - 30)

எனத் தொல்காப்பியத்தில் கூறப்படும் இவ்வாற்றுப்படை முறை, தொல்காப்பியருக்கு முன்னரே பன்னெடுங்காலம் வழங்கியிருந்தமையை உணர்த்துகிறது.

## ஆற்றுப்படுத்தலும் வழிகாட்டுதலும் :

சங்க காலத்தில் ஆற்றுப்படுத்தல் என்ற பெயரில் வழங்கப்பட்ட சொல் இன்று வழிகாட்டுதல் என்ற பெயரால் உளவியலாரால் வழங்கப்படுகிறது. வழிகாட்டுதலும் அறிவுரை பகர்தலும் இன்று உலக அளவில் அனைத்துத் துறைகளிலும் நல்ல பல ஏற்றங்களைத் தந்துள்ளன. தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் வழிகாட்டுதல் என்பது இன்றியமையாததாக உள்ளது.

## வழிகாட்டுதல் : (Guidance)

வழிகாட்டல் என்னும் செயல் ஒவ்வொரு தனிநபரும் தனக்குத்தானே உதவிக் கொள்ளவும், தன் உள்ளார்ந்த திறமைகளை உணரவும், ஏற்றுக் கொள்ளவும், இலக்குகளை அடையவும், திட்டமிடவும் உதவுகிறது. உடல்நலம், கல்வி, வீடு, குடும்பம், சமய வாழ்க்கை, ஒழுக்க வாழ்க்கை, குடிமையியல் வாழ்க்கை, பொழுதுபோக்குகள் என அனைத்து நிலைகளிலும் வழிகாட்டுதல் தேவைப்படுகிறது.

> ‘தனிமனிதனின் கல்வி, தொழில் மற்றும் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்வதற்காக வழிகாட்டலில் பயிற்சி பெற்ற ஒருவர் அறிவு வழியாக உதவுவதே வழிகாட்டல் ஆகும்.’

(கலைச்செல்வி. வெ. - வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும். ப - 1)

வாழ்க்கைச் சூழலோடு தங்களைப் பொருத்தப்பாடுடையவர்களாக ஆக்கத் தனிமனிதனுக்கு உதவும் செயலே வழிகாட்டல். தனியாள் தமது திறன்கள், திறமைகள், ஆர்வங்கள், கவர்ச்சிகள், புலன்காட்சிகள், தேவைகள் ஆகியவற்றை உணர்ந்து தங்களைப் புரிந்து கொள்ளத் துணை செய்யும் முறைப்படுத்தப்பட்ட செயலே வழிகாட்டல். எனவே,

பொருத்தப்பாட்டைத் தனிமனிதனுக்கு உண்டாக்குகிறது. தனிமனிதன் தன் சொந்த முயற்சிகள் மூலம் அவனுடைய திறமைகளைக் கண்டறியவும், மேம்படுத்தவும் வழிகாட்டல் உதவுகிறது. வாழ்க்கை இலக்குகளை உருவாக்கவும், செயல்பாட்டை ஏற்படுத்தவும் சிக்கல்களைத் தீர்க்கவும் தனிமனிதனுக்கு உதவும் உதவி முறையாகவும் வழிகாட்டல் திகழ்கிறது. இதனை உளவியல் அறிஞர்,

"வழிகாட்டுதல் என்பது யாரோ ஒருவருக்கு அளிக்கப்படும் தனி உதவியாகும். ஒருவருக்கு, அவர் எங்கே செல்ல வேண்டும், எதைச் செய்ய வேண்டும், எவ்வாறு தன்னுடைய செயலினைச் சிறப்பாகச் செய்ய வேண்டும் என்பதைத் தனியாள் தீர்மானிப்பதை வடிவமைப்பதாகும். அவனுடைய வாழ்க்கையில் எழும் சிக்கல்களைத் தீர்க்க உதவுவதாகும். தனியாளின் பிரச்சனைகளை அறிந்துகொள்ளச் செய்து, அதனைத் தீர்க்கத் துணைபுரிவதாகும். வழிகாட்டுதலின் மையம் தனியாளே தவிர, அவருடைய பிரச்சனைகளல்ல. தன் வழியில் ஒருவன் வளர்ச்சிபெற ஊக்குவிப்பதே வழிகாட்டுதலின் நோக்கமாகும்" என்கிறார்.

(கலைச்செல்வி. வெ. - வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும் ப. 2).

எனவே, மனிதன் தான் வாழும் சூழலுடனும், பிறருடனும் பொருத்தப்பாட்டை ஏற்படுத்தி, தன்னை மேம்படுத்திக் கொள்ள உதவும் செயலே வழிகாட்டுதல் எனப்படுகிறது.

## பண்டைய பாரதத்தில் வழிகாட்டல் இயக்கம்:

வழிகாட்டல் என்பது பழமையான கருத்தும், செயல்பாடும் ஆகும். அனுபவமிக்கவர்களாலும், மூத்தோராலும் இளையோருக்கு வழிகாட்டுதல் என்பது தொடர்கிறது.

வழிகாட்டுதல் என்பது திட்டமிடப்படாமல் வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும், ஆசிரியர்களாலும் பெற்றோர்களாலும் நண்பர்களாலும் அனைவருக்கும் வழங்கப்படுகிறது. பழங்காலத்தில் குருக்கள் தங்கள் சீடர்களுக்கு வழிகாட்டியாக இருந்து வந்துள்ளனர். குருவின் இல்லத்திலேயே தங்கி உணவு உண்டு, கல்வி கற்றோருக்கு குருவின் வழிகாட்டுதல்களும் அறிவுரையும் தொடர்ந்து கிடைத்து வந்தது. இதனை நன்னூலில் பவணந்தி முனிவர்,

**"கோடன் மரபே கூறுங் காலைப்**
**பொழுதொடு சென்று வழிபடன் முனியான்**
**குணத்தொடு பழகி அவன்குறிப்பிற் சார்ந்து**
**இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்**
**பருகுவன் அன்ன ஆர்வத்தன் ஆகி**
**சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கிச்**
**செவி வாயாக நெஞ்சு களனாகக்**
**கேட்டவை கேட்டவை விடாதுஉளத்து அமைத்து**
**போவெனப் போதல் என்மனார் புலவர்"**

(பவணந்தி முனிவர், நன்னூல், எழுத்து, நூ.எ. - 40)

என்ற வரிகளில் குருவின் வழிகாட்டுதல் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் குருமார்கள் அரசருக்கும் அரசர் மக்களுக்கும் நன்னெறி காட்டி வந்தனர். சில இடங்களில் புலவர் அரசரை வழிப்படுத்தியதும் உண்டு.

வழிகாட்டுதல் அறிவுரை கூறுவதாகவும், பரிந்துரைப்பதாகவும், ஆணையிடுவதாகவும் இருந்தது. மகாபாரதப் போரில் அருச்சுனன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று கிருட்டிண பகவான் அருச்சுனனுக்கு வழங்கிய வழிகாட்டுதலும், அறிவுரை பகர்தலும் பகவத் கீதையின் உள்ளடக்கம் ஆகும்.

வழிகாட்டுதல் நுட்பங்கள் பழங்காலம் முதலே ஒரு முக்கிய நிகழ்வாக இருந்து வந்துள்ளன. பஞ்சதந்திரக் கதைகள், நீதிக்கதைகள், விடுகதைகள் ஆகியன வினா - விடை நுட்பங்களைக் கொண்டிருந்தன.

### ஆசிரிய மாணவர் உறவுநிலை :

குரு என்ற சொல்லுக்கு, ‘வழிகாட்டுபவர்’ என்று பொருள். வழிகாட்டுதல் என்பது முறைப்படுத்தப்பட்ட செயலாகவே இருந்து வந்துள்ளது.

### ஆங்கிலேயர் காலத்திலும் அதற்குப் பின்னும் வழிகாட்டல் இயக்கம் :

ஆங்கிலேயர்கள் பாரதத்திற்கு வாணிகம் செய்வதற்காக வந்தனர். கிழக்கிந்தியக் கம்பெனியை நிறுவினர். அவர்களுடைய பணிகளில் அவர்களுக்கு உதவி செய்ய இங்குள்ளோர் தேவைப்பட்டனர். எனவே, இங்கிலாந்து நாட்டில் நடைமுறையிலிருந்த தொழில்நுட்ப வளர்ச்சியை இந்தியாவிலும் நடைமுறைப்படுத்த எண்ணினர்.

அச்சுக்கலை, ஆங்கிலக்கல்வி முறை, தொழில்நுட்பக் கல்வி முறை ஆகியவற்றில் பாரத நாட்டினருக்கு ஆங்கிலேயர் வழிகாட்டினர். 1847-இல் ரூர்கிலும், பின்னர் கல்கத்தா, சென்னை, பூனா ஆகிய இடங்களிலும்

தொழில்நுட்பக் கல்லூரிகளை நிறுவி, கல்வி வழிகாட்டலை ஆங்கிலேயர் மேற்கொண்டனர். பல்கலைக்கழகங்களை நிறுவி, அதன்மூலம் வழிகாட்டுதலைச் செயல்படுத்தினர்.

## கல்கத்தா பல்கலைக்கழகம் :

1915-இல் முதன்முதலாக இந்தியாவில் கல்கத்தா பல்கலைக் கழகத்தில் முதல் உளவியல் ஆய்வகம் அமைக்கப்பட்டது. டாக்டர் ஜி.எஸ். போஸ் அவர்களைத் தலைவராகக் கொண்டு 1936-இல் பயன்பாட்டு உளவியல்துறை தனித்துறையாக அமைக்கப்பட்டது. இங்கு இந்திய மாணவர்களின் தொழில் தேவையை நிறைவு செய்யும் பொருட்டு, இந்தியச் சூழலுக்கேற்ப உளவியல் ஆய்வுகள் அமெரிக்க நாட்டிலிருந்து பெறப்பட்டன.

இவ்வாறு, தமிழ் மக்களிடையே தொடங்கிய ஆற்றுப்படுத்துதல் நெறி இன்று வழிகாட்டல் எனும் பெயரில் உளவியலின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. இது உலக அளவில் தனிமனிதன், குடும்பம், சமுதாயத்தினருக்கு அனைத்து நிலைகளிலும் வழிகாட்டும் வகையில் பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதற்கான மையங்களும் ஆங்காங்கே நிறுவப்பட்டுள்ளன.

## சங்க இலக்கியத்தில் ஆற்றுப்படுத்துதல் :

சங்க இலக்கியத்தில் வறுமை என்ற துன்பத்தைப் போக்கத் தனிமனிதனும், குழுவினரும் இணைந்து குழுவினரை ஆற்றுப்படுத்தியுள்ளனர். சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் ஆற்றுப்படுத்துதல் என்ற சொல்

இடம்பெற்றிருக்கின்றது. மேலும் தோழி தலைவியையும், தலைவனையும் ஆற்றுப்படுத்தி ஆறுதல்கள் கூறுகின்றாள். சங்க நூல்களுள் புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு இலக்கியங்களில் மட்டும் ஆற்றுப்படைப் பாடல்கள் காணப்படுகின்றன.

> "ஆற்றுப்படை என்ற இத்துறை மிக்க வறியோர்க்குத் தம்பால் உள்ளனவெல்லாம் உவந்தீயும் வள்ளல்களைப் புகழ்ந்து பாடுதற்கென நல்லிசைப் புலவர்கள் வகுத்துக் கொண்டதொரு புலனெறி வழக்கமாகும். மக்கட் பிறப்பெய்தியோர் அப்பிறப்பின் பெருமைக்கேற்ற செயலாக மேற்கொள்ளற்பாலவாகிய அறங்களில் ஈகை தலைசிறந்ததொன்று."

(சோமசுந்தரனார்.பொ.வே., பத்துப்பாட்டு மூலமும் உரையும்., ப.- 11)

என்பர் அறிஞர். அறநூல்களும் ஈகையின் சிறப்புகளைக் குறிப்பிட்டுள்ளன. தொன்றுதொட்டு ஆற்றுப்படுத்துதல் இருந்து வந்துள்ளது. இதனால், மக்கள் பலர் பயன் பெற்றுள்ளனர்.

## வறுமையில் ஆற்றுப்படுத்துதல் :

வறுமை என்பது மிகக் கொடிய நோய் ஆகும். இது உடலை மட்டும் பாதிப்பதோடு இல்லாமல், உள்ளத்தையும் பாதிக்கிறது. உடலை அழியச் செய்வதோடல்லாமல், உள்ளத்தைத் துன்புறுத்தி உயிரை எடுக்கவல்லது வறுமை ஆகும். எனவேதான், புலவர்களும் கலைஞர்களும் வறுமை நீங்க ஆற்றுப்படுத்தி உள்ளனர்.

கோவூர் கிழார் எனும் புலவர், சோழன் நலங்கிள்ளியின் கொடைத்தன்மையைக் கூறி, அவனிடம் ஒரு பாணனை ஆற்றுப்படுத்தியுள்ளார். இதனை,

**"உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின்**

**கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது**

.... .... .... .... .... ....

**உறந்தையோனே குருசில்**

**பிறன்கடை மறப்ப, நல்குவன், செலினே"** (புறம், பா.எ. - 68)

என்ற அடிகளால் அறிய முடிகிறது. மேலும் இப்புலவர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் பாணன் ஒருவனை ஆற்றுப்படுத்தியுள்ளார். இச்செய்தியினை,

**"தேஎம் தீம்தொடைச் சீறியாழ் பாண!**

**கயத்து வாழ் யாமை காழ் கோத்தன்ன**

.... .... .... .... .... ....

**தலைப்பாடு அன்று, அவன் ஈகை**

**நினைக்க வேண்டா! வாழ்க அவன்தாளே!"** (புறம். பா.எ. - 70)

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன. மன்னனின் கொடைத் தன்மையையும் அவனது சிறப்பையும் கூறி, செல்லும்போதே உள்ளத்தில் துன்பம் நீக்கி, வறுமை நீங்க ஆற்றுப் படுத்துகிறார் கோவூர்கிழார்.

பல புதர்களையும், மலைகளையும் கடந்து சென்றால், நாஞ்சில் வள்ளுவனை அடைய முடியும். அங்கு சென்று உங்கள் வறுமை போக்குங்கள் என்பதனை மருதன் இளநாகனார்,

**“ஆனினம் கலித்த அதர்பல கடந்து**

**மானினம் கலித்த மலைபின் ஒழிய**

.... .... .... .... ....

**மரன்அணி பெருங்குரல் அனையன் ஆதலின்**

**நின்னை வருதல் அறிந்தனர் யாரே”** (புறம். பா.எ. - 138)

என்ற வரிகளின்வழி வெளிப்படுத்துகிறார். இங்கு நாஞ்சில் வள்ளுவனிடத்துப் பாணன் ஒருவனை ஆற்றுப்படுத்திய செய்தி வெளிப்படுகிறது.

தன்னிடம் வரும் மக்களின் வறுமையைப் போக்குவது மட்டுமே வையாவிக் கோப்பெரும் பேகனின் செயல் என்பதனைப் பரணர் தன் பாடலடிகளில்,

**“பாணன் சூடிய பசும்பொற் தாமரை**

**மாண் இழை விறலி மாலையொடு விளங்க**

.... .... .... .... .... ....

**மறுமை நோக்கின்றோ அன்றே**

**பிறர் வறுமை நோக்கின்று அவன் கை வண்மையே”**

(புறம். பா.எ. - 141)

என்றவாறு எடுத்துரைக்கிறார். இத்தகைய பெருமை பெற்ற வையாவிக் கோப்பெரும் பேகனிடம் புலவர் ஒருவரை ஆற்றுப்படுத்தியுள்ளார் பரணர்.

அரசனால் கவரி வீசப்பெற்ற பெருமையுடையவர் மோசிகீரனார் எனும் புலவர். இவர் வறுமையால் வாடிய பாணன் ஒருவனை ஆற்றுப்படுத்தும் நிலையை,

**“வணர் கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ**

**உணர்வோர் யார் என்இடும்பை தீர்க்களன**

.... .... .... .... .... ....

**கொண் பெருங் கானத்துக் கிழவன்**

**தண் தார் அகலம் நோக்கின மலர்க்கே”**

(புறம். பா.எ. - 155)

என்றவாறு, கொண்கானங் கிழானிடம் ஆற்றுப்படுத்துகின்றார்.

சங்க கால மக்கள் இல்லை என்று கூறாத சிறப்பு மிக்கவர்கள். தன்னை நாடி வந்தோருக்குக் குறைவுபடக் கொடுக்கும் பண்பும் அற்றவர்கள். அத்தகையோரில் ஒருவன், ஈர்ந்தூர் கிழான் தோயின் மாறன். இவரை மாடலன் மதுரைக் குமரனார் எனும் புலவர்,

**“நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே**

**‘இல்’என மறுக்கும் சிறுமையும் இலனே**

.... .... .... .... .... ....

**கருங்கைக் கொல்லனை இரக்கும்**

**திருந்துஇலை நெடுவேல் வடித்திசின் எனவே”** (புறம். பா.எ.-180)

என்றவாறு கூறி, அவரிடத்துப் பாணன் ஒருவனை ஆற்றுப் படுத்தியுள்ளார். இங்கு அரசரிடத்தும் செல்வந்தர்களிடத்தும் அவர்களுடைய பல்வேறு வகையான சிறப்புகளையும் பெருமைகளையும் பாணர்களிடத்துக்கூறி, முதலில் உளநோய் தீர்க்கின்றார் புலவர். பின்னர் அவர்களிடத்துச் செல்லும் வழியைக்கூறி, அவ்விடத்துச் சென்றால் அவர்களின் வறுமை நீங்கும் என்பதனையும் கூறி ஆற்றுப்படுத்துகின்றனர் புலவர்கள்.

மேலும் பாணர்கள் சிறிய யாழினை வைத்துக் கொண்டிருப்பின் சிறுபாணன் என்றும், பெரிய யாழினை வைத்துக் கொண்டிருப்பின் பெரும்பாணன் என்றும் குறிப்பிட்டனர். சிறுபாணனை ஆற்றுப்படுத்திய செய்தியைக் கூறுவது சிறுபாணாற்றுப்படை எனப் பெயர் பெற்றது.

**சிறுபாணனும் ஆற்றுப்படுத்தலும் :**

சிறுபாணாற்றுப்படை என்பது ஒய்மாநாட்டுச் சிற்றரசனான நல்லியக்கோடனிடம் பரிசில் பெற்று மீண்ட சிறுபாணன் ஒருவன், வழியில் சிறுபாணனை அவ்வள்ளல்பால் ஆற்றுப்படுத்துவதாக நல்லூர் நத்தத்தனார் என்ற புலவர் பாடியுள்ளார். இதில் சிறிய யாழை ஏந்திய சிறுபாணன் வறுமையால் கலங்கிய நிலைமையைக் குறிப்பிடுகிறார். சேரநாட்டுச் சிறப்பும் அதன் தலைநகரான வஞ்சியின் சிறப்பும் பாண்டிநாடு, சோழநாடு அவற்றின் தலைநகர்களான மதுரை, உறையூரின் சிறப்பும் கடையேழு வள்ளல்களின் சிறப்பினையும் கூறுகிறார். மேலும் நல்லியக்கோடன் சிறப்பு, பரிசில் பெற்று மீண்ட சிறுபாணனது முன்னைய வறிய நிலை, அது நீங்க வள்ளல் தனக்குப் பொருள் அளித்தமை ஆகியவற்றை,

**“தாங்குஅரு மரபின் தன்னும் தந்தை**
**வான்பொரு நெடுவரை வளனும் பாடி**
**முன்னாள் சென்றனம் ஆக இந்நாள்**
... ... ...
**ஒல்குபசி யுழந்த ஒடுங்குநுண் மருங்கில்**
**வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த**
**குப்பை வேளை உப்பிலி வெந்ததை**

**மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து**
**இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குடன் மிசையும்**
**அழிபசி வருத்தம் வீடப் பொழிகவுள்**
**தறுகண் பூட்கைத் தயங்குமணி மருங்கில்**
**சிறுகண் யானையொடு பெருந்தேர் எய்தி**
**யாம்அவண் நின்றும் வருதும் நீயிரும்"**

(சிறு. பா. அ. 127 - 143)

என்றவாறு விளக்குகிறார். பரிசில் பெற்றுத் தன்னுடைய வறுமையெல்லாம் நீங்கிய பாணன் தன்னுடைய இருப்பிடம் சென்ற பாணன், வறிய பாணனுக்குத் தான் நலம் பெற்றதைக் கூறி, ஆற்றுப் படுத்துகின்றான். தன்நோய் நீங்கிய பாணன், தன் நிலையில் உள்ளவர்கட்கு நல்வழி கூறி ஆற்றுப்படுத்தியமை இங்கு தெளிவாகிறது. யான் பெற்ற இன்பத்தை இவ்வுலக மக்களும் பெற்று நல்வாழ்வு வாழ வேண்டும் என்ற சங்க மாந்தரின் நல்மனப்பான்மையும் அறிய முடிகிறது.

## பெரும்பாணனும் ஆற்றுப்படுத்தலும் :

தொண்டை நாட்டு மன்னனான இளந்திரையனிடம் பரிசில் பெற்று மீண்ட பெரும்பாணன் ஒருவன் வறிய பெரும்பாணன் ஒருவனை அவ்வேந்தனிடம் ஆற்றுப்படுத்துவதனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் வெளிப்படுத்துகிறார். ஆற்றுப்படுத்தும்போது துன்பம் நீக்குபவரான இளந்திரையனின் வீரம், கொடை, அரசியல், விருந்தோம்பல் ஆகியவற்றையும் கூறி ஆற்றுப்படுத்துகின்றனர். இச்செய்தியினை,

**"விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்**

**அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்**

**அந்தி வானத்து ஆடு மழை கடுப்ப**

**வெண்கோட்டு இரும்பிணம் குருதி யீர்ப்ப**

**ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து அவிய**

... ... ... (பெரும். பா.அ. 411 - 415)

என்றவாறு சிறப்பித்துச் சொல்லியிருக்கிறார்.

தொண்டைமான் இளந்திரையன் பரிசில் தரும் பொருள்களின் சிறப்பினை,

**"வளைகண் டன்ன வாலுளைப் புரவி**

**துணைபுணர் தொழில் நால்குடன் பூட்டி**

**அரித்தேர் நல்கியும் அமையான் தொலைத்து"**

(பெரும். பா.அ. 487 - 490)

என்ற வரிகளில் விளக்குகிறார். மேலும் எப்பொழுது பரிசில் பெறச் செல்கிறோமோ, அன்றைய நாளிலேயே பொருள் பல தந்து வறுமை போக்கும் பண்புடையவன் என்பதனை,

**"ஒன்னாத் தெவ்வர் உரைவிடத்து ஒழித்த**

**விசும்புசெல் இவுளியொடு பசும்படை தரீஇ**

**அன்றே விடுக்கும் அவன் பரிசில் இன்சீர்"**

(பெரும். பா. அ. 491 - 493)

என்பதன் வழி குறிப்பிடுகின்றார். பொருள் பெற்று ஆற்றுப்படுத்தப் பட்டவர்கள் தான் வழியில் காணும் மற்றையோனுக்கும் ஆற்றுப்படுத்துகின்றனர் என்பதிலிருந்து, தன் நலம் போல் பிறர் நலம் பேணல் வேண்டும் என்ற கொள்கையுடன் சங்க மாந்தர்கள் வாழ்ந்தமையும் வெளிப்படுகிறது.

## பொருநனும் ஆற்றுப்படுத்தலும் :

கரிகால் வளவனிடம் பரிசில் பெற்று மீண்டு வரும் பொருநன் ஒருவன், வள்ளலை நாடிச்செல்லும் வறிய பொருநனை வழியிற்கண்டு, அவனைக் கரிகாலனிடம் ஆற்றுப்படுத்துகிறார் முடத்தாமக்கண்ணியார் எனும் புலவர்.

பொருள் பெற்றோன் பொருள் பெறாதோரை நோக்கி,

**"பீடுகெழி திருவின் பெரும்பெயர் நோன்தாள்**

.... .... .... .... .... .... ....

**அறியாமையின் நெறிதிரிந்து ஒராஅது**

**ஆற்றெதிர்ப் படுதலும் நோற்றதன் பயனே"**

(பொருநர். பா.அ. 53-59)

என்றவாறு ஆற்றுப்படுத்துகின்றனர். மேலும், கரிகாலனிடம் ஆற்றுப்படுத்திப் பரிசில் நல்கும் சிறப்பினை,

**"செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய**

**செல்வ சேறும்எம் தொல்திப் பெயர்ந்தென**

**மெல்லெனக் கிளந்தன மாக வல்லே**

**அகறி ரோஎம் ஆயம் விட்டெனச்**

**சிரறிய வன்போல் செயிர்த்த நோக்கமொடு**

**துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு**

**பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்**

**தன்னறி அளவையின் தரத்தர யானும்**

**என்னறி அளவையின் வேண்டுவ முகந்துகொண்டு**

**இன்மைதீர வந்தனென் வென்வேல்"**

(பொருநர். பா.அ. - 120 - 129)

என்ற அடிகளின்வழி அறிய முடிகிறது. உள்ளத்தால் எண்ணியவற்றைக் குறிப்பால் உணர்ந்து பரிசில் நல்கி, ஆற்றுப்படுத்திய பெருமை உடையவன் கரிகாலன் என்பதும் பெறப்பட்டது.

## இறைவனிடத்து ஆற்றுப்படுத்தல் :

தொல்காப்பியர் கூத்தர், பாணர், விறலியர், பொருநர் ஆகிய நால்வரையும் பொருளுதவி புரியும் வள்ளல்பால் ஆற்றுப்படுத்துவது எனக்கூறினார். இதனால் புலவரை ஆற்றுப்படுத்தல் அக்காலத்தில் வழக்கில் இல்லை என்பது தெளிவாகிறது. முருகன் அருள்பெற்ற ஒருவர், புதிய புலவர் ஒருவரை முருகன்பால் ஆற்றுப்படுத்துவதாக அமைந்தது திருமுருகாற்றுப்படை ஆகும்.

## கூத்தரும் ஆற்றுப்படுத்தலும் :

செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனிடம் பரிசில் பெற்று மீண்டு வந்த கூத்தன், வறிய கூத்தனை வழியில் கண்டு, அவனையும்

கூட்டத்தாரையும் அவ்வள்ளலிடத்து ஆற்றுப்படுத்தப்படும் செய்தியைப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியுள்ளார்.

**"தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின்**

**மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்கு**

**யாமவண் நின்றும் வருதும் நீயிரும்**

.... .... .... .... ....

**முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பின்**

**இசைநுவல் வித்தின் நசையோர் உழவர்க்குப்**

**புதுநிறை வந்த புனலஞ் சாயல்"** (கூத்தர். பா.அ. 51 - 66)

என்ற வரிகளில் நன்னனை அடைந்தால் நல்ல பயன் பெறுவீர்கள் என்றுகூறி ஆற்றுப்படுத்திய செய்தி வெளிப்படுகிறது.

## விறலியரை ஆற்றுப்படுத்தல் :

ஒவ்வொரு கலைஞரையும் ஒவ்வொரு புலவரும், கலைஞரும் ஆற்றுப்படுத்தியுள்ளனர். அதுபோல, விறலியரை ஆற்றுப்படுத்திய செய்திகள் புறநானூற்றில் கூறப்பட்டுள்ளன. நெடும்பல்லியத்தனார் எனும் புலவர்,

**"நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி**

**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக!**

**களிஇயல் யானைக் கரிகால் வளவ!**

.... .... .... .... .... ....

**மிகப்புகழ் உலகம் எய்திப்**

**புறப்புண் நாணி வடக்கிருந் தோனே?"** (புறம். பா. எ. 192)

என்றவாறு பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம் விறலி ஒருத்தியை ஆற்றுப்படுத்தியுள்ளார்.

ஔவையார் என்ற பெண்பாற் புலவர், விறலியரை,

**"ஒருதலைப் பதலை தூங்க ஒரு தலைத்**
**தூம்பு அகச்சிறு முழாத் தூங்கத் தூக்கி**
.... .... .... .... .... ....
**அலத்தற் காலை ஆயினும்,**
**புரத்தல் வல்லன், வாழ்க அவன் தாளே!"** (புறம். பா.அ. - 103)

என்றவாறு அதியமான் நெடுமான் அஞ்சியிடம் விறலியை ஆற்றுப்படுத்திய செய்தி பெறப்படுகிறது.

கபிலர் என்பவர் வேள்பாரியிடம் விறலி ஒருத்தியை ஆற்றுப்படுத்திய செய்தியை,

**"சேயிழை பெருகுவை வாள் நுதல் விறலி**
**தடவு வாய்க் கலித்த மாஇதழ்க் குவளை**
.... .... .... .... .... ....
**நீரினும் இனிய சாயற்**
**பாரி வேள்பால் பாடினை செலினே"** (புறம். பா.அ. - 105)

என்ற அடிகளில் எடுத்தியம்பியுள்ளார். மேலும் முடமோசியார் எனும் புலவர்,

**"மெல்இயல் விறலி! நீ நல் இசை செவியின்**
**கேட்பின் அல்லது காண்பு அறியலையே**

.... .... .... .... .... ....

**மாரி அன்ன வண்மைத்**

**தேர் வேள், ஆயைக் காணிய சென்மே!"** (புறம். பா.அ. - 133)

என்ற பாடலடிகளின் வழி விறலி ஒருத்தியை ஆய் வேளிடம் ஆற்றுப்படுத்திய செய்தி இப்புறநானூற்றின்வழி அறிய முடிகிறது.

தன் வறுமை நீங்கியதோடல்லாமல் வறுமையின் காரணமாக உள்ளத்தில் ஏற்படும் உளமுறிவு, உளப்போராட்டம் நீங்கப்பெற்று, தன்னைப்போன்ற நிலையில் உள்ளோருக்கு ஆற்றுப்படுத்தியமையும் ஆற்றுப்படை இலக்கியங்களில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

## குழு வழிகாட்டுதலும் அறிவுரை பகர்தலும் :

ஆற்றுப்படை இலக்கியங்கள் தனி ஒருவனின் உளநோய் போக்கியதோடன்றி, அவனைச் சார்ந்த குழுவினரும் பயன்பெறும் வகையில் கூறப்பெற்றுள்ளன. பாணர்களும் பொருநர்களும் விறலியர்களும் கூத்தர்களும் புலவரின் ஆற்றுப்படுத்தலின் அடிப்படையில் தான் பயன் பெற்றதோடல்லாமல், வழியில் கண்டோருக்கும் கூறி ஆற்றுப்படுத்துகின்றனர். இச்செய்தி சிறுபாணாற்றுப்படையில்,

**"குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்**

**செல்லிசை நிலைஇய பண்பின்**

**நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே"** (சிறு. பா.அ. 267-269)

என்றவாறு பாடப்பெற்றுள்ளது. இதனை உளவியலர் குழு ஆற்றுப்படுத்துதல் என்கின்றனர். வழிகாட்டுதலில் தனிநபருக்கு

வழிகாட்டுவதும் குழுவினருக்கு வழிகாட்டுவதும் நடைமுறையிலுள்ளன. குழு வழிகாட்டுதல் என்பது வழிகாட்டுதல் நிகழ்ச்சியின் முக்கியமான அங்கமாகும். ஆனால், வழிகாட்டுதலின் நோக்கங்கள் பெரும்பாலும் தனிநபர் அடிப்படையிலானவை.

ஜோன்ஸ் எனும் அறிஞரின் கூற்றுப்படி, குழு வழிகாட்டுதல் என்பது, 'குழுவிலுள்ள ஒவ்வொரு தனிநபரின் சிக்கல்களைத் தீர்த்து அவருக்குப் பொருத்தப்பாட்டினை உண்டாக்குவதையே தலையாய நோக்கமாகக் கொண்டு செயல்படும் செயல்பாடே குழு வழிகாட்டல் ஆகும். குழுவிலுள்ள அனைவருக்கும் உதவுவதே இதன் நோக்கமாகும்.

(கலைச்செல்வி.வெ. வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும். ப- 59)

குழுவிலுள்ள ஒருவருக்கு வழிகாட்டுவதன் மூலம் பலரும் பயன் பெறுகின்றனர். இதனால் நேரமும் செலவுச் சிக்கனமும் ஏற்படுகிறது. உள்ளமும் உடலும் மேம்படுவதன் மூலம் மனப்பாங்கும் நடத்தையும் மேம்படுகிறது. தனி மனிதன் தன்னைப் பற்றிச் சிந்திப்பதோடல்லாமல், தான் சார்ந்துள்ள குழுவினரின் முன்னேற்றத்தைப் பற்றிச் சிந்திக்கும் எண்ணமும் மேலோங்கும்.

**மாஸ்லோவின் கோட்பாடு :**

மனிதன் உயிர் வாழ்வதற்குத் தேவையான உடலியல் தேவைகளில் முக்கியமானதாகக் கருதப்பெறுவது உணவு, நீர், காற்று ஆகும். காற்றும், நீரும் இயல்பாக இயற்கையாகக் கிடைத்து விடுகிறது. ஆனால், உணவு, உடை கிடைக்காத சூழலை வறுமை என்கிறோம். இந்த வறுமையைப் போக்குவதற்காகவே பாணரும், பொருநரும், விறலியரும்,

கூத்தரும் புலவர்களாலும், ஆற்றுப்படுத்தப்பட்ட தம் இனத்தவர்களாலும் இத்தேவைகளை நிறைவு செய்துள்ளனர்.

வறுமையைச் சிறுபாணாற்றுப்படையில் (சிறு. பா.அ. 135 - 143) நல்லூர் நத்தத்தனார் எனும் புலவர் மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றார்.

வறுமையிலும் பசி என்பது மிகக் கொடுமையானது. இதனால், நல்ல மனிதர்களும், பல்வேறு பிணிகட்கு ஆளாகுவர் என்பதனை,

**“குடிப்பிறப்பு அழிக்கும்; விழுப்பம் கொல்லும்;**
**பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்**
**நாண்அணி களையும்; மாண்எழில் சிகைக்கும்;**
**பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்;**
**பசிப்பிணி எனும் பாவி”**

(மணிமேகலை, பாத்திரம் பெற்ற காதை பா. அ. 74 - 79)

என்று விளக்கப்படுகிறது. மேலும், இவ்வறுமை நிலை போக்குவோரை,

**“மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே”**

(மேலது. பா.அ. 95, 96)

என்று உலகில் வாழ்வோர் அனைவரிலும் பிறர்க்கு உணவு அளித்துப் பாதுகாத்தவரே உயிர் கொடுத்தோர் ஆவர் என்கிறார்.

இதனடிப்படையில்தான் ஆபிரகாம் மாஸ்லோ என்பவர் மனிதனின் படிநிலைத் தேவைகளை வரையறுத்தபோது உயிர் வாழ்வதற்குத்

தேவையான உடலியல் தேவைகளில் முதலாவதாக உணவினைக் குறிப்பிட்டுள்ளார்.

“கீழ்நிலைத் தேவைகள் ஊக்கிகள் ஆகியவை பூர்த்தி செய்யப்பட்ட பின்புதான், அதற்கு அடுத்த மேல்நிலைத் தேவைகள் எழுகின்றன” இவற்றுள் தேவைகள் நிறைவுறுவதற்கான (Need gratification) ஊக்கிகளும், வளர்ச்சிக்கு உதவும் ஊக்கிகளும் அடங்கும். இவ்வூக்கிகள் யாவும் ஒரே நிலையும், தரமும், வலுவும் கொண்டவையல்ல என்கிறார் மாஸ்லோ. இவர் ஊக்கிகளையும் தேவைகளையும் ஏழு நிலைகளாக வரிசைப்படுத்தியுள்ளார்.

**மாஸ்லோவின் படிநிலைத் தேவைகள்**




(நாகராஜன்.கி., க.உ. ப.- 300)

மாஸ்லோ அவர்கள் வரிசைப்படுத்தியுள்ள தேவைகளில் முதலாவதாக உயிர் வாழ்வதற்குத் தேவைான உடலியல் தேவைகளில் உணவினைக்

குறித்துள்ளார். இந்த முதல் தேவை நிறைவு பெற்றால்தான் மனிதனின் அடுத்தடுத்த தேவைகள் நிறைவு பெறும். அடுத்தடுத்த தேவைகள் நிறைவேறும்போது தனிமனிதனும் சமுதாயமும் வளர்ச்சி பெறும் என்பதும் அறிய முடிகிறது.

சங்க மாந்தர் பிறர் நலன் காத்தலில் சிறந்தவர்கள். பிறரின் மன உணர்வுகளை உணர்ந்து செயல்படுவதில் வல்லவர்கள். கலைஞர்களின் வறுமை என்ற உணர்வினை மனத்திலிருந்து அகற்றினால் மட்டுமே கலை மேம்பாடு அடையும், கலைஞனும் நலம் பெறுவான். கலையும் வளம் பெறும்.

“பெரும்பான்மையான அடிகளில் கொடைச்சிறப்பும் போர்ச்சிறப்பும் கூறப்பட்டுள்ளன. இன்ன வள்ளலிடம் செல் என்பது ஒவ்வோர் அடியிலும் இடம்பெற்றுள்ளது.” (இராசமாணிக்கனார். மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி. ப. - 39) ஆகவே, வறுமை நீங்கப் பரிசில் தரும் மன்னனைக்கூறி, அம்மன்னனிடத்துச் செல்லும் வழியையும் கூறி ஆற்றுப்படுத்தியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

## நடத்தையும் நடத்தை மாற்றமும் :

ஓர் உயிரியின் நடத்தை என்பது அவ்வுயிரியின் உடலின் அசைவுகளாகும். வேதி வினைகள், வளர்ச்சி அசைவுகள் ஆகியவற்றின் ஒட்டுமொத்தமான கூட்டமைப்பே உயிரியாகும். ஓர் உயிரியின் இயக்கங்கள் தடையின்றியும் முறைப்படியும் தமக்குள் தொடர்பு உடையனவாகவும் காணப்படுகின்றன. இயக்கங்கள் மாறாத நிலையில் இருக்கும்போது நடத்தையில் மாற்றம் ஏற்படுவதில்லை. நடத்தை மாற்றம் சில நேரங்களில்

கூர்மதியாகவும் அறிவுத்திறனாகவும் வளர்ச்சியடைகிறது. நடத்தை வாழ்வதற்குரிய தகுதியை அறுதியிடுவதால் பரிணாமப் போக்கில் முதன்மை பெறுகிறது.

நடத்தையின் சிறப்புத் தன்மை மரபுவழித்தன்மையாகும். நடத்தை மரபுவழி முறையில் சிறப்புத்தன்மை பெற்றது. சில நடத்தை மாற்றங்கள் அழிவையும் துன்பங்களையும் விளைவிக்கின்றன. துன்பம் தரும் நடத்தை மாற்றங்களை அறிந்து உணர்த்தும்போது அம்மனிதன் தன் சொந்த வாழ்விலும் சமூக வாழ்விலும் மேம்பாடு அடைகிறான்.

"மனித உடலில் மத்திய நரம்பு மண்டலம் நடத்தை மாற்றத்தைக் கட்டுப்படுத்துகிறது" என்பர் வல்லுநர். (அறிவியல் தமிழ்க்களஞ்சியம், தொகுதி - 9, ப. - 165).

சங்க அக இலக்கியங்களில் தலைவியிடம் ஏற்படும் நடத்தை மாற்றத்தைத் தோழியும் செவிலியும் உற்றுநோக்கி உணர்ந்து பல இடங்களில் ஆற்றுப்படுத்தியுள்ளனர். மடைமாற்றமும் செய்துள்ளனர்.

**மடைமாற்றம் : (Sublimation)**

தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிச் செல்கின்றான். உரிய காலம் வந்தும் தலைவன் வரவில்லை. இதனை உணர்ந்து தலைவி வருந்திய காலத்துத் தோழி, அந்நிலைமையை மாற்றுவதற்காக இஃது உண்மையான பருவமன்று. 'காலமல்லாத காலத்துப் பெய்யும் வம்பமாரி' எனப் பொய்நிலை உரைக்கின்றாள். தலைவியின் உள்ளத்தை வேறு வழியில் திருப்பி விடுவதற்காகத் தோழி மாற்றிப் பேசுகிறாள். இதனை உளவியலில் 'மடைமாற்றம்' என்பார்கள்.

“இயல்பூக்கத்தின் வழியாக ஏற்படும் மனவெழுச்சிகளையும், ஊக்கிகளையும் சமூகத்தால் ஒப்புக்கொள்ளக்கூடிய வகையில் நிறைவேற்றிக் கொள்ள வழியில்லாத சூழ்நிலைகளில் மன இறுக்கமும், மனமுறிவும் ஏற்படுத்திக்கொள்வதைவிட, அவ்வூக்கிகள் அனைத்தையும் சமூகம் ஏற்றுக்கொள்ளக்கூடிய வகையில் உயர் ஊக்கிகளாக மாற்றுதலே மடைமாற்றம் ஆகும்.”

ஆல்போர்டின் என்ற உளவியலறிஞரின் கூற்றுப்படி, ‘மடைமாற்றம் ஒருவனிடத்தில் உள்ள சமூக எதிருணர்வு மன எழுச்சிகளை, சமூகம் ஏற்கும் வகையில் நல்வழியில் திருப்பித் தூய்மைப்படுத்தும் பண்பைக் கொண்டது’ மடைமாற்றமாகும். (நாகராசன். கி., - க.உ. ப. - 452).

நம் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களை மடைமாற்றி விடுவதால் உணர்வு வேகத்தைக் கட்டுப்படுத்தக்கூடும். இவ்விடத்துத் தோழியும் அவ்வுத்தியைக் கையாண்டுள்ளாள்.

**“மடவமன்ற தடவுநிலைக் கொன்றை**
**கல்பிறங்கு அத்தம் சென்றோர் கூறிய**
**பருவம் வாரா அளவை நெரிதரக்**
**கொம்புசேர் கொடிஇணர் ஊழ்த்த**
**வம்ப மாரியைக் கார்என மதித்தே”** (குறுந். பா.எ. 66)

என்றவாறு தலைவியின் வெறுப்பு உணர்வைத் தலைவனிடம் இருந்து மாற்றிக் கொன்றையிடம் செலுத்துகிறாள். மேலும் தலைவன் சொல்லைக் காப்பாற்றவும் தலைவியைச் சிறிது காலம் ஆற்றியிருக்கச் செய்யவும் தலைவி மடைமாற்றம் எனும் உத்தியைக் கையாண்டுள்ளமை

வெளிப்படுகிறது. இங்குத் தோழி தலைவியின் உளநோய் அறிந்து, காத்தமையும் அறியலாகின்றது.

**உளநலம் : (Mental Health)**

அகவுணர்வுகளுள் சில பிறர்க்கு உணர்த்தத் தகாதனவாகவும் உணர்த்தத் தக்கனவாயின் நேர்முகமாகக் கூறப்படாதனவாகவும் உள்ளன. நாகரிகப் போக்கும் மரபு நிலையும் இவற்றை மக்கட்கு உணர்த்தத் தடை செய்கிறது. இதனால் மனத்தில் தெளிவில்லாத நிலை ஏற்படுகிறது. இந்த மனஅழுத்த நிலைகளால் ஏற்படும் உள்ளக் குமுறலைக் குறைத்துக் கொள்ள வேண்டுமாயின், அவற்றை எவ்வகையானும் வெளியிட்டுவிட வேண்டும். "அக மனவுணர்வுகளை வெளிப்படுத்தும்போது ஒழுகலாற்றுச் சிக்கல்கள் ஏற்படாமல் தடுக்க உணர்வு வழுவமைதி எனும் உத்தியைப் படைத்துக் கொண்டதாக அ.அ. மணவாளர் அவர்கள் குறித்துள்ளார்." (மணவாளன். அ.அ., சங்க இலக்கிய ஒப்பாய்வு. ப. - 57).

தலைவி மற்றும் தலைவன் தன் உணர்வு நிலைகளைத் தன் நெஞ்சிடத்தும் பிற உயிரினங்களிடத்தும் மற்ற அஃறிணைப் பொருள்களிடத்தும் வெளிப்படுத்தும்போது மன அழுத்தம் குறைந்து உளநலம் மேம்படுகிறது.

நெஞ்சோ, மனிதனைத்தவிர பிற உயிரினங்களோ, அஃறிணைப் பொருள்களோ அவற்றைக் கேட்டு உணர்ந்து கொள்ளாமையானும் உணரினும் பிறருக்கு உணர்த்த மாட்டாமையானும் இவற்றால் எந்தவொரு சிக்கலும் விளையாமையானும் இக்கூற்றினை அமைத்துக் கொண்டனர். சங்க மாந்தர்களிடத்து இக்கூற்று ஓர் உணர்ச்சித் தணிப்பானாகப்

பயன்பட்டிருக்கிறது. அஃறிணைப் பொருள்களிடத்துத் தன் மன எழுச்சிகளைக் கூறும்போது அவை அதனைக் கேட்டு உணர்வதாகத் தலைவியும் தலைவனும் எண்ணியதைத் தொல்காப்பியர்,

**"ஞாயிறு திங்கள் அறிவே நாணே**
**கடலே கானல் விலங்கே மரனே**
**புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே**
**அவையல பிறவும் நுதலிய நெறியால்**
**சொல்லுந போலவும் கேட்குந போலவும்**
**சொல்லி யாங்கு அமையும்"...**

(தொல். பொருள். செய்யுளியல். நூ.எ. - 191)

என்ற நூற்பாவின் வழி இச்செய்தியினை விளக்குகிறார். மேலும்,

**"உறுப்புடையது போல் உணர்வுடையது போல்**
**மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்துச்**
**செய்யா மரபின் தொழிற்படுத்து அடக்கி"**

(தொல். பொருள். பொருளியல். நூ.எ. 194)

என்றும் கூறியுள்ளதிலிருந்து சிக்கலில்லாத ஓர் உணர்ச்சித் தணிப்பானாக இவ்வுத்தி பயன்படுத்தப்பட்டுள்ளமை தெளிவாகிறது. இதனை உளவியல் உளநலம், உளநலவியல் என்று குறிப்பிடுகிறது.

நற்றிணையில் தலைவியொருத்தி கிளியைத் தூதுவிட எண்ணுகிறாள். தன் மனத்துயரினை யாரிடமாவது கூறி, ஆறுதலடைய வேண்டும் எனவும் எண்ணுகிறாள். ஒருவரிடம் வெளிப்படக்கூற முடியாததைக் கிளியிடம் கூறிப் பேசுகிறாள் அத்தலைவி. இதனை,

**“கொடுங்குரல் குறைந்த செவ்வாய்ப் பைங்கிளி**
**அஞ்சல் ஓம்பி ஆர்பதம் கொண்டு**
**நின்குறை முடித்த பின்றை என்குறை**
**செய்தல் வேண்டுமால் கைதொழுது இரப்பல்**
**பல்கோட் பலவின் சாரல் அவர்நாட்டு**
**நின்கிளை மருங்கின் சேறி யாயின்**
**அம்மலை கிழவோர்க்கு உரைமதி இம்மலைக்**
**கானக் குறவர் மடமகள்**
**ஏனல் காவல் ஆயினள் எனவே!”** (நற். பா.எ. - 102)

என்ற வரிகளின்வழி தலைவி தன்னுடைய மன அழுத்தத்தைத் தன் நெஞ்சிடம் கூறி, உளநலம் பெற்றுத் தன்னைத் தற்காத்துக் கொண்டமை வெளிப்படுகிறது.

உளநலம் மிக்க குழந்தைகளைச் சிறந்த முறையில் வளர்ப்பதற்கான வழிமுறைகளைக் கண்டறியவும், குழந்தைப்பருவம் முதல் முதுமைப்பருவம் வரையுள்ள பல நிலைகளிலும் ஏற்படும் உளநலச் சிக்கல்கட்குத் தீர்வு காணும் முறைகளை விளக்கவும் உளப்போராட்டம், மனமுறிவு, உளநோய்கள் ஆகியவற்றை உரிய முறையில் தீர்த்து வாழ்வில் அமைதியும் ஆனந்தமும் பெற்று வாழவும் தோன்றிய புதியதோர் அறிவியல் துறையாக உளநலவியல் திகழ்கின்றது.

‘உளநலம் எனப்படுவது, மனக்கோளாறுகள் இல்லாமல் தனக்கும் பிறருக்கும் பயன் நல்கும் வகையில் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் பொருத்தப்பாட்டுடன் செயற்படுவதைக் குறிப்பதாகும்.

(கலைச்செல்வி. வெ., வ. அ. ப. ப. - 168).

மனத்துக்குள்ளிருக்கும் சூழ்நிலைகளிலிருந்தும் எழும் ஊக்கிகளும் தேவைகளும் நசுக்கப்பட்டு மனமுறிவு ஏற்படும்போதும், மனப்போராட்டங்கள் தீர்க்கப்படாமல் தொடரும்போதும் பொருத்தப்பாடின்மை தோன்றி மனநலத்தைக் குலைக்க நேரிடும். இத்தகைய மனநலமின்மைக்கான செயல்பாடுகள் நலம்பெற வழிவகுக்காவிடில் உள்ளத்தின் உள்ளேயே அமிழ்ந்து கிடக்கும் உணர்ச்சிகள் உடலையும் உயிரையும் அழித்துவிடும். மனநலமின்மையைச் சரியான முறையில் வெளிப்படுத்தி உளநலம் பெற்றமை தன் உளநோய் நீக்கித் தற்காத்துக் கொண்டமை சங்க மாந்தர்களின் ஆழமான உளவியலறிவினைப் புலப்படுத்துகிறது.

**உள முறிவு : (Frustration)**

நல்ல உளநலத்தை ஏற்படுத்தி உள்ளத்தையும் உடலையும் காத்தல் எளிய செயலன்று. உடலின் தேவைகள் நிறைவதால் மட்டும் உள்ளம் நிறைவுற்று விடுவதில்லை. ‘உள்ளத்தின் தேவைகளே மக்களின் வாழ்க்கையில் கவலையை வளர்க்கின்றன. உள்ளத்தின் அமைதியும் தெளிவுமே மக்களுக்கு உண்மையின்பம் தருகின்றன’ என்பர் அறிஞர். (வரதராசன்.மு. - கவிஞர் தாகூர். ப. - 70) மேலும் திருவள்ளுவர் மனநலம் பற்றிக் கூறும்போது ‘மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்’ என்று குறிப்பிடுகிறார். (குறள். 457).

நலமான உள்ளம் பெற்ற மனிதன் தன்னுள் நிறைவும் ஒத்திசைவும் பெற்றிருப்பான். சமூக நல்லிணக்கம் அவனது நடத்தையின் பொதுப்போக்காக இருக்கும். ‘உள்ளும் புறமும் ஒத்து வாழ்வதே நல்ல ஆளுமையாகும்.’ என்பர் உளவியலர். (மனுவேல். ஐ. உளச்சுகாதாரம் - கலைக்களஞ்சியம் - தொகுதி இரண்டு. ப. - 373).

தன்னளவில் முரண்பாடுகள் அற்ற ஒத்திசைவும் சமூக அளவில் நல்லுறவான இணக்கமும் உளநலத்தின் இருபெரும் கூறாகும். சங்க இலக்கியத்தில் உள்ளம் முறிந்து இறுக்கம் பெற்றுத் தவிக்கும் சூழல்கள் பல இடம் பெற்றுள்ளன. சங்கப் புலவர்களால் நம் பண்டைய நிலை, முன்னோர் பழக்கவழக்கங்கள், வாழ்க்கைப் போராட்டங்கள், இடர்ப்பாடுகள், அவற்றை ஆட்கொண்ட விதம் ஆகியவற்றை அறிய இயலுகிறது.

உள முறிவு என்பது விரும்பிய ஓர் இலக்கினை அடைய முடியாத போதும், இலக்கினை அடையத் தடைகள் ஏற்படும்போதும் தேவைகள் நிறைவுறாத போதும் ஏற்படுகின்றது. இதனை உளவியலார், 'விரும்பிய இலக்கினை அடைவதில் நேரும் தடைகளாலோ, குறுக்கீடுகளாலோ, நேரிதான குறிக்கோள் ஒன்று இன்மையாலோ விளைவதாகும்' என்கின்றனர். (James C. Coleman, Psychology and effective behaviour, P- 176). இதனைப் பிரித்தானியக் கலைக்களஞ்சியம், 'ஓர் அழுத்தமான தேவையும் அதனை எய்தி நிறைவுற இயலாத உணர்வும் உடனியையும்போது நேரும் அனுபவமே உளமுறிவு' என்கிறது. (Norman Alexander Cameron, Psychology Abnormal, Encyclopedia Britanica, Vol. 18, P-749) அடிப்படையில் நோக்கும்போது எண்ணியதை அடைய இயலாத நிலையில் மனமுறிவு ஏற்படுகிறது. இந்த மனமுறிவு ஏற்படும் நிலையினை மூன்று வகையாகக் குறிப்பிடுவர் அறிஞர். (கலைச்செல்வி. வெ. வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும், ப. - 179)

1. சுற்றுச் சூழலால் ஏற்படும் மனமுறிவு.

2. சொந்தக் காரணங்களால் ஏற்படும் மனமுறிவு.

3. மனப்போராட்டங்களால் ஏற்படும் மனமுறிவு என்பதாகும்.

இதனை 1. நிராசை அல்லது விருப்பம் நிறைவேறாமை (ஆசாபங்கம்), 2. இடையூறு அல்லது கட்டுப்பாடு, 3. உடலுக்காவது உள்ளத்துக்காவது வருத்தமோ துன்பமோ உண்டாக்கக்கூடியதாகப் புறத்தேயிருந்து தாக்குதல்' என்கிறது கலைக்களஞ்சியம். (பெட்போர்டு. ஆர்.ஐ. மனமிடிதல் கலைக்களஞ்சியம் - தொகுதி - 8. ப. - 198)

**1. சுற்றுச்சூழலால் ஏற்படும் மனமுறிவு :**

உயிருள்ள பொருட்கள், உயிரற்ற பொருட்களால் ஏற்படும் பல்வகைத் தடைகளால் இலக்கினை அடைய இயலாத நிலையில் இந்த மனமுறிவு ஏற்படுகிறது. 'நிலநடுக்கம், பெருந்தீ, பெரும்பஞ்சம், விபத்துக்கள், அன்பிற்குரியவர்களின் இறப்பு' முதலியவற்றைச் சூழ்நிலைத் தடைகள் என்பர். (James C. Colemen, Psychology and effective Behaviour, P. 176) இதனை ஐயூர் முடவனார் எனும் புலவர் தன்னுடைய பாடலடிகளில்,

**"நீர்மிகின் சிறையும் இல்லை தீமிகின்**
**மன்னுயிர் நிழற்றும் நிழலும் இல்லை**
**வளிமிகின் வலியும் இல்லை"** (புறம். பா.எ. - 51).

என்றவாறு குறிப்பிட்டுள்ளார். இயற்கையாற்றல்கள் அளவிறந்து பெருகி நிற்கும்போது தடுக்கும் பேராற்றல் எதுவும் இல்லை. ஆகையால் வெள்ளம், புயல், மழையின்மை ஆகிய இயற்கைக் கேடுகள் உள்ளத்தைச் சிதைக்கின்றன.

தொடர்ந்து பெய்யும் பெருமழையால், மக்கள் தங்கள் வாழ்விடத்தை விட்டு வேறிடம் செல்லும்போது நேரிடும் துன்பத்தை,

**“கால்பொரு திடிப்பினும் கதழுறை கடுகினும்**

**உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்**

**பெருநிலங் கிளரினும்”** (நற். பா.எ. - 201)

என்ற அடிகளில் வெளிப்படுத்துகிறார். மேலும் மழையற்ற காலத்தின் வெறுமையும் வறுமை என்ற துன்பத்தால் உளமுறிவை ஏற்படுத்துகிறது.

நிலத்தின் இயற்கையாலும் பருவமாறுதலாலும் நேரும் வழியிடைத் துன்பங்களைவிடக் கள்வரால் நேரும் தொல்லைகள் மனத்தை நடுங்கச் செய்வனவாகும். களவும் கொலையும் கைப்பழக்கமான கள்வர்கள் கொள்வதற்குப் பொருளில்லையாயினும் பிறர் துடித்துச் சாவதைக் கண்டு மகிழ்வதற்காகக் கொல்கிறார்கள்.

**“கொள்ளும் பொருளிலர் ஆயினும் வம்பலர்**

**துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்**

**புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை”** (கலி. பா.எ. - 4)

என்ற கலித்தொகை அடிகள் கள்வரது இயல்பை எடுத்துக்கூறுகின்றன. இச்செய்தியினை அகநானூற்றுப் புலவர்,

**“கைப்பொருள் இல்லை ஆயினும் மெய்க்கொண்டு**

**இன்னுயிர் செகாஅர் விட்டகல் தப்பற்கு”** (அகம். பா. எ. 109)

என்று பாடியுள்ளார். இவ்வரிகளில் அறம் விலக்கிய ஆட்சி குறிக்கப்படுகின்றது. மனமுறிவிற்கு இயற்கைச் சீற்றங்கள் காரணமாயிருப்பினும் மற்றொரு நிலையில் மனிதர்களும் காரணமாய் இருக்கின்றனர். உள்ளத்தைத் தாக்குவதும், உடலைத் துன்புறுத்துவதும் மனமுறிவிற்கு முக்கியக் காரணிகளாகும்.

“மனமுறிவிற்குப் பிற மனிதர்களே பெரிதும் பெருந்தோற்றுவாய் ஆவர்” என்பது உளவியலறிஞர் கருத்தாகும். (Rajendra Avasthi, Psyche, Society and Tensions, P - 12)

மனமுறிவிற்குப் பிற மனிதர்களும் பல சூழல்களில் காரணமாய் இருந்துள்ளனர். இருப்பினும் மனமுறிவினை நீக்குவதற்கு என்று தனிப்பட்ட மையங்கள் இன்றி, உடனுறையும் மக்களே தற்காப்பாளராகவும், அறிவுரை பகர்பவராகவும் இருந்துள்ளனர்.

**2. சொந்தக் காரணங்களால் ஏற்படும் மனமுறிவு :**

அன்றாட வாழ்வில் மனிதனுக்கு நேரும் மன நெருக்கடிகள் பெரும்பாலும் சொந்தக் காரணங்களால் ஏற்படுகின்றன. அவை சிறியதாகவும் எளிமையாகவும் இருக்கின்றன.

நற்றிணைப்பாடல் ஒன்றில் தலைவியின் உடன்போக்கின்பின் தலைவியின் தாய்,

> **“கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும்**
> **காழ்பெய் அல்குல் காசுமுறை திரியினும்**
> **மாணலங் கையறக் கலுழும்”**

என்ற வரிகளில் தாய் தன் மகளின் இளமை நினைந்து வருந்துகிறாள். வளரிளம் பருவத்தில் மாலையை முறை செய்யவும், ஆடையைச் சரி செய்யவும் இயலாத அறியாமை கொண்டவளின் நிலையை எண்ணும்போது தாய்க்கு மனமுறிவு ஏற்படுகிறது.

சிறுவர் சிறுமியர் கடலோரங்களில் மணலில் பாவை செய்வித்து விளையாடுவர். அவ்வாறு விளையாடும்பொழுது கடலலை அப்பாவையை அழித்து விடுகிறது. இதனை,

**“தென்திசை பாவை வெளவ உண்கண்**
**சிவப்ப அழுது”** (ஐங். பா.அ. 125) என்றும்,

**“மாதர் மடநல்லார் மணலில் எழுதிய**
**பாவை சினந்தது”** (பரி. பா.எ. 7)

என்றும் குறிப்பிடுவதிலிருந்து இளஞ்சிறார்களின் மனமுறிவும் வெளிப்படுகிறது.

தனிமனிதர் வாழ்வில் பல மனக்குறைகள் நின்று உறுத்துதல் உண்டு. சிலர் வாழ்வில் பிள்ளையற்ற துயரம் பெருந்துயரம் ஆகும். பரிபாடலில் முருகனை வணங்குவோர் தன்னுடைய குறைகளை எல்லாம் சுட்டி வேண்டுதல்கள் கூறப்படுகின்றன. இதனை,

**“கருவயிறு உருகெனக் கடம்படு வோரும்**
**செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த் துவோரும்**
**ஐயமர் அடுகென அருச்சிப் போரும்”** (பரி. பா. எ. - 8)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. ஒவ்வொருவர் வாழ்விலும் ஒவ்வொரு குறையையும் குறைதீர வேண்டி முறையிடுதலையும் காணமுடிகிறது. இங்கு தங்கள் மனமுறிவினைப் போக்க இறைவன் முருகனை வேண்டுகின்றனர். ஆகவே, மனமுறிவினைப் போக்கி, மக்களைக் காக்கும் காவலனாக முருகப்பெருமானைக் குறிப்பிட்டுள்ளதும் வெளிப்படுகிறது.

தன்னுடைய தேவைகளை நிறைவு செய்வதற்குத் தனிப்பட்ட இயல்புகளும் தடையாகி விடுவதுண்டு. அத்தகைய இயல்புகளாக உளவியலர், ‘உடற்குறைகள், நோய், குறைந்த அறிவுத்திறன், சிலவற்றில் சிறப்புப்பயிற்சி இன்மை ஆகியவற்றைக் குறிப்பர்.’ (James.C. Coleman, Psychology and effective behaviour, P - 176).

மற்ற மனிதர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து உடற்குறைபாடு உடையவர்கள் மனமுறிவு அடைகின்றனர். இதனை,

**“சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்**
**கூனும் குறளும் ஊமும் செவிடும்**
**மாவும் மருளும் உளப்பட”** (புறம். பா.எ. - 28)

இவ்வரிகளில் குருடு, உறுப்பமைதியற்ற, தசைத்திரட்சியான பிண்டம், உடற்கூனல், இயல்பு வளர்ச்சி அற்று உயரம் குறுகுதல், ஊமை, செவிடு, விலங்கு வடிவாதல், அறிவு மருட்சி ஆகிய எண்வகைக்குறைபாடுகளைப் புறநானூறு சுட்டுகின்றது.

உடற்குறையாளர்களை ‘மாற்றுத்திறனாளிகள்’ என்கின்றனர். இவர்கள் தங்களுடைய குறைபாட்டினை எண்ணாமல், வேறு ஒரு திறனில் நல்ல திறனுடையவர்களாக இருப்பர். இருப்பினும் இவர்கள் தங்களுக்கு நேரும் துயரத்தை அன்றிப் பிறருக்கும் பிறவற்றிற்கும் நேரும் துயரத்தையும் தீர்க்க இயலாமல் துடிக்க நேர்தல் உண்டு. இச்செய்தியினை, கடல் நடுவே கலம் கவிழ்ந்து துன்புறும் கண்ணில் ஊமனைப் புறநானூறு,

**“மாரி இரவின் மரங்கவிழ் பொழுதின்**
**ஆரஞர் உற்ற நெஞ்சமொ டொராங்குக்**
**கண்ணில் ஊமன் கடற்பட் டாங்கு”** (புறம். பா.எ.- 238)

என்ற வரிகளின்வழி எடுத்துக்காட்டுகிறது. இவ்வரிகளில் காலம், பொழுது, விபத்து, உடற்குறை ஆகிய அனைத்தும் ஒருங்கு சேரத் துன்புற்று அவலச் சுழியில் அகப்பட்டுத் தவிக்கும் மனிதனைக் காட்டுகிறது.

ஒருவன் நெடுமலை மேலொரு தேன்கூடு கண்டான். அவன் அதனை எடுத்துண்ணும் வழிவகையான பழக்கப்பயிற்சி அற்றவன். பழைய ஏணியைப் பயன்படுத்தி ஏறுகிறான். ஏணி முறிந்து விடுமோ என அஞ்சி இடையில் இறங்கி விடுகிறான். இதனைக் குறுந்தொகை,

**“பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்பு**

**அறியா தேறிய மடவோன்”** (குறுந். பா.எ. 273)

என்றவாறு அவனைக் குறிக்கின்றது. அவனுள்ளத்தில் ஆசையும் அச்சமும் மோதுகின்றன. விரும்பிய பொருளை அடைய உரிய பயிற்சியும் கருவியும் இல்லாத மடவோனாக அவன் உள்ளான். செயலற்ற வருத்தத்தில் அவன் சிந்தை அழிந்து மனமுறிவு ஏற்படல் இயல்பேயாகும்.

‘ஒருவனது நாட்டத்தின் அளவுக்கும் உண்மைத்திறனுக்கும் வேறுபாடு அதிகம் இருப்பின் அவன் மனமுறிவு பெறுகிறான்.’

(சண்முகம். தா.ஏ. உளநலவியல். ப. - 40)

என்ற உளவியல் கருத்துப்படி, இலக்கினை அடைய இயலாமை ஏற்படும்போது மனமுறிவு ஏற்படுகிறது.

### வறுமையும் மனமுறிவும் :

பொருளாதாரச் சீர்கேடு உள்ளத்தைச் சிதைத்துவிடும் தன்மையது ஆகும். சங்க காலத்தில் ஒருவனது பொருளாதார நிலை, அவனது

பிறப்பு, மேற்கொண்ட தொழில், சமுதாயத்தில் அத்தொழிலின் நிலை ஆகியவற்றைச் சார்ந்து அமைந்தது. அக்காலக் கலைஞர்கள் வள்ளல்களை நம்பி வாழ்ந்தனர். பெற்ற பொருளை வைத்துக் காக்கும் உளப்பாங்கு இல்லாமல் வாரி வழங்கும் மரபினர். எனவே, வறுமை அவர்களிடம் விரைவில் வந்து விடுகிறது.

**“ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்**
**ஆம்பி பூப்பப் தேம்புபசி உழவாப்**
**பாஅல் இன்மையிற் தோலொடு திரங்கி**
**இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை**
**சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி**
**நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கணென்**
**மனையோள் எவ்வம்”** (புறம். பா.எ. 164)

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் சமையல் மறந்த அடுப்பும், பால் மறவாக் குழந்தையின் பசியும், கண்ணீர் அறாத மனைவியின் கண்களும் இல்லத் தலைவனின் உள்ளம் சிதைக்கும் நிகழ்வுகள் ஆகும்.

ஒற்றைப் பசுவை வாழ்முதலாகக் கொண்ட வறிய மனையின் வெறுமையைச் சில பாடல்கள் குறிக்கின்றன.

**“சீரும் சிறப்பும் இன்றிச் சீறூர்**
**நல்கூர் பெண்டிர் புல்வேய் குரம்பை**
**ஓரா யாத்த ஒருதூண் முன்றில்”** (அகம். பா.எ. - 369)

**“ஓரான் வல்சி சீரில் வாழ்க்கை”** (குறுந். பா.எ. - 295)

வறுமையினால் மனையில் எச்செயல்பாடும் நடக்கவில்லை. இதனால் குடும்பத்திலுள்ள அனைவருக்கும் மனமுறிவு ஏற்படுகிறது.

## இழப்பினால் ஏற்படும் மனமுறிவு :

மனித இழப்புகளில் மிகப்பெரியது உடனுறை மனிதனின் மரணம் ஆகும். எவ்வகையிலும் ஈடுசெய்ய முடியாத இழப்பாகிய மரணத்தால் உள்ளம் எளிதில் ஆறுவதில்லை. தன்னுடைய வாழ்நாளை இதுவரை என்று அறிந்திருந்தால், அந்த இழப்பினை எளிதில் ஈடுசெய்து விடலாம். ஆனால், இன்றுவரை வாழ்நாளை யாரும் துல்லியமாகக் கணிக்கவில்லை என்பதனை,

**“வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை”** (நற். பா.எ. - 314)

**“கடைநாள் இதுவென்று அறிந்தாரும் இல்லை”** (கலி. பா.எ. - 12)

என்ற பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன. சாவுக்குச் சாவின்மையும் சுடுகாட்டிற்கொரு சுடுகாடு இன்மையும் பற்றி,

**“நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்**
**என்புபடு சுடலை வெண்ணீறு அவிப்ப**
**எல்லார் புறனும்தான் கண்டு உலகத்து**
**மன்பதைக் கெல்லாம் தானாய்த்**
**தணன்புறம் காண்போர்க் காண்பறி யாதே”** (புறம். பா.எ. - 356)

என்ற கதையங்கண்ணனாரின் பாடல் அடிகள் மனித உள்ளத்தை முறிக்கும் நிலை இங்கு அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது. மேலும், கணவனை இழந்த மகளிரின் மனக்கிளர்ச்சி,

**“மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்”** (புறம். பா.எ. - 25)

மகளிரின் உள்ளத்தை மிக வேகமாகப் பாதிக்கின்றது. இதுபோன்ற பல உளமுறிவுகள் சங்க மாந்தருக்கு ஏற்பட்டமையும், சில உளமுறிவுகள்

எத்தகைய ஆற்றுப்படுத்தலுமின்றிக் காலப்போக்கில் இயல்பாகவே நீக்கம் பெற்றன. சில உளமுறிவுகள் மனித முயற்சியாலும் மற்றும் சில உடனிருப்போரின் ஆற்றுப்படுத்தலாலும் தெளிவு பெற்றனர்.

**மனப்போராட்டத்தினால் ஏற்படும் மனமுறிவு :**

ஒருவரால் சரியான தீர்வு காண இயலாத பொழுதும், மனமகிழ்ச்சி அற்ற நிலையிலும் மனப்போராட்டம் தோன்றுகிறது. சங்க இலக்கியங்களில் பொருளும் வாழ்வும், முரணும் இடங்களில் தலைவியும் தோழியும் பொருளின் தேவைகூறி, வாழ்வின் பெருமை பேசுகின்றனர். தலைவன் பொருளின் தேவையை எண்ணுகின்றான். ஆகவே, தலைவன் விரும்பியும் விரும்பாமலும் பொருள்வயிற் பிரிகின்றான். தவிர்க்கவும் இயலாமல் வழியனுப்பவும் முடியாமல் தலைவி மனப்போராட்டத்தினால் புலம்பித் தவிக்கின்றாள். இப்பொதுமைத் தன்மையின் இயல்பு நிலையினை நல்லந்துவனார் எனும் புலவர்,

**“மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்**
**நீள்சுரம் போகியார் வல்லைவந்து அளித்தலும்**
**வீழ்வார்கண் தோன்றும் தடுமாற்றம் தாலத்துள்**
**வாழ்வார்கட் கெல்லாம் வரும்”** (கலி. பா.எ. - 145)

என்ற வரிகளில் சுட்டியுள்ளார். இந்தத் தடுமாற்றமான நிலை உலகத்து வாழ்வார்கட்கெல்லாம் வரும் என்றும் கூறுகிறார். இந்த மனப்போராட்டத்தினைத் தலைவன் ஆற்றுவித்துக் குறித்த காலத்தில் திரும்புவேன் எனத் தலைவியிடம் சொல்லிச் செல்லும்போது, தலைவியின் மனமுறிவு ஓரளவிற்குக் கட்டுப்படுகிறது.

சமுதாய மதிப்பை விழைதல் என்பதன் எதிர்ப்பதமாகப் பழிக்கு அஞ்சி வாழ்தலைக் கூறுவர்.

**"புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்"** (புறம். பா.எ. - 165)

என்ற அடிகள் சான்றோர்கள் புகழ் வரும்போது உயிரையும் கொடுப்பர். ஆனால், பழி வரும்போது உலகமே கிடைத்தாலும் ஏற்றுக் கொள்வதில்லை. சேரமான் நெடுஞ்சேரலாதன், தன் மார்பிடை வேல்பட்டதாயினும் முதுகிலும் புண்பட்டமையால் புறப்புண் நாணி வடக்கிருந்தான். (புறம். பா.எ. - 72) மார்பிடைப் புண்பட்ட மகிழ்வினும், முதுகில் புண்பட்ட மனப்போராட்டத்தினால் மனமுறிவு ஏற்பட்டது.

மக்களின் தூற்றுதலும் புலவரின் போற்றுதலும் விரும்பும் அரசனுக்கு மனப்போராட்டம் எழுகிறது.

**"குடிபழி தூற்றும் கோலோன் ஆகுக**
**புலவர் பாடாது வரைகவென் நிலவரை"** (புறம். பா.எ. - 72)

என்று கூறுவதில் தூற்றுதலை வெறுத்தலும், போற்றுதலை விரும்புதலும் உள்ளத்தின் இருநிலைகள் ஆகும். இந்த மனப்போராட்டம் மனமுறிவு ஏற்படக் காரணமாகிறது.

சங்க காலத்தில் மனமுறிவானது தனிமனிதனுக்குத் தன் சொந்தக் காரணங்களாலும், சூழலாலும், மனப்போராட்டத்தாலும் ஏற்பட்டது. மனமுறிவுகளை இயல்பாகவும், பிறரின் ஆற்றுப்படுத்தலாலும் களைந்து சங்க கால மாந்தர்கள் தங்களின் உளநோய் நீக்கித் தற்காத்துக் கொண்டமை மேற்கண்ட சான்றுகளின்வழி தெளிவாகிறது.

## உள்ளப்போராட்டம் : (Mental Conflict)

ஒரே நேரத்தில் ஒரே நிலையில் ஒன்றிற்கு மேற்பட்ட முடிவுகள் எடுக்கப்படும் சூழலில் உள்ளப்போராட்டம் ஏற்படுகிறது. இதனை, 'இரண்டு சமவலிமையுடைய ஊக்கிகள் பூர்த்திபெற இயலாது. ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதன் காரணமாக ஏற்படும் உளநிலையே உள்ளப்போராட்டம்' என்பர் உளவியலார். (சண்முகம், டி.ஈ. உளப்போராட்டம், கலைக்களஞ்சியம் தொகுதி - 10, ப. 134)

'மனம் சரியான முடிவெடுக்கும் நிலையில் இல்லாதபோது, மனமகிழ்ச்சியற்ற நிலையும், துயரமும் ஏற்படுகிறது. உள்ளத்தின் நிலை தனிப்பட்ட ஒருவனுடைய செயலைத் தடுத்து நிறுத்துகிறது. மனப்போராட்டம் மனமுறிவினால் உண்டாகிறது. ஏனென்றால், மனமுறிவும் மனப்போராட்டமும் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டவை' (மணிவண்ணன். மா., வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும், ப. 180)

உள்ளத்தின் நோக்கமும் ஊக்கமும் மனிதனைச் செயல்படுத்துகின்றன. ஒரே நேரத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட விருப்பங்கள் உடன் நிகழ்வாய்த் தோன்றுமாயின் எதனை ஏற்பது, விடுவது என்ற ஐயம் தோன்றும்போது ஏற்படும் முடிவெடுக்க இயலாத நிலையே மனப்போராட்டமாகும். 'உள்ளப் போராட்டத்தைக் கார்ட் லீவின் எனும் உளவியல் அறிஞர் மூவகைப்படுத்தியுள்ளார். அவை,

1. அணுகுதல் - அணுகுதல் போராட்டம் (Approach - Approach Conflict)

2. அணுகுதல் - விலகுதல் போராட்டம் (Approach - Avoidance Conflict)

3. விலகுதல் - விலகுதல் போராட்டம் (Avoidance - Avoidance Conflict)

(James C. Colman, Psycholoy and effective behaviour, P- 179) என்பதாகும்.

**அணுகுதல் – அணுகுதல் போராட்டம் :**

விரும்பத்தகுந்த இரண்டு இலக்குகளை அடைய முற்படும்போது ஏதேனும் ஒன்றை அடைய வேண்டும் என்ற நிலையில் இந்த உள்ளப்போராட்டம் ஏற்படுகிறது.

'விரும்பத்தகுந்த இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாற்றுகளிடையே நிகழலாகும் போட்டியை உள்ளடக்கியதே அணுகுதல் அணுகுதல் போராட்டம்' என்பர் உளவியலர். (James C. Colman, Psycholoy and effective behaviour, P- 179)

இரண்டு இலக்குகளையும் அடைய வேண்டும் என உள்ளம் எண்ணுகிறது. இருப்பினும் இரண்டில் ஏதேனும் ஒன்றினை மட்டுமே அடைய முடியும் என்ற நிலையில் ஏற்படுவதே மனப்போராட்டமாகும்.

சங்க மாந்தர்களில் உடன்போக்கிற்கு உடன்பட்ட தலைவி இறுதி நேரத்தில் தயங்கித் தவிக்கிறாள். தோழியின் முயற்சியில் உடன்போக்கிற்கான ஏற்பாடுகள் நிறைந்து விட்டன. தலைவனும் குறித்த நேரத்தில், குறித்த இடத்தில் வந்து நின்று விட்டான். ஆனால் தலைவி, 'இன்று ஒருநாள் போகட்டும்' என்கிறாள். இச்செய்தி,

**“நீயுடம் படுதலின் யான்தர வந்து**

**குறிநின் றனனே குன்ற நாடன்**

**இன்றை அளவை சென்றைக் கென்றி”** (குறுந். பா.எ. 383)

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் விவரிக்கின்றன. பெற்றோர், ஆயம், தோழி ஆகிய அன்புடைச் சுற்றம் ஒருபக்கம், நெஞ்சுறை தலைவன் ஒருபக்கம். இருவரில் ஒருவரைத் தேர்ந்தாக வேண்டிய உள்ளப்போராட்டம் உடன்போக்கின்போது விளைகின்றது. குறித்த இடத்திற்கு வந்து நிற்கும் தலைவனைத் திருப்பி அனுப்பினால் சுற்றத்தைப் பிரிய வேண்டியதில்லை. சுற்றத்தைப் பிரிந்தால்தான் தலைவனொடு வரைவிற்கு வழிபிறக்கும். தலைவி முடிவெடுக்க இயலாமையால் உடன்போக்கைத் தள்ளிப் போடுவதைத் தற்காலிகமான தீர்வாகக் கருதுகிறாள்.

“முடிவெடுக்க இயலாமையால் ஒரு செயலைத் தள்ளிப் போடுவதோ, தவிர்ப்பதோ உண்டு” (Norman L. Munn, Introduction t;o Psychology, P. 209) என்பது உளவியலறிஞர்களின் கருத்தாகும். உடன்போக்கின்போது தலைவி தெளிவான ஒரு முடிவெடுக்க முடியாமல் துயருற்று அழுகின்றாள் என்பதனை,

**“அளியரோ அளியரென் ஆயத் தோரென**

**நும்மொடு வரவுதான் அயரவும்**

**தன்வரைத் தன்றியும் கலுழ்ந்தன கண்ணே”** (நற். பா.எ. 12)

என்ற வரிகள் எடுத்தியம்புகின்றன. பெற்றோர் அறிந்தால் மனம் நோவார்களே என்ற கவலை ஒருபுறம். உடன்போக்கிற்கு உள்ள இடையூறுகளைக்

கடந்து வெல்ல வேண்டுமே என்ற கவலை மற்றொரு புறம். இவற்றிற்கு இடையில் தலைவியின் மனப்போராட்டம் பெருகி விட்டது.

"தலைவன் பொருள் காரணமாகப் பிரிய வேண்டிய நேரங்களில் உள்ளப் போராட்டம் நிகழ்தல் இயல்பேயாகும்" (சிவராஜ். து., சங்க இலக்கியத்தில் உளவியல், ப. 18)

தலைவியுடன் சேர்ந்திருந்தால் பொருள் சேராது. பொருள் வேண்டிப் பிரிந்தால் தலைவியுடன் இனிதிருக்க இயலாது. இப்போராட்டத்தின் உள்ளடக்கம் சிறைக்குடி ஆந்தையாரின் சொற்களில் விளங்குகின்றன.

**"புணரின் புணராது பொருளே பொருள்வயிற்**
**பிரியின் புணராது புணர்வே"** (நற். பா.எ. 16)

இச்சங்க இலக்கியத் தொடரில் அணுகுதல் - அணுகுதல் போராட்டத்தின் கரு மிகத் தெளிவாக விளங்கி நிற்கிறது. தமிழ் அகவியல் அறிஞர், "குடும்பமாவது இளமையும் வளமையும் மோதிக்கொள்ளும் போர்க்களம் என்று சங்கச் சான்றோர் கண்டனர்" என்றும், பொருள்வயிற் பிரிவுத்துறை, "இன்பமும் கடமையும் போராடும் இடமாக நல்ல உணர்ச்சிகள் மோதிக்கொள்ளும் இடமாக அமைந்துள்ளது" என்றும் (மாணிக்கம், வ.சுப. - தமிழ்க்காதல், ப. 96, 93) கூறியுள்ளதிலிருந்து பொருள்வயிற் பிரிவு இன்றியமையாதது, அக்காலத்துத் தலைவன், தலைவிக்கு ஏற்படும் உணர்வுகளும் தவிர்க்க இயலாதது என்பதும் தெளிவாகிறது.

அணுகுதல் - அணுகுதல் போராட்டத்திற்கு ஆட்படும் மனிதன் இணைவலிமையானதும், நேர்நிலையானதுமான இருவகை மாற்று

ஆற்றல்களால் துன்பப்படுகிறான். இம்மாற்று ஆற்றல்கள் இணைவலிமை உடன் இல்லாவிட்டால் போராட்டம் நிகழாது என்று உளவியலார் கூறுவர். (Norman L. Munn, Introduction t;o Psychology, P. 209)

அன்புடைத் தலைவியுடன் இருக்கும் அகவாழ்வு இன்பமுடையது. பொருள், புறவாழ்வின் அடிப்படைத் தேவையாக உள்ளது. உயிரியல் சார்ந்தே வேட்கை ஒருபுறமும் சமுதாயவியில் சார்ந்த தேவை ஒருபுறமும் தலைவன் நெஞ்சை அலைக்கழிக்கின்றன. இருவகை ஆற்றலும் இணைவலிமையன. அடிப்படைத்தேவை இயல்பின. ஆகவேதான் போராட்டம் அழுத்தம் மிக்கதாக உள்ளது.

பெருமளவில் சில எளிய அணுகுதல் - அணுகுதல் போராட்ட வகைகள் நேரம், இடம், ஆற்றல், சொந்தத் திறமைகள் ஆகியவை ஒரு வரையறையான எல்லைக்குட்பட்டவையாக உள்ளமையால் தோன்றுவன என்பர். உடன்போக்கிற்கு உடன்படும் தலைவி ஒரே நேரத்தில் தலைவனொடும் பெற்றோரொடும் இருக்க இயலாது. இடைச்சுரத்துத் தலைவன் ஒரே நேரத்தில் வீட்டிலும் வினை மேற்கொள்ளும் இடத்திலும் இருக்க இயலாது. ஆகையால், உள்ளப் போராட்டத்திற்குச் சில எல்லைக்குட்பட்ட வரையறைகளே காரணமாகின்றன.

தலைவனையும், பெற்றோரையும் தேர்வு செய்யும் போராட்டத்தில் தலைவிக்குத் தோழி ஆற்றுப்படுத்துபவளாகவும், பிரிவும் தலைவியும் தேர்வு செய்யுமிடத்தில் தலைவனின் நெஞ்சும், சமுதாயச் சூழலும் தலைவனுக்கு ஆற்றுப்படுத்துவனவாகவும் அமைந்து அணுகுதல்

போராட்டத்தில் உழன்றவர்களைக் காக்கின்றனர். ஒன்றை இழக்கும்போது மனமுறிவு ஏற்படும்போதும் மற்றொன்றைப் பெறுவதன் மூலம் மகிழ்வான வாழ்வு வாழமுடியும் என்பதை எண்ணி வாழ்ந்தமை இச்சான்றுகளில் வெளிப்படுகிறது.

## அணுகுதல் விலகுதல் போராட்டம் :

ஓர் இலக்கினை அணுகவும் விலகவும் தூண்டும் வலிவான போக்குகள் ஒரே நேரத்தில் நிலவுவதே அணுகுதல் - விலகுதல் போராட்டம் எனப்படும். ஓர் இலக்கினை அடைவதில் நேர்நிலையான தூண்டல் ஒன்றும் எதிர்மறையான தூண்டல் ஒன்றும் செயல்படுகின்றன. அப்போது அந்த இலக்கினை அணுகுவதா, விலகுவதா என்னும் போராட்டம் தோன்றுகிறது.

## மணமும் மரணமும் :

புறநானூற்றில் மறக்குடித் தலைவனது மகளை மன்னன் ஒருவன் மணம்புரியக் கேட்டான். தந்தை மகட்கொடை மறுத்தான். இம்மாறுபாட்டால் போர் தொடங்கியது. மன்னன் மரணமா, மணமா என்னும் வேகம் கொண்டு போர் தொடங்கினான்.

**“சுணங்கணி வனமுலை அவளொடு நாளை**
**மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ**
**ஆரமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்**
**நீளிலை எஃகம் மறுத்த உடம்பொடு**
**வாரா உலகம் புகுதல் ஒன்று”** (புறம். பா.எ. 341)

என்ற பரணர் பாடலில் இருநிலைகளும் விளக்கப்படுகின்றன. போரில் வென்றால், மறக்குடி மகளிரொடு மணம், தோற்றால் மறப்பெருமை வெளிப்பட மரணம் என அணுகுதல் வேட்கையும் விலகுதல் வாய்ப்பும் உடைய ஒரு போராட்டத்தின் நிலை இப்பாடலில் இடம் பெறுகிறது.

**இனிமை, இன்னாமை :**

இரவுக்குறி நேரங்களில் தலைவியின் உள்ளம் இத்தகைய போராட்டம் உறுகின்றது. இரவு நேரத்தில் காட்டு வழியில் இடியும் மின்னலும் மழையும் சூழ்ந்த வேளையில் தலைவன் தலைவியைக் காண வருதலால் அவனது அன்பின் ஆழம் புலப்படுகிறது. அதனால் மகிழ்கிறாள். ஆனால் அவன் வரும் வழிக் கடுமையும், வழியிடை நேரலாகும் இன்னல்களும் தலைவியை அச்சுறுத்தலால் துன்புறுகிறாள். தலைவனின் வருகை இனிமையும் இன்னாமையும் விளைவிக்கின்றது.

**“காதலை என்பதோ இனிதுமற் றின்னாதே**
**அன்பினை என்பதோ இனிதுமற் றின்னாதே**
**அருளினை என்பதோ இனிதுமற் றின்னாதே”** (கலி. பா.எ. 49)

எனத் தோழி ஒருத்தி மீளமீள மறுகிப் பேசும் பேச்சில் இப்போராட்டத்தின் நிலை உள்ளது.

தலைவியின் உள்ளம் காதல் கருதும்போது தலைவன் வருதலை விரும்பி அவனோடாகி அவன் வரும் ஆறு நினைந்துற்ற அச்சம் பெருகும்போது தன்னோடாகி ஊசலாடுகிறது. இரவுக்குறித் துறையில் தலைவி இன்பம் கருதித் தலைவனை வரச்சொல்வதா அன்றி வழியருமை

கருதி வருதலை மறுப்பதா என்னும் போராட்டத்திற்கு ஆளாகிறாள். இடர்ப்பாட்டில் வருதலால் தெரியலாகும் தலைவனின் அன்பை நினைந்தால் மகிழ்ச்சி பெருகுகிறது. வழியஞ்சி மறுப்பதால் அவனுக்கு நேரும் வெறுப்பை நினைந்தால் துன்பம் பிறக்கிறது. எத்தகைய முடிவெடுத்தாலும் கலப்பான உணர்வுகள் மோதி முரணுதலை அணுகுதல் விலகுதல் போராட்டத்தில் காணமுடிகிறது.

'நேர்நிலையும் எதிர்மறையும் விரவிய கூறுகளை ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளமையால் இப்போராட்டத்தைக் கலப்புற்ற நன்மை என உளவியலார் கூறுகின்றார்.' (James C. Coloman, Psychology and effective behaviour, P. 179).

தலைவன் பொருள்வயிற் பிரிதலில் இன்பமா, பொருளா எனும் போராட்டம் அணுகுதல் - அணுகுதல் போராட்டம் ஆகும். இதே சூழலில் சில பாடல்கள் அணுகுதல் - விலகுதல் போராட்டம் சார்ந்தனவாகவும் உள்ளன.

**"இன்னா மன்ற சுரமே**
**இனிய மன்றயான் ஒழிந்தோள் பண்பே"** (ஐங். பா.எ. 326)

**"இன்னா வெஞ்சுரம் நந்நசை துரப்பத்**
**துன்னலும் தருமோ துணிவில் நெஞ்சே"** (அகம். பா.எ. 327)

என்பன தலைவனின் கூற்றுகள் ஆகும். இவ்விரு பாடல்களிலும் பொருள்நசை அணுகுதல் ஆற்றல் தருகிறது. இன்னா வெஞ்சுரம் விலகுதல் போக்கைத் தருகிறது. ஆகவே, போராடும் உள்ளம் துணிவில் நெஞ்சம் ஆகிறது.

மூவகைப் போராட்டங்களில் அணுகுதல் - விலகுதல் போராட்டமே பெருவழக்கின என்றும் கடுமையானது என்றும் உளவியலர் கருதுகின்றனர். சமுதாய நிலையும் வாழ்வின் இயல்பும் இன்பமும் துன்பமும் கலந்து உள்ளமையால் இப்போராட்டம் பெருவழக்கினதாக உள்ளது. விரும்பத்தகாத ஒன்றையேனும் விரும்பத்தக்க ஒன்றையேனும் தேர்ந்து தெளிந்தாக வேண்டி உள்ளமையால் கடுமையாகவுள்ளது.

**விலகுதல் – விலகுதல் போராட்டம் :**

இரண்டு விரும்பத்தகாத இலக்குகளில் ஏதாவதொன்றை அடைந்தேயாக வேண்டிய நிலையை விலகுதல் - விலகுதல் போராட்டம் என்பர். (சண்முகம், டி.ஈ., உளப்போராட்டம், கலைக்களஞ்சியம், தொகுதி - 10, ப. 135)

போர்க்களத்தில் வீரன் இறந்து விட்டான். பிணத்தைக் காண வந்த மனைவி ஐயோ எனக் கதறி அழுதால், அருகில் உள்ள காடுறையும் பிணத்தைத் தின்று விடும். துணையற்ற நேரமும் இடமும் ஆதலால், தன்னந்தனியே மனைவியால் தோளகன்ற வீரனின் பிணத்தை எடுத்துச் செல்லவும் இயலவில்லை. எனவே, அழவும் கூடாது, அழாமல் இருத்தலும் இயலாது, பிணத்தை விடுக்கவும் இயலாது, எடுக்கவும் ஆகாது என்னும் நிலை நேர்ந்து விடுகிறது. இதனை,

**"ஐயோ எனின்யான் புலியஞ் சுவலே**
**அணைத்தனன் கொளினே அகன்மார் பெடுக்கவல்லேன்**
**என்போற் பெருவிதிர்ப்பு உறுக நின்னை**
**இன்னாது உற்ற அறனில் கூற்றே**
**நிரைவளை முன்கை பற்றி**
**வரைநிழற் சேர்க நடத்திசிற் சிறிதே"** (புறம். பா.எ. 255)

என்பதிலிருந்து அறிய முடிகிறது. கணவன் உடலை நடத்துவது போல் இழுத்துச்சென்று தீர்வு காண்கிறாள்.

### தலைவியின் அச்சம் :

தலைவன் கையுறையாகத் தலைவிக்கு உடுக்கும் தழை தந்தான். உடுத்தினால் அன்னையின் ஐயமுற்ற கேள்விகளுக்கு விடை சொல்ல வேண்டிய அச்சம் ஒருபுறம். உடுத்தாமல் திருப்பிக் கொடுத்தால் தலைவனின் கேண்மைக்குக் குறையாகுமே என்னும் அச்சம் மறுபுறம் என இருபாற் பட்டது. இத்தலைவியின் போராட்டம் விலகுதல் - விலகுதல் போராட்ட வகையைச் சார்ந்ததாகும்.

**"உடுப்பின் யாயஞ் சுதுமே**

**கொடுப்பின் கேளுடை கேடஞ் சுதுமே"** (நற். பா.எ. 359)

என்றெண்ணும் நிலையில் தழையாடையும் வாடுகிறது. அதனால் தலைவியின் உள்ளமும் வாடி வருந்திப் போராடுகிறது.

### தோழி மதிப்பளித்தல் :

தலைவி இற்செறிக்கப்பட்டாள். அவளைச் சந்திக்கத் தலைவன் முதலைகள் வழிவழக்கு விலக்கும் கானல்வழி வருகிறான். அதனாலும் தலைவி வருந்துகிறாள். இருவர் வருத்தத்தையும் சேர்த்துக் கருதும் தோழி, இரட்டைப் பிள்ளைகள் ஒரே நேரத்தில் நஞ்சுண்ண, வருந்தும் தாய்போல் வருந்துவதாகத் தலைவனிடம் கூறுகிறாள்.

**"கவைமக நஞ்சுண் டாஅங்கு**

**அஞ்சுவல் பெருமஎன் நெஞ்சத் தானே"** (குறுந். பா.எ. 32)

என்ற அடிகள் இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்ண வருந்தும் தாய் என்னும் உவமை விலகுதல் - விலகுதல் போராட்டத்திற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகின்றது. இரு குழந்தைகளில் எந்தக் குழந்தையின் மரணமும் தாய்க்குப் பெருந்துன்பம் ஆகிறது. அதுபோலவே, தலைவன் - தலைவி இருவர் உணர்விற்கும் தோழி மதிப்பளிக்க வேண்டியுள்ளது.

பொருள்வயிற் பிரியும் தலைவனைத் தலைவி வழியனுப்ப இயலவில்லை. பொருளின்மையால் வரலாகும் இழிவும் வறுமையும் கருதும்போது செலவைத் தடுத்தற்கும் இயலவில்லை. இவ்விரு நிலை அச்சத்தைத் தோழி குறிக்கிறாள்.

**“செல்மின் என்றல் யான்அஞ் சுவலே**
**செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர்**
**நிறுத்தெறி புன்சொலின் திறத்தஞ் சுவலே”** (நற். பா.எ. 229)

பிரிவை விரும்பாமையின் தலைவன் புறப்படுவதைப் பற்றி வினவவும் தடுக்கவும் இயலாத தலைவியை இளங்கீரனாரின் பாட்டில் காண முடிகிறது.

**“வேண்டா மையின் மென்மெல வந்து**
**வினவலுந் தகைத்தலுஞ் செல்லா ளாகி**
**பொறியழி பாவையிற் கலங்கி”** (நற். பா.எ. 308)

என்ற பாடலடிகள் உள்ளப் போராட்டம் எவ்வகைத்தாயினும் உள்ளம் கலங்கி அழிகிறது.

பிரிவுத் துன்பத்தில் வருந்தும் தலைவி நினைந்தால் நெஞ்சு சுடுகின்றது. நினையாமலிருப்பதும் இயலவில்லை எனக் கூறுகின்றாள்.

**“உள்ளின் உள்ளம் வேமே உள்ளாது**

**இருப்பினெம் அளவைத் தன்றே”** (குறுந். பா.எ. 102)

என்ற ஔவையாரின் வரிகள் உள்ளப் போராட்டத்தால் கனலும் நெஞ்சு அழுத்தம் மிக்கதாக வெளிப்படுகிறது.

இவ்வாறு விலகுதல் - விலகுதல் போராட்டத்தால் கனலும் நெஞ்சு அழுத்தம் மிக்கதாக வெளிப்படுகிறது.

இவ்வாறு விலகுதல் - விலகுதல் போராட்டத்தில் செயற்படும் ஊக்கிகள் இரண்டும் எதிர்மறையாகச் செயல்படுவதை மேற்காண் சான்றுகளிலிருந்து அறிய முடிகிறது.

அணுகுதல் - அணுகுதல் போராட்டமும், அணுகுதல் - விலகுதல் போராட்டமும் ஓரளவிற்கு நன்மை விளைவிக்கக்கூடியவை. விலகுதல் - விலகுதல் போராட்டம் எதிர்மறையான பலனைத் தருகின்றது. எவ்வாறிருப்பினும் மூவகைப் போராட்டங்களும் மனிதனுக்கு உள்ளப் போராட்டத்தை ஏற்படுத்த வல்லவை. எனவே, சங்க மாந்தர்கள் இத்தகைய உள்ளப் போராட்டங்களிலிருந்து காத்தலில் தோழி மிக முக்கியப் பங்காக இருந்தமை பல்வேறு சான்றுகளின்வழி பெறப்படுகிறது.

## உள்ள இறுக்கம் : (Stress)

உள்ள முறிவு எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்பு நிலை (Tension) தோன்றும். அந்நிலையை உள்ள இறுக்கம் என்பர் உளவியலர். உள்ள முறிவுற்ற நிலையிலும் போராட்டம் மிக்க நிலையிலும் சில எதிர்மறையான

உள்ளக்கிளர்ச்சிகள் (Emotion) தோன்றுகின்றன. அவற்றுள் மூன்றினைச் சிறப்பாக உளவியலர் குறிக்கின்றனர். அவை 1. சினம் (Anger). 2 அச்சம் (Fear), 3. கவலை (Anxiety). (James C. Coleman, Psychology and effective behaviour, P. 201) என்பனவாகும். இதனை மாங்குடி மருதனார் எனும் புலவர் தம் பாடலில்,

**“அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்**

**செற்றமும் உவகையும் செய்யாது காத்து”**

(மாங்குடி மருதனார், மதுரை. பா.அ. 489 - 490)

என்றவாறு குறிப்பிட்டுள்ளார்.

உள்ளத்தின் முறிவாலும் போராட்டத்தாலும் மனம் கலக்கம் அடைகின்றது. இக்கலக்கத்தின் விளைவே கவலை ஆகும்.

“மனமுறிவுள்ள ஒரு மனிதனும் சரி அல்லது மனப்போராட்டத்தில் உள்ள ஒரு மனிதனும் சரி, ஒரு கலக்கமடைந்த இறுக்கமான நிலைமையிலிருக்கிறான். அவனுடைய மூல ஊக்கியின் தூண்டல் நிலை சிறிதும் குறையாமலிருக்கின்றது. மேலம், அவனுடைய மன இறுக்கம் போராட்டத்திலிருந்து எழுந்த மனவெழுச்சித் துலங்கலினால் வலிமையூட்டப்பட்டிருக்கின்றது” (இராசமாணிக்கம், மு., உளவியல் துறைகள். தொகுதி - 2, ப. 326)

இந்நிலையே கவலை அல்லது தவிப்பு என்பது உளவியலரின் கருத்தாகும். கவலையைப் பற்றிய இவ்வுளவியல் விளக்கம் சங்க இலக்கியத்தில் உள்ள இடர்ப்பாடு மிக்க வாழ்க்கைச் சூழல்கள்

அனைத்திலும் இணைத்துக் காணத்தக்கதாகும். ‘சங்க இலக்கியத்தில் நோதல் எனும் சொல் உள்ளத்தின் முறிவு, போராட்டம், விறைப்பு நிலை, அழுத்தம், இறுக்கம் ஆகியவற்றை உணர்த்தும் பொதுச்சொல்லாகவே பெரும்பாலான இடங்களில் பயின்று வருகிறது.’ (சிவராஜ். து., சங்க இலக்கியத்தில் உளவியல். ப. 34).

## தலைவனின் மனக்குறை :

தலைவன் ஒருவன், தலைவியின் அழகைக்கண்டு காதல் வயப்படுகிறான். காதலே உலக வாழ்வாக ஆழ்ந்து போவதால், அவள் அன்பைப் பெறுதலே அவனது நோக்கமாகி விடுகிறது. காதலுக்கு உரியவனைத் தன் வாழ்விலும் சிறந்தவளாகக் கருதிப் பற்று வயப்படுகிறான். அவனது பிற வலிமையெல்லாம் குன்ற அவளது அன்பு வேண்டிக் கெஞ்சிப் பின் நிற்கின்றான்.

உடனடியாகத் தலைவியின் ஏற்புடைமை இல்லாதபோது தலைவனின் வேட்கை நோயாகின்றது. தலைவியின் கண்கள்,

**“எல்லோரும் அறிய நோய் செய்தனவே”** (குறுந். பா.எ. 72)

எனப் புலம்பத் தொடங்குகின்றான். இந்நிலையில் தலைவனின் உள்ளமும் உள்ள நிலையும்,

**“காமங் கைமிகின் தாங்குதல் எளிதோ”** (நற். பா.எ. 39).

**“உடையுமென் உள்ளம்”** (நற். பா.எ. 75).

**“பைதல் நெஞ்சம்”** (மேலது. பா.எ. 75).

**"அருந்துயர் அவலம்"** (நற். பா.எ. 140).

**"பெரிய எவ்வம்"** (அகம். பா.எ. 230).

**"ஆனா நோயொடு அழிபடர் கலங்கிக்**
**காமங் கைமிகக் கையறு துயரம்"** (நற். பா.எ. 185).

**"நோன்று கொளற் கரிதே"** (குறுந். பா.எ. 58).

எனப் பலவாறாகக் குறிப்பிடப்படுகின்றன. இத்தொடர்களில் சுமையாகி உள்ளத்தை அழுத்தும் வேட்கையின் வேகமும் செயலற்ற சோகத்தின் ஆழமும் நன்கு வெளிப்படுகின்றன. இந்நிலையில் தோழி தலைவனின் உளநோய் அறிந்து அவனை ஆற்றுப்படுத்துகின்றாள்.

## அலரச்சம் :

தலைவன் தலைவியின் களவு வாழ்வு மற்றையோருக்குப் புலப்படும்போது அலரச்சம் ஏற்படுகின்றது. களவு வாழ்வு களவாகவே நீடித்தற்கில்லை. கற்பாகிக் கனிதலே இயல்பு. எனினும் தொடக்கத்தில் தன் களவு வாழ்க்கையைத் தலைவி நாணத்தாலும் அச்சத்தாலும் மறைத்து வைக்கவே விரும்புகிறாள்.

**"யானஃ தஞ்சினென் கரப்பவும் தானஃது**
**அறிந்தனள் கொல்லோ அருளினள் கொல்லோ**
**எவன்கொல் தோழி அன்னை கண்ணியது"** (நற். பா.எ. 53)

என்று தலைவி தோழியிடம் பேசுகிறாள். தலைவி ஊரலர் வழி அன்னை செய்தி அறிந்தமையைக் கூறுகின்றாள். இதனை,

**"அலரெழுந் தன்றிவ் வூரே பலருளும்**

**என்னோக் கினளே அன்னை"** (நற். பா.எ. 191)

என்ற நற்றிணை வரிகள் குறிப்பிடுகின்றன. தோழி அலர்ப்பேச்சை "புரையில் தீமொழி" என்றும், "ஆனாக் கௌவை" (நற். பா.எ. 36) என்றும் கூறுகின்றாள். நாணம், அச்சம், சினம், கவலை ஆகிய உணர்வுகளின் அழுத்தத்தை ஊரலர் பற்றிய பாடல்களில் காண முடிகிறது.

தலைவன் மணந்து கொள்ளாமல் காலக்கழிவு செய்வதைக் கலித்தொகைத் தலைவியொருத்தி தோழி, சேரி, ஆயம் ஆகியோரிடத்து மறைக்கிறாள். தலைவனின் பண்பின்மையை மறைக்கிறாள்.

**"பண்பின்மை பிறர் கூறல் தானநாணி"** (கலி. பா.எ. 44)

தலைவனது நிலையைக் காக்க வேண்டிய பொறுப்பும் தலைவிக்கு உள்ளது. கவலை என்பதை அச்சம், பெருந்துயரம் (Distress), நாணம், குற்ற உணர்வு, ஆர்வக்கிளர்ச்சி ஆகிய பல்வேறு அடிப்படை உணர்வுகளின் இணைப்பு அல்லது தொகுப்பமைவு என உளவியலர் வரையறை செய்வர். இது ஊரலர் பற்றியஞ்சும் தலைவியின் உள்ள நிலைக்குப் பொருந்துகிறது.

மேலும் இரவுக்குறி வரும் தலைமகனை நினைந்து தலைவி உள்ள இறுக்கமடைவதுண்டு. இதுபோன்ற பல சூழல்களிலும் சங்க மாந்தர்கள் உள்ள இறுக்கமடைந்த செய்திகள் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. பல நாட்களாக மனத்தில் இருக்கும் துன்பங்கள் அழுத்தம் பெற்று உள்ள இறுக்கமாக மாற்றம் பெறுகின்றன.

இதனைச் சங்க மாந்தர்கள் ‘நோதல்’ என்ற சொல்லால் குறிப்பிட, உளவியலர் ‘உள்ள இறுக்கம்’ என்று குறிப்பிட்டுள்ளனர். இந்த உள்ள இறுக்கமான சூழலிலும் தோழியே உளநோய் நீக்கித் தற்காப்பவளாக அமைந்திருக்கிறாள் என்பதும் பெறப்படுகிறது. மேலும் உள்ள இறுக்கமான சூழலில் உள்ளம் தன்னிலைமையையும், நலனையும் பாதுகாப்பதற்காகத் தற்காப்பு இயங்கு முறைகளை மேற்கொள்கின்றது.

**தற்காப்பு நடத்தைகள் : (Defence Mechanisms)**

நனவிலி நிலையில் ஏற்படும் செயல்களின் விளைவே தற்காப்பு நடவடிக்கைகள். இவை ஓரளவிற்கு அவரவரை ஏமாற்றிக்கொள்ளும் முயற்சிகள் ஆகும். இவை மனப்போராட்டங்களால் எழக்கூடிய மனஇறுக்கம், மனமுறிவு இவற்றைத் தவிர்க்க உதவும் உத்திகளாகக் கையாளப்படுகின்றன.

“மனதில் எழும் சிக்கல்களாலும், போராட்டங்களாலும் அறுபது வகையான தற்காப்பு நடத்தைகளை மேற்கொள்கின்றனர் என்று உளவியலாளர்கள் சுட்டியுள்ளனர்” (கலைச்செல்வி. வெ., வழிகாட்டலும் அறிவுரை காட்டலும். ப. 184). சிக்கலான நேரங்களில் தன்னைத்தானே தற்காத்துக் கொள்ளுதல் தற்காப்பு நடத்தையாகும்.

‘வாழ்க்கையில் ஏற்படும் தோல்விகள், ஏமாற்றம், போராட்டம் ஆகியவை ஒருவருக்குத் தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளத் தடையாக இருக்கின்றன. மேலும் ஒருவர் தம்மைப்பற்றித் தாமே தாழ்வாக எண்ணுவதற்கும் இவை காரணமாகின்றன’ (முனிர் அகமத் பரூக்கி,

தற்காப்பு இயங்கு முறைகள், கலைக்களஞ்சியம், தொகுதி - 10, ப. 306) என்றும் இச்சமயங்களில் தற்காப்பு இயங்குமுறை செயல்படத் தொடங்கி மனிதன் அகத்தைப் பாதுகாக்கிறது என்றும் உளவியலர் தற்காப்பு இயங்குமுறை உருவாகும் சூழலை விளக்குகின்றனர்.

தலைவனின் பொருள்வயிற் பிரிவு தவிர்க்க இயலாதது என்பதை உணர்தலும் அவன் திரும்பி வரும்வரை அமைதியுடன் காத்திருத்தலும் தலைவிக்கு உற்ற உளநலம் தரும். உளநலம் உடைய தலைவி அதனைத்தான் செய்வாள். இதற்கு,

**“உற்றது இதுவென எய்த உரைக்கும்**
**உரனகத்து உண்டாயின்”** (கலி. பா.எ. 142)

என்னும் கலித்தொகைத் தொடர் பொருந்தத் தக்கதாகும். வாழ்வில் நேரும் இடுக்கண்களை உற்றது இதுவென உணரும் திறனும், அதனை எதிர்கொண்டு ஏற்றுப் பொறுக்கும் ஆற்றலும் உளநலத்தைப் பாதுகாக்கும் அடிப்படைத் தேவைகளாகும். கருதியதை விழைதலும், எண்ணியதைப் பெற இயலாதபோது வருந்துதலும், அஞ்சுதலும், கவலையுறுதலும் உள்ளத்தின் இயல்பாகும். இத்தகைய நேரங்களில் மனிதனுக்கு அவன் உள்ளமே பகையாகிறது.

துன்புறும் உள்ளம் துன்புற்றே நிற்றல் இல்லை. உள்ளத்தின் நோயைப் போக்க உள்ளமே முயல்கின்றது. சங்கப்புலவர்,

**“இன்னா தம்மவிவ் வுலகம் இனிய**
**காண்கிதன் இயல்பு உணர்ந் தோரே”** (புறம். பா.எ. 194)

என அறிவுறுத்துகிறார். உள்ளத்திற்கு ‘உள்ளம் போல உற்றுழி’ (தொல். பொருள். கற்பு. நூ.எ. 53) உதவுவது உள்ளமே ஆகும். நெஞ்செனும் உடன்வாழ் பகையை நீக்கவும் எதிர்கொள்ளவும் நெஞ்சென்னும் நட்பே துணையாகிறது. உள்ளத்தின் வீழ்ச்சியை உள்ளத்தின் போக்கே தடுத்துப் பாதுகாக்கும் உளவியல் நிகழ்ச்சியே உளநலத் தற்காப்பு இயங்குமுறையாகும்.

“ஒரு செலுத்துதல் செயற்பாட்டை அல்லது அதனோடியைந்த உணர்வின் பாதிப்பை அகம் ஆபத்தென உணர்ந்தறியும்போது அகம் மேற்கொள்ளும் செயல்பாடுகளே தற்காப்பு இயங்குமுறைகளாகும். இவை அறநிலையோடு சேர்ந்தியங்காமல் தன்னியக்கமாகச் செயல்படுகின்றன. (Anne Freud. Defence Mechanisms. Encyclopaedia Britannica, Vol. 7, P. 171) என்பது பிரித்தானியக் கலைக்களஞ்சியத்தால் அறியலாகும் வரையறையாகும்.

எல்லா மனிதர்களும் நாளும் தற்காப்பு இயங்குமுறைகளைப் பயன்படுத்துகின்றனர். இவ்வியங்கு முறைகள் சில நிமிடங்கள், சில மணிகள், சில நாட்கள் எனச் சிறிது காலமே நிலைக்கக்கூடியதாகவும், தன்வரையறைக்குட்பட்டும், தானே அறியத்தக்கதாகவும், திருத்திக்கொள்ளக்கூடியதாகவும் உள்ளன.

**“மையல் நெஞ்சிற் கெவ்வந் தீர”** (ஐங். பா.எ. 59)

**“கவலை நெஞ்சத் தவலம் தீர”** (புறம். பா.எ. 174)

**“எவ்வ நெஞ்சிற் கேம மாக”** (ஐங். பா.எ. 393)

மேற்காண் சான்றுகளிலிருந்து ஒரு தற்காலிக மருந்தாகவே இச்செயல்முறைகள் பயன்படுகின்றன.

தற்காப்பு இயங்குமுறை வெற்றியுடன் செயல்பட்டால் கவலை தணிகிறது அல்லது முழுக்கவே தவிர்க்கப்படுகிறது. உள்ளம் தானுற்ற விழுமத்தைத் தனது எண்ணப்போக்குகளைக் கொண்டே ஓரளவேனும் சரிசெய்து கொள்கின்றது. தோல்வியை மென்மைப்படுத்திக் கொள்ளவும், நன்கு உணரப்பட்ட இசைவின்மையைக் குறைக்கவும் கவலையை ஆற்றுவிக்கவும் உள்ளக்கிளர்ச்சி சார்ந்த துன்பங்களைச் சரி செய்யவும், போதும் என்ற உணர்வையும் தகுதியையும் போற்றிக் காக்கவும் இவ்வியங்கு முறைகள் இன்றியமையாதனவாகும்.

இவ்வுளவியல் நிகழ்ச்சிகளைத் "தன்னைக் காப்பதும், தப்ப விடுவதும், துயர் துடைப்பதுமான உளநுட்பச் செயல்கள்" என உளவயிலார் குறிக்கின்றார்.

**"இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த**
**தோய்மடல் சின்னீர் போல**
**நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாஞ் சிறிதே"** (நற். பா.எ. 133)

என்னும் வகையில் இவ்வியங்கு முறைகள் செயல்படுகின்றன. "ஏமமாஞ் சிறிதே" என்னும் தொடரில் தற்காப்பு இயங்கு முறையின் பயனும், பயனின் அளவும் குறிப்பாகவும் சிறப்பாகவும் நிற்கின்றன. "நோய்மலி நெஞ்சம்" தற்காப்பு இயங்குமுறை செயல்படும் களமாகும். "ஏமமாம்" என்பது அதன் பயனாகும். "சிறிதே" என்பது அதன் அளவாகும்.

“சமநிலை செய்யும் இவ்வமைப்புகள் சுமாரான அளவில் விரும்பத்தக்கனவே. இயல்பான மனிதர்கள் இவற்றினை அடிக்கடி பயன்படுத்துகிறார்கள். இவை தோல்வியின் கூரை மழுக்கி, உளச் சமநிலையைப் பாதுகாத்து, வேதனை தரும் அனுபவங்களுக்கு ஏற்ப ஓரளவு பொருத்தப்பாட்டையும் தருகின்றன. (ஜேம்ஸ் டி. பேஜ், பிறழ்நிலை உளவியல், ப. 53) எனத் தற்காப்பு இயங்குமுறைகளின் பயன் விளக்கப்படுகின்றது.

இவ்வியங்கு முறைகள் ஒருவரிடம் நீடித்துத் தொடருமானால், உளப்பிறழ்வு நிலையின் (Abnormal) எல்லைக்குக் கொண்டு சென்று விடும். ஏனென்றால் இவை அடிப்படையில் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகவும், உண்மையை அறிதலினின்று விலகிச் செல்வதாகவும் உள்ளன. மேலும், “இவை கவலைக்கு மாற்று நடவடிக்கைகளேயன்றி, கவலைக்குரிய அடிப்படைச் சிக்கல்களை அறவே ஒழிக்கும் செயல் முறைகள் அல்ல” (முனிர் அகமத் பரூக்கி, தற்காப்பு இயங்குமுறைகள் கலைக்களஞ்சியம், தொகுதி - 10, ப. 307) என்பது கலைக்களஞ்சியம் தரும் விளக்கமாகும்.

இவற்றைப் பயன்படுத்தாமல் விட்டாலும் உள்ளம் விறைப்பும் அழுத்தமும் இறுக்கமும் உற்றுச் சிதைந்து ஒருமைப்பாட்டை இழந்துவிடும். உள்ளத்தின் விறைப்பு நிலையில் உள்ளமே உருவாக்கிக் கொள்ளும் தற்காப்பு இயங்குமுறைகள் பயன்படுகின்றன. எனவேதான் சங்க மாந்தர்களும் பல நேரங்களில் உள்ளச் சமநிலை ஏற்படாத நிலையிலும் உளமுறிவு, உளப்போராட்டம், கவலைகள் ஏற்படும்போது பல நிலைகளிலும் தற்காப்பு இயங்குமுறைகளைப் பயன்படுத்தி உள்ளச்

சமநிலை அடைந்தமை தெளிவாகிறது. இத்தற்காப்பு இயங்கு முறைகள் தற்காலிக நிலையே. ஒருவகையான மனநிலை முதல் உதவி என்பதும் பெறப்படுகிறது.

## சங்கத்தோழியும் ஆற்றுப்படுத்தலும் :

சங்க இலக்கியத்தில் பலர் கூறப்பட்டாலும் தோழியே முதல்நிலை ஆற்றுப்படுத்துபவளாகக் கூறப்படுகிறாள். தலைவி, தலைவன், செவிலி, நற்றாய் முதலியோருக்குப் பலவிடங்களில் பல்விதத் தன்மைகளில் ஆற்றுப்படுத்தி, அவர்களின் மன இறுக்கத்தைப் போக்கியிருக்கிறாள்.

"எண்ணம் உள்ளத்தின் கூறு. அது உள் உணர்த்தும் பண்பில் உண்மையாகிறது. சொல் வாய்மை என்றும், உடலால் செயல்படும் நிலை மெய்மை எனவும் வழங்கப்பெறுகின்றது. அவ்வகையில் உள்ளத்தில் உண்மை ஒளியான எண்ணத்தின் வலிமை பெற்ற இலக்கிய மாந்தராகத் தோழி படைக்கப் பெற்றுள்ளாள்.

## பிரிவில் ஆற்றுப்படுத்தல் :

பிரிவுக்காலத்தில் தோழி, தலைமகனிடத்துத் தலைவியைப் பிரிதலால், பின்வரும் நிலையைக் கூறி, அவ்வாறிருப்பினும் பொருள் பிரிவின் அவசியத்தைக்கூறித் தலைவரின் விழுமநிலையை எடுத்துரைக்கின்றாள். இதனைத் தொல்காப்பியர்,

**"தலைவரும் விழுமநிலை எடுத்து உரைப்பினும்**
**போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும் நீக்கலும்**
**வாய்மையும் பொய்மையுங் கண்டோர்ச் சுட்டி"**

(தொல். பொருள். அகம். நூ. 42)

என்ற நூற்பா வழிக் குறிப்பிடுகின்றார். தோழி தலைவனின் விழும நிலையை எடுத்துரைத்து ஆற்றுப்படுத்தியதனை அறிய முடிகிறது.

**உடன்போக்கில் ஆற்றுப்படுத்தல் :**

தலைமகன் தலைவியை மணம்புரிந்து அழைத்துச் செல்ல உடன்படுகின்றான். அதனைத் தோழியிடம் தலைவன் தெரிவிக்கின்றான். தோழி தலைவனுடன் செல்வதற்கான மனநிலையை உருவாக்குவதற்காக எண்ண வரையறைச் சூழலை உருவாக்குகின்றான்.

அவ்வாறு தலைவியைத் தயார் செய்யும்போது தலைவியின் உறவால் ஊரில் அலர் தூற்றிப் பேசுகின்றனர் என்பதை,

**"சுரஞ்சேரா இயல்பின் பொய்மொழிச்**
**சேரியம் பெண்டிர் கவ்வையும் ஒழிகம்"** (அகம். பா.எ. 65)

என்று கூறுகின்றாள். தலைவியைத் தலைவனோடு மணம்புரிந்து கொள்ளும் மனநிலையை உருவாக்குதல் வேண்டும். ஆகவே, தலைவியின் தற்போதைய சூழலில் இறுக்கத்தை ஏற்படுத்தினால் அதிலிருந்து நீங்கும் மனநிலை உருவாகும். ஆகவே, சேரியில் உள்ள பெண்டிர் எல்லாம் ஈரமில்லாத வன்சொற்களால் பொய்மொழியாக உன்னைப்பற்றி அலர் தூற்றுகின்றனர் என்றவாறு கூறி, தலைவனோடு செல்ல முடிவாற்றும் நிலைக்குத் தலைவியை ஆற்றுப்படுத்துகின்றாள்.

செல்வதற்கான முடிவினைத் தலைவி எடுத்ததும் அவளது அச்சத்தினையும், நடுக்கத்தினையும் போக்கும் பொருட்டுத் தலைவி எடுத்த

முடிவால் நன்மையே பெறுவாள். உதியஞ்சேரலாதனிடத்துச் சென்றோர் மன்னனிடத்துப் பரிசில் பெற்று மகிழ்வதுபோல மனமகிழ்வு கிடைக்கும். நல்வாழ்க்கை அமையும் என்பதனை,

**"நாடுகண் அகற்றிய உதியஞ் சேரல்**
**பாடிச் சென்ற பரிசிலர் போல**
**உவவினி வாழி தோழி அவரே"** (அகம். பா.எ. 65)

என்ற அகநானூற்று வரிகளில் தோழி தலைவியை வருத்தத்திலிருந்து மீளவும், மீண்ட பிறகு வாழ்வியல் மகிழ்வில் அமையும் என்றவாறு கூறித் தலைவன், தலைவியின் உணர்வுகளை உணர்ந்து ஆற்றுப்படுத்தியமை தெளிவாகிறது.

மேலும் திருமணம் என்பதே காதல் வாழ்வின் வரையறை. அந்த வரையறைக்கு ஆற்றுப்படுத்தும் எண்ணத்தினைத் தோழி உருவாக்கி, அதனைத் தலைமகனுக்கு வழங்குகின்றாள். அதாவது, திருமணம் இன்றி வாழ்தல் நிலை என்பது, பின்பு பல துன்பங்களைக் கொண்டு வரும் என்றவாறு கற்பு வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்றாள் தோழி.

**"பாஅல் அஞ்செவிப் பணைத்தாள் மாநிரை**
**மாஅல் யானையொடு மறவர் மயங்கித்**
**தூறு அதர்ப்பட்ட ஆறுமயங்கு அருஞ்சுரம்**
.... .... .... .... ....
**பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு**
**எந்நாளோ நெடுந்தகாய் நீசெல்வது**
**அந்நாள் கொண்டு இறக்கும்இவள் அரும்பெறல் உயிரே"**

(கலி. பா.எ. 4)

மேற்காண் பாடலில் திருமணம் செய்துகொள் என்றால், தலைவன் பொருள்தேடிப் புறப்படுகின்றேன் என்கின்றான். அந்நிலையில் தோழி, பிரிந்து பொருள்தேடுவதைக் காட்டிலும், என் தலைவி சிறந்தவள் என்றும், பிரிவதால் அவள் வாழ்வாளா? என்று வினவி, உடன்போக்கு உடன்போக்காக இல்லையெனில் எந்நாளும் துன்பமே வரும் என அறிவுரை பகர்கின்றாள்.

இதனை, ரென் என்னும் உளவியலறிஞர், "வலிமையானதும் பயன் நல்கக் கூடியதுமான பரஸ்பர அக்கறையுடன் ஓர் உறவினை இரண்டு பேருக்கிடையே ஏற்படுத்தி, பிர்ச்சினை உடையவருக்கு அவருடைய பிரச்சினையில் சுயசார்புத் தீர்வையும் ஏற்படுத்தக்கூடியது" என்கிறார். (கலைச்செல்வி. வெ., வழிகாட்டலும் அறிவுரை பகர்தலும். ப. 23).

தமரை நீக்குவதால் தமக்குற்ற நோயின்கண் உடலில் இருந்து உயிர் பிரிந்து விடும். தொல்காப்பியர் இதனை, 'நீக்கலின் வந்த தன்னுறு விழுமம்' (தொல். பொருள். அகம். நூ.எ. 42) என்று குறிக்கின்றார். இதனை,

**"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி ஆங்கவன்**
**உயிர்தவச் சிறிதே காமமோ பெரிதே"** (குறுந். பா.எ. 18)

என்ற பாடலில் கபிலர் தலைவியின் தன்மையை விளக்கியுள்ளார். தலைவி நெடுவழியின் துன்பத்தைக் கண்டு அஞ்சாள். உன் பிரிவினை எண்ணியே உயிர் துறப்பாள் என்று தலைவியின் எண்ணவோட்டத்தை உணர்ந்து தலைவனிடம் ஆற்றுப்படுத்தியமை குறிப்பிடத்தக்கது.

ஜேம்ஸ் மைக்கேல் எனும் உளவல்லுநர், “இரு நபர்களுக்கிடையிலான உறவு முறை. அதில் ஒருவர் மற்றொருவருக்கு வாழ்க்கைச் சூழலில் மகிழ்ச்சியாய் வாழ உதவுகிறார்” என்று கூறியுள்ளமை இங்கு பொருத்தப்பாடுடையதாகும்.

தோழி என்பவள் பல்வேறு சூழல்களையும் எதிர்கொண்டு அச்சூழலுக்கேற்றவாறு ஆற்றுப்படுத்தும் தன்மை உடையவள். சிறந்த அறிவுரை பகர்பவராகவும் இருந்திருக்கிறாள். தோழியின் ஆற்றுப்படுத்தலுக்குச் சங்க இலக்கியத்தில் பல சான்றுகள் இருப்பினும் ஒருசில சான்றுகளே இங்குக் கூறப்பட்டுள்ளன.

**முடிவுகள் :**

- பிறர் துன்பம் காணப்பெறாமல் உதவி செய்யும் உணர்வு கொண்ட மனிதர்கள் சங்க மாந்தர்கள். பிறர் நலன் நாடலும், பிறர் துன்பம் போக்கலும் மானுட அர்த்தமுள்ள விழுமியங்கள் ஆகும்.

- சங்க மாந்தரிடத்தில் மனித வாழ்வின் இன்பமும் துன்பமும் கலந்த இயல்பு காணப்படுகிறது. உள்ள முறிவிற்குக் காரணமாக உளவியலர் கூறும் வேட்கை முறிவுகள் சங்க மாந்தர் வாழ்வியலில் இடம் பெற்றுள்ளன.

- சங்க மாந்தரின் உள்ளப் போராட்டத்தைக் குறிக்கும் தொடர்களும் சூழல்களும் உளவியல் நுட்பம் மிக்கனவாக உள்ளன.

- சங்க மாந்தர் வாழ்வியலில் உள்ள முறிவும் உள்ளப் போராட்டமும்

மிக்க வாழ்வுச் சூழல்களில் சினம், அச்சம், கவலை ஆகிய உள்ளக் கிளர்ச்சிகள் தோன்றுவதையும் உள்ளம் விறைப்புநிலை உற்று அழுத்தம் மிகுந்து இறுக்கமாவதை விளக்கப் பெற்றதும் உளநோய் அறிந்து தற்காத்தமையும் வெளிப்படுகின்றன.

- அறிவாண்மையில் தலைவியைக் காட்டிலும் தோழி கூர்திறன் உடையவராக இருந்து மாறான பல சூழல்களிலும் ஆற்றுப்படுத்தியமை இன்றைய வழிகாட்டுதலுக்கு வழிவகுத்துள்ளன.

- சங்க மாந்தர்கள் யாம் பெற்றவற்றை எல்லோரும் பெற்றுப் பயன்பெற வேண்டும் என்று வாழ்ந்து காட்டியவர்கள். வறுமையிலும் தங்கள் வாழ்வினைச் செம்மையாக நடத்தி வந்தவர்கள். அவர்களுடைய வாழ்வியல் நம்முடைய பல்வேறு செயல்கட்கு வழிகாட்டுகின்றன.

- அணுகுதல் - அணுகுதல் போராட்டம்
  அணுகுதல் - விலகுதல் போராட்டம்
  விலகுதல் - விலகுதல் போராட்டம்

  என்ற படிநிலைகளின் கூறுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன.

- இவ்வுலகம் துன்பம் உடையது. அதிலிருந்து தப்பித்தல் இயலாது. ஆயினும் அதிலும் இன்பங்கள் உண்டு எனும் உள்ளத் தற்பாதுகாப்பு நடத்தை விளக்கப் பெற்றது.

## இயல் – 7

# முடிவுரை

ஆய்வு என்பது எடுத்துக் கொண்ட பொருளை நுண்ணிய முறையில் ஆராய்ந்து முடிவுகளை எடுத்துரைப்பதாகும். ஆய்வின் சுருக்கமாக அமையும் பகுதி முடிவுரையாகும். அவ்வகையில் 'சங்க மாந்தர் வாழ்வியலில் உளவியல்' எனும் இவ்வாய்வேட்டின் ஒவ்வொரு இயல்களிலும் அமைந்த முடிவுகளைத் தொகுத்துக் கூறுவதாக இவ்வியல் அமைக்கப் பெற்றுள்ளது.

### ஆய்வின் முடிவுகள்:

ஆய்வேட்டின் முன்னுரையில் ஆய்வு நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, இயல் பகுப்பு முறை ஆகியன பற்றிய விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன.

இரண்டாம் இயலானது சங்க இலக்கியம் மானுடம் பாடும் நோக்கில் அமைந்து, பல்வேறு துறைகளைத் தன்னகத்தே கொண்டமையும் உளவியல் என்ற சொல் உள்ளம் என்ற சொல்லால் ஆளப்பட்டமையும், உள்ளம் அகம் என்ற குறியீடு பெற்றமையும் விளக்கப்பட்டுள்ளது.

உளவியல்துறை தோன்றுவதற்கு மெய்யியல் ஆதாரமாக அமைந்தது என்பதும், சங்க அக, புறப்பாடல்களில் வெளிப்படுத்தப்பட்ட சங்க மாந்தரின் வாழ்வியல் நிலைகள் நுட்பமான மனஉணர்வாக வெளிப்படுத்தப்பட்டமையும் இவ்வியலில் விவரிக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் இயலானது சங்க மாந்தர்கள் குழந்தை வளர்ப்பில் கையாண்ட செயல்பாடுகள், குழந்தை உளவியலின் முக்கியக் கூறாக அமைந்தமையும், குழந்தையின் இருப்பும் வளர்ப்பும் சமூக உறவுகள் அனைவருக்கும் உளநலத்தை ஏற்படுத்தியமையும் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன.

சங்க மாந்தர்கள் குழந்தை வளர்ப்பில் காரண காரியத்துடன் செயல்படுத்திய அறிவாண்மைச் செயல்பாடுகள் குழந்தை உளவியலின் கொள்கைகளாகவும் கோட்பாடுகளாகவும் தோற்றம் பெற்றுள்ளமை இவ்வியலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

நான்காம் இயலில் சங்க மாந்தர்களின் ஒவ்வொரு துறை சார்ந்த நுண்ணறிவும் ஆக்கத்திறனும் ஆராய்ந்து விளக்கப் பெற்றுள்ளது.

மன வயது, நுண்ணறிவு ஈவு ஆகியவற்றின் அடிப்படையில் சங்க மாந்தர்கள் அதீத நுண்ணறிவு பெற்றிருந்தமையும் மகளிர் மிகுந்த நுண்ணறிவுடன் விளங்கியமையும் இவ்வியலில் ஆராயப் பெற்றுள்ளன.

ஐந்தாம் இயலில் மெய்யியல் தத்துவங்கள் உளவியல் கோட்பாடுகளின் அடிப்படையாக அமைந்தமை, சங்க மாந்தரின் ஆளுமை உளவியலின் ஆளுமைக் கோட்பாடுகளுடன் பொருந்திக் காணப்பட்டமையும் சுட்டப்பட்டுள்ளன.

ஒருங்கிணைந்த ஆளுமை சங்ககால ஆண், பெண் இனச்சமூகத்தினர் பெற்றிருந்தமையும், அன்பு, அறிவு, அடக்கம், பொறுமை, இல்லறம்,

மேலாண்மை, விருந்தோம்பல், போர், தூது முதலான பல்வேறு அகப்புறச்சூழல்களில் நிறைவான ஆளுமை வெளிப்படுத்தப்பட்டமையும் இவ்வியலில் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆறாம் இயலானது மக்களின் உணர்வுகளைப்புரிந்து கொண்டு உற்றுழி உதவி உளநோய் தீர்த்தமையும், மனவிறைப்பு நிலை நீங்க, உடலும் உள்ளமும் வளம்பெற உரியவரிடத்து ஆற்றுப்படுத்தியமையும் விளக்கப்பெற்றுள்ளன.

உள்ள முறிவு, உளப்போராட்டம், உளஇறுக்கம் மிகுந்த சூழலில் தன்னைத் தற்காத்துக் கொண்டமையும், சிறந்த ஆளுமை, நுண்ணறிவு, உடையவளாகத் திகழ்ந்த தோழி மாறான பல சூழல்களிலும் ஆற்றுப்படுத்தியமை இவ்வியலில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

மனித உள்ளத்தின் நற்கூறுகள் அகப்பாடல்களில் மிக விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆகவே, சங்க மாந்தர்களின் புற வாழ்வியலை விட அகவாழ்வியலில் உளவியல் செலுத்து நெறிகள் மிகுந்திருக்கின்றன.

சங்க மாந்தர் வகுத்த வாழ்வியல் நெறி முறைகளே இன்று வெவ்வேறு பெயர்களிலும் துறைகளிலும் விளக்கம் பெற்று வருவதனை இவ்வாய்வு எடுத்துரைத்துள்ளது.

முடிவுரையில் ஒவ்வொரு இயலிலும் பெறப்பட்ட மெய்மைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. மேலும் எதிர்கால ஆய்வுக்குரிய களங்கள் சுட்டப்பட்டுள்ளன.

## எதிர்கால ஆய்வுக்குரிய களங்கள்:

- சங்க இலக்கியம் என்பது சங்க மாந்தர் வாழ்வியல் குறிப்புகளைத் தன்னகத்துக் கொண்டது. இந்த வாழ்வியல் குறிப்புகளுடன் உளவியலின் பல்வேறு கொள்கைகளையும், கோட்பாடுகளையும் ஆய்வு செய்யலாம்.

- சங்க இலக்கிய செலுத்து நெறிகளை, உளவியல் செலுத்து நெறிகளோடு ஒப்பிட்டு ஆய்வு மேற்கொள்ளலாம்.

- சங்க மாந்தர்கள் பல்வகைத் திறன்களையும் ஒருங்கே பெற்று வாழ்ந்து காட்டிய வாழ்வியல் முறைகளில் உளவியலின் உட்கூறுகள் பல பொதிந்து கிடக்கின்றன. இவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக ஆராயும்போது சங்க கால மக்கள் வாழ்வியலை உலகிற்கு எடுத்துக்காட்ட ஏதுவாக அமையும்.

- சங்க இலக்கியத்தில் நுண்ணறிவுக் கூறுகள் நிறைந்து காணப்படுகின்றன. உளவியலர் வகுத்துள்ள நுண்ணறிவுக் கூறுகளையும், கோட்பாடுகளையும் சங்க இலக்கியத்தில் விரிவாக ஆராயலாம்.

# துணைநூற் பட்டியல்


## முதன்மைச் சான்றாதாரங்கள் :

1. சுப்பிரமணியன் ச.வே. (உ.ஆ.) பத்துப்பாட்டு
கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307
முதல் பதிப்பு - 2003

2. சோமசுந்தரனார். பொ.வே. பெருமழைப் புலவர் பத்துப்பாட்டு
சைவ சித்தாந்தக் கழகம்
ஆழ்வார்ப்பேட்டை,
சென்னை - 600 018
முதல் பதிப்பு - 2008

3. துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. (உ.ஆ.) எட்டுத்தொகை (மூலமும் உரையும்)
கழக வெளியீடு, சென்னை.
1967.

4. நாராயண வேலுப்பிள்ளை எம். பத்துப்பாட்டு (மூலமும் தெளிவுரையும்) பகுதி - 1, 2.
முல்லை நிலையம்
தி. நகர், சென்னை - 600 017.
இரண்டாம் பதிப்பு - 2007.

5. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.) எட்டுத்தொகை
பாரி நிலையம்,
பிராட்வே, சென்னை - 600 108.

6. மாணிக்கனார் அ. புலவர் பத்துப்பாட்டு
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை - 600 017.
முதல் பதிப்பு - 1999.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

7. அண்ணாமலை. வே. சங்க இலக்கியத்தில் தொன்மக் களஞ்சியம்
மெய்யப்பன் தமிழாய்வகம்
சிதம்பரம் - 608 001.
இரண்டாம் பதிப்பு - 2000

8. அப்புள்ளாச்சாரி, கி.ர. குழந்தை உளவியல்
சாந்தா பதிப்பகம்,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
முதல் பதிப்பு - 2006

9. அமிர்தலிங்கம், சு. முனைவர் சங்க இலக்கியக் களஞ்சியம்
மெய்யப்பன் தமிழாய்வகம்
80, புதுத்தெரு
சிதம்பரம் - 608 001.

10. ஆனந்தன், கு.ச. வள்ளுவரின் மெய்யியல்
மணிவாசகர் பதிப்பகம்.
சென்னை - 600 001.
முதல் பதிப்பு - 1990

11. இராசா, இ. புறநானூறு அகராதி
பாவை பதிப்பகம்,
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
2010.

12. இராசமாணிக்கம், மு. உளவியல் துறைகள், தொகுதி-1, 11
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை.
1980.

13. இராசமாணிக்கனார், மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னை.

14. இராமநாதன். கோ. இன்றைய மருத்துவம் (இதழ்)
சோலை அச்சகம்,
கோவை - 641 045.
2016 - அக்டோபர்

15. இளம்பூரணர் தொல்காப்பியம்- பொருளதிகாரம்
சாரதா பதிப்பகம்,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
மூன்றாம் பதிப்பு - 2006.

| | | |
|---|---|---|
| 16. | ஐயனாரிதனார் | புறப்பொருள் வெண்பாமாலை<br>கழக வெளியீடு,<br>சென்னை. |
| 17. | கந்தசாமி, சோ.ந. டாக்டர். | இந்தியத் தத்துவக் களஞ்சியம் -<br>அவைதிகத் தத்துவங்கள்<br>மெய்யப்பன் பதிப்பகம்<br>சிதம்பரம் - 608001<br>முதல் பதிப்பு - 2003. |
| 18. | கவிதாதேவி, மு. (ப.ஆ.) | தமிழ்ப் படைப்பிலக்கியங்களின்<br>கோட்பாட்டியல்<br>வாசவி கல்லூரி (சுயநிதிப் பிரிவு)<br>ஈரோடு - 638 316<br>முதல் பதிப்பு - 2014. |
| 19. | கலைச்செல்வி, வெ.<br>மணிவண்ணன், மா. | வழிகாட்டலும் அறிவுரை<br>பகர்தலும்<br>சஞ்சீவ் வெளியீடு,<br>குமாரபாளையம்,<br>நாமக்கல் - 638 183.<br>இரண்டாம் பதிப்பு, நவம்பர் 2008 |
| 20. | கழகப் புலவர் குழு | கழகத் தமிழ் அகராதி<br>திருநெல்வேலி தென்னிந்திய சைவ<br>சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை - 600 018.<br>19-ஆம் பதிப்பு - 2005. |

21. கீதாவாசன். முனைவர் — இலக்கியத்தில் உளவியல்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம் - 608 001.
முதல் பதிப்பு - 2009.

22. குளோரியா சுந்தரமதி, — டாக்டர் டாக்டர் உ.வே.சா. சங்க
இலக்கியப் பதிப்புகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டிடிடிஐ, தரமணி
சென்னை - 600 113.

23. கோதண்டபாணிப்பிள்ளை. கு. — ஈரடி இருநூறு
கழக வெளியீடு,
சென்னை

24. கோபாலையர். தி.வே. — தமிழ் இலக்கணப் பேரகராதி
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை.
2005.

25. கோவிந்தசாமி முதலியார். கா.ர. — பன்னிரு பாட்டியல்
கழக வெளியீடு
சென்னை.

26. சசிவல்லி. வி.சி. — பண்டைத் தமிழர் தொழில்கள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை.

27. சண்முகம். தா.ஏ. டாக்டர் உளவியல் தொகுதி - I, II
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி - 6
முதற்பதிப்பு, ப. 1

28. சண்முகம். தா.ஏ. உளநலவியல்
தமிழ் வெளியீட்டுக் கழகம்
1970.

29. சண்முகம் பிள்ளை. மு. சங்கத் தமிழர் வாழ்வியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம்,
சென்னை - 600 113.
முதற்பதிப்பு - 1997.

30. சரளா ராசகோபாலன். டாக்டர் சங்க இலக்கியம் (அகம்)
ஒளிப் பதிப்பகம்
63, டாக்டர் ரங்காச்சாரி சாலை,
சென்னை - 600 018.
முதல் பதிப்பு - 1988.

31. சிவராஜ். து. டாக்டர் சங்க இலக்கியத்தில் உளவியல்
சிவம் பதிப்பகம்
விருபாட்சிபுரம்,
வேலூர் - 632 002.
முதல் பதிப்பு - 1994.

32. சீனிவாசன். டி. டாக்டர் — உளவியல் அகராதி
விஜயா பதிப்பகம்
கோயம்புத்தூர் - 641 001.
முதல் பதிப்பு - 2006.

33. சுந்தர சீனிவாசன். எஸ். — ஆளுமை மேம்பாடு
தாமரை பதிப்பகம்
அம்பத்தூர், சென்னை - 600 098.
முதல் பதிப்பு - 2008.

34. சேதுராமன். பி. — ஆற்றுப்படை இலக்கியத்தில்
தமிழர் வாழ்வியல்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
அம்பத்தூர், சென்னை - 600 098.
முதல் பதிப்பு - திசம்பர் 2011.

35. ஜோனத்தன் லியர் வின்செென்ட்.ச. (மொ.ஆ.) — ஃபிராய்டு
எதிர் வெளியீடு,
பொள்ளாச்சி - 642 002.
இரண்டாம் பதிப்பு - 2013.

36. ஜி.எஸ்.எஸ். — குழந்தைகள் சைக்காலஜி
நலம் வெளியீடு,
ஆழ்வார்பேட்டை,
சென்னை - 600 018.
முதல் பதிப்பு - 2008.

37. தாயம்மாள் அறவாணன் பெண்ணின் பெருந்தக்க இல்
தமிழ்க் கோட்டம்
அமைந்தகரை, சென்னை - 29.
முதல் பதிப்பு - 2011.

38. தாயம்மாள் அறவாணன் மகடூஉ முன்னிலை
பெண் புலவர் களஞ்சியம்
தமிழ்க் கோட்டம், அமைந்தகரை
சென்னை - 600 029.
மூன்றாம் பதிப்பு, ஆகசுட்டு -2011

39. திருநாவுக்கரசர் தேவாரம்
தருமபுர ஆதீனம்
தருமபுரம்
1957.

40. திருவள்ளுவர் திருக்குறள் - பரிமேலழகர் உரை
சாரதா பதிப்பகம்
இராயப்பேட்டை,
சென்னை - 600 014.
ஐந்தாம் பதிப்பு - 2004

41. துரை. தண்டபாணி மணிமேகலை
உமா பதிப்பகம்
மண்ணடி, சென்னை - 600 001.
இரண்டாம் பதிப்பு, சூலை 2005.

42. தூரன். பெ. அறிவியல் தமிழ்க் களஞ்சியம்
தொகுதி - 9, 19
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

43. தூரன். பெ. குழந்தை மனமும் அதன்
மலர்ச்சியும்
பாரி நிலையம்,
சென்னை - 600 001.
நான்காம் பதிப்பு - 1967.

44. தேவ்நாத். சி.எஸ். வெற்றி தரும் ஆளுமை ஆற்றல்
நர்மதா பதிப்பகம்
தி. நகர், சென்னை - 600 017.
முதல் பதிப்பு - 2008.

45. நச்சினார்க்கினியர் (உ.ஆ.) தொல்காப்பியம்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை - 600 018.

46. பகவதி.கு. (ப.ஆ.) திறனாய்வு அணுகுமுறைகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

47. பவணந்தி முனிவர் நன்னூல்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை - 600 018.
2005.

48. பிரேம்குமார் செவ்விலக்கிய ஆய்வுகள்
(செந்தமிழ்ச் செல்வி இதழ்க்
கட்டுரைகள் 1923 - 1930)
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
அம்பத்தூர், சென்னை - 600 098.
முதல் பதிப்பு - 2011.

49. பெரியசாமித்தூரன். ம.பெ. கலைக்களஞ்சியம்
தொகுதி - 2 - 1955
தொகுதி - 8 - 1961
தொகுதி - 10 - 1968
தமிழ் வளர்ச்சிக் கழகம்
சென்னை.

50. பேஜ். ஜேம்ஸ்.டி. பிறழ்நிலை உளவியல்
(மொ.ஆ.) பெசண்ட் கிரீப்பர்ராஜ் தமிழ்
வெளியீட்டுக் கழகம்,
1965

51. மணவாளன். அ.அ. டாக்டர் இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
அம்பத்தூர், சென்னை - 600 098.
முதல் பதிப்பு - 2009.

52. மறைமலை. சி.இ. டாக்டர் இலக்கியமும் உளவியலும்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 600 001.
முதல் பதிப்பு - 1991.

53. மனுவேல். ஐ. உளச் சுகாதாரம்
தமிழ் வெளியீட்டுக் கழகம்
சென்னை.

54. மாணிக்கவாசகர் திருக்கோவையார்
குமரகுருபரன் அச்சகம்
திருவரங்கம்
1960.

55. மாணிக்கனார். வ.சுப. தமிழ்க்காதல்
ஸ்ரீ இந்து பப்ளிகேசன்சு,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

56. மாதையன். பெ. முனைவர் — சங்க இலக்கியச் சொல்லடைவு
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.
முதல் பதிப்பு - 2007.

57. மாதையன். பெ. — சங்க இலக்கியத்தில் குடும்பம்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை - 600 098.
முதல் பதிப்பு - 2010.

58. முத்து. சு. நெல்லை — ஒரு குழந்தையின் வாழ்வில் முதல்
365 நாட்கள்
மனவளர்ச்சி குன்றியவர்க்கான
மைய நிறுவனம்,
திருவனந்தபுரம்.

59. முரளி. ஜீ.ச. (ப.ஆ.) — திருவாசகம்
சதுரா பதிப்பகம்
சோமங்கலம்
சென்னை - 602 109.
முதல் பதிப்பு - 2008.

60. மெய்கண்டார் — சிவஞானபோதம்
சிவஞான முனிவர் (உ.ஆ.) — சி.சு. மணி,
மணி. சி.சு. (வி) — பாளையங்கோட்டை,
திருநெல்வேலி - 627 002.

61. வரதராசன் மு. கவிஞர் தாகூர்.
பாரி நிலையம், சென்னை.
1967.

62. வெங்கடாசலம். கோ. தமிழ் இலக்கியக் கைவிளக்கு
அன்னை சரஸ்வதி பதிப்பகம்
குடியாத்தம் - 632 602.
இரண்டாம் பதிப்பு - 2010.

63. ATKINSON, J. BERNE.E, WOODWORTH. R.S. Dictionary of PSYCHOLOGY
W.R. GOYAL PUBLISHING & DISTRIBUTORS,
86, U.B. Jawahar Nagar,
Delhi – 110 007.
Y. 2004, P. 4.

64. Avasthi. Rajendran Psyche. Society and Tensions
The Minerva Association Ltd.
Calcutta.
1973.

65. Coleman, James. C. Psychology and Effective behaviours
D.B. Tarapore Vela sons & Co. (P) Ltd.
Bombay.
First Indian Reprint, 1971.
(1960 – U.S.A.)

66. Munn Norman. L. Introduction to Psychology

I B H Publishing Co.

Calcutta.

Indian Edition – 1967.

67. Advanced General Psychology

Bharathiar University,

Coimbatore - 641046

68. Life Span Psychology

Bharathiar University,

Coimbatore - 641046

# பின்னிணைப்பு

## சொல்லடைவு

| | | |
|---|---|---|
| Accommodation | - | பொருத்துதல் |
| Adaptation | - | இணங்குதல் |
| Adolescence | - | குமரப்பருவம் |
| Adulthood | - | முதிர் பருவம் |
| Amnion | - | சூழ்ப்பை |
| Anatomical Growth | - | உடற்கூறு வளர்ச்சி |
| Aggression | - | வலுவந்த ஊக்கம் |
| Assimilation | - | தன்வயப்படுத்துதல் |
| Basic Needs | - | ஆதாரத் தேவைகள் |
| Childhood | - | குழந்தை |
| Cognitive Ability | - | அறிதிறன் |
| Cognitive Development | - | அறிதிறன் வளர்ச்சி |
| Cognitive Process | - | அறிதிறன் செயல்கள் |
| Conscious | - | நனவு நிலை |
| Curiosity | - | ஆர்வம் |
| Early Childhood | - | முன் குழந்தைப் பருவம் |
| Embryology | - | கருவியல் |
| Embryonic Stage | - | பிண்ட நிலை |
| Emotional Stage | - | மெய்ப்பாடு நிலை |
| Equilibrium | - | சமநிலைப்படுத்துதல் |
| Fertilization | - | கருவுறுதல் |
| Foetal Stage | - | முதுசூல் நிலை |
| Functional Invariants | - | மாறாச் செயல்கள் |
| Germinal Period | - | முளைநிலை |
| Guidance | - | வழிகாட்டுதல், நெறிப்படுத்துதல் |
| Heredity | - | மரபு |

| | | |
|---|---|---|
| Heredity Factors | - | மரபுக் காரணிகள் |
| Infancy | - | குழந்தை |
| Inferiority Complex | - | தாழ்வுச் சிக்கல் |
| Intelligence | - | நுண்ணறிவு |
| Late Childhood | - | பின் குழந்தைப் பருவம் |
| Maladaptive behaviour | - | பொருத்தப்பாடற்ற நடத்தை |
| Manipulative Skills | - | கையாளும் திறன்கள் |
| Meta Needs | - | உயர்நிலைத் தேவைகள் |
| Motor Growth | - | உடலியக்கங்களின் வளர்ச்சி |
| Nature | - | மரபுநிலை |
| Neurosis | - | நாடிநோய், உளக்கோளாறு |
| Nurture | - | சூழ்நிலை |
| Objective Permanence | - | பொருள்களின் நிலைத்தன்மை |
| Organism | - | உயிரி |
| Organisation | - | ஒருங்கமைத்தல் |
| Oxygen | - | உயிர்வளி |
| Pathological Method | - | நோய் கண்டறியும் முறை |
| Perception | - | புலன் காட்சி |
| Personality | - | ஆளுமை |
| Physiological Growth | - | உடலியல் வளர்ச்சி |
| Psychosis | - | உளநோய், பித்துநோய் |
| Regression | - | பின்னோக்க நகர்வு |
| Sensory Abhasia | - | உணர்வு மறதி |
| Sensory Motor Stage | - | புலனியக்க நிலை |
| Schizophrenia | - | உணர்ச்சி விண்ட நிலை |
| Socialisation | - | சமூக நெறிப்படுத்துதல் |
| Temperament | - | மனோபாவம் |
| Tension | - | மனவிறைப்பு நிலை |
| Zygote | - | கருமுட்டை |

# தமிழ்ப் படைப்பிலக்கியங்களில் கோட்பாட்டியல்




பதிப்பாசிரியர்
முனைவர். மு. கவிதாதேவி



தமிழ்த்துறை
ஸ்ரீ வாசவி கல்லூரி
(சுயநிதிப்பிரிவு)
ஈரோடு

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| சர்வதேசப் புத்தகத் தரக்குறியீட்டு எண் (ISBN) | : | 978-93-81830-05-5 |
| தலைப்பு | : | தமிழ்ப்படைப்பிலக்கியங்களில் கோட்பாட்டியல் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | ஜனவரி, 2014 |
| உரிமை | : | தமிழ்த்துறை,<br>ஸ்ரீ வாசவி கல்லூரி(சுயநிதிப்பிரிவு)<br>ஈரோடு - 638 316. |
| நூலின் அளவு | : | A4 |
| எழுத்துருவின் அளவு | : | 11 புள்ளிகள் |
| மொத்தப் பக்கங்கள் | : | 352 |
| வெளியீடு | : | தமிழ்த்துறை,<br>ஸ்ரீ வாசவி கல்லூரி(சுயநிதிப்பிரிவு)<br>ஈரோடு - 638 316.<br>தொலைபேசி : 0424 - 2533079 |
| விலை | : | ரூ. 500/- |

வடிவமைப்பு மற்றும் அச்சாக்கம்:

**பல்லவி பதிப்பகம் தென்னிந்தியா (பி) லிட்.**
Regd off: 194, கண்ணா காம்ப்ளக்ஸ், மேட்டூர் ரோடு
ஈரோடு 638 011.
மின்னஞ்சல் : pallavipublications@gmail.com
தொலைபேசி : 0424 - 2263197
அலைபேசி : 94422 51549, 90422 02211

## புறநானூற்றில்
## உளப்பகுப்பாய்வுக் கோட்பாடுகள்

**செல்வி.ப.சங்கீதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்(தமிழ்த்துறை),
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி,
பேரூர், கோயமுத்தூர் - 641 010.

பிராய்டின் உளவியல் கோட்பாடுகள் பத்தொன்பது - இருபதாம் நூற்றாண்டுகளில் தோன்றியவை. எனினும் அவைகள் எக்கால இலக்கியங்களுக்கும் பொருந்துவனவாக உள்ளன. குறிப்பாக, இலக்கியங்கள் படைத்தவனின் குணநலன்களையும், வாழ்க்கைச்சிக்கல்களையும் வெளிப்படுத்துவதை பண்டைய இலக்கியங்கள் முதல் தற்காலப்படைப்புகள் வரை அனைத்திலும் காணமுடிகிறது. பிராய்டு தம் காலத்திற்கு முன்பு படைக்கப்பட்ட ஆங்கில மற்றும் பிறமொழி இலக்கியங்களில் குறிப்பாக நாடகங்களிலும் புதினங்களிலும், வியனார்டோடாவின்சி போன்றோரின் சித்திரங்கள், சிற்பங்கள் போன்ற கலைப்பொருட்களிலும், தமது கருத்து பொருந்துவதை நிருபித்துக்காட்டினார். இவருக்குப்பின் வந்தவர்கள், சமகால இலக்கியங்களில் ஆக்கியோரின் வாழ்வினைக்கண்டு, பிராய்டின் கருத்துக்கள் சமகால இலக்கியங்கட்கும் அடிப்படையாய் அமைந்ததைக் கண்டனர். இன்றுவரை மலர்ந்துள்ள பன்மொழி இலக்கியங்களிலும் இவரது உளவியல் கருத்துக்கள் விரவி நிற்கின்றன.

ஆங்கில நாடக ஆசிரியர் சேக்ஸ்பியரின் வாழ்வுச்சிக்கல்கள், அவரது நாடகங்கள் வாயிலாக வெளிப்பட்டது போல, உளப்பகுப்பாய்வுத் திறனாய்வு, சில பழந்தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அவற்றைப்பாடிய புலவர்களின் வாழ்வினை அறிய முடியும். தமிழில் மிகப்பழம்பெரும் இலக்கியங்கள் என்று நாம் கொள்வது சங்க கால நூல்களே ஆகும். இந்நூல்களில் படைப்பாளிகள் தங்களை இனம் காட்டிக்கொள்வதோ, தன் வரலாற்றைப் படைக்கும் போக்கோ அதிகம் காணப்படவில்லை. சில பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயர்கூட இல்லை.

குறிப்பாக பதிற்றுப்பத்து, புறநானூறு போன்றவற்றில் அவற்றைப் பாடிய புலவர்கள் பாட்டுடைத்தலைவனைப்பற்றியே ஏற்றியும் போற்றியும் பாடினர். தங்களைப்பற்றிய குறிப்புகளை வெளிப்படுத்தவில்லை. எனினும், சில பாடல்களில் மனக்கட்டுப்பாட்டையும் மீறி, பிராய்டு கூறுவதுபோல் ஆழ்மனத்திலிருக்கும் 'சுயம்' வெளிப்படுவதுண்டு. மன அழுத்தம் அதிகமான சில பாடல்களில் வெளிப்படையாகவே தெரிகின்றது. இதற்குச்சான்றாக, நக்கண்ணையார், பெருஞ்சித்திரனார் மற்றும் ஔவையார் போன்ற புலவர்களின் படைப்புகளைக் கூறலாம். இவர்கள் பாடல்களை உளப்பகுப்பாய்வு செய்யும்போது இவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளும், குணநலன்களும் வெளிப்படுகிறது.

**புறநானூற்றில் உளப்பகுப்பாய்வு காட்டும் அகவாழ்வு:**

நக்கண்ணையார் எனும் பெண்பாற்புலவரின் 83,84,85 ஆம் பாடல்களை உளவியல் நோக்கில் நோக்கும்போது, அகவாழ்க்கையின் ஓர் ஏமாற்றத்தை அப்பட்டமாக உணர்த்துகிறது. வீர இளைஞன் ஒருவரை அவர் விரும்பியதும், அதனைச் செயலாக்க அவரின் தாயும், சமூகமும் தடையாக இருந்ததையும் அகத்தே எண்ணியெண்ணி மருகிப் பசலை கொண்டதை,

**புறஞ்சிறை இருந்தும் பொன் அன்னம்மே** (புறம் 84)

என்ற வரி உணர்த்துகிறது. மேலும்,தனது ஒருதலைப்பட்ட அன்பினை வெளிப்படுத்துகிறார்.

இதனை நோக்கும்போது இவரது நிறைவேறாத ஆசை மன அழுத்தம் (Repression) மறைமுகமாக வெளிப்படுவது தெரிகிறது.மேலும், இந்த மனச்சிக்கல் அவரது மன ஆழத்தில் நீங்கா இடம்பெற்று "நிலைநிறுத்தம்"(Fixation)ஆனது. புறப்பொருளான பெருநற்கிள்ளியின் வீரப்புகழ் பாட வந்த இவர் மறைமன உளவியல் உந்துதல்களால், எவ்விதத்தொடர்பும் இன்றி மனதில் நிலைநிறுத்தமாகிவிட்ட நிறைவேறா ஆசையை வெளிப்படுத்துகிறார்.

**பெருஞ்சித்திரனாரும் பிராய்டியமும்:**

படைப்பாளியும் பகற்கனவுகளும் என்ற நூலில், 'இலக்கியப்படைப்பாளியின் மனநலத்தையும் வாழ்க்கை வளத்தையும் அவரது படைப்பிலக்கியத்திலிருந்து கண்டுரைக்க முடியும்' என பிராய்டு பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியுள்ளார். உண்மையில் படைப்புப்பிண்ணனிகளாக, படைப்பாளியின் வாழ்க்கை அனுபவங்களே பின்னிப்பிணைந்து வருகின்றன என தனது உளப்பகுப்பாய்வு ஆராய்ச்சிகளால் அவர் நிரூபித்தார்.

புறநானூறு பலபுலவர்களின் பாடல்கள் அமைந்த ஒரு கவிதைத்தொகுப்பு. இதில் புறம் எனும் வெளி உலகம் சார்ந்த வீரம், போர், கொடை போன்ற பொருள்களில் அமைந்த பாடல்களே தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றில் பாட்டுடைத்தலைவனைப் பற்றிய விவரங்களே அதிகம். பாடுவோரின் வாழ்க்கைக்குறிப்புகள் அதில் வெளிவருவதில்லை.

சில நேரங்களில் புலவர்களின் இயற்பெயருங்கூட வெளிப்படுத்தப்படாமல் காரணப்பெயர்களே காணப்படுகின்றன. எனினும் தம்புகழ் விரும்பா இப்புலவர்களின் கட்டுக்கோப்பினையும் மீறி பெருஞ்சித்திரனாரின் பாடல்களில், வறுமை மிகுந்த அவரது அவல வாழ்வு விரிகிறது என்பது பிராய்டின் கருத்திற்கு வலிமை சேர்க்கிறது.

**வறுமையின் வலிமை:**

இளவெளிமான் எனும் புரவலரிடம் பொருள்கேட்கச்செல்கிறார் புலவர். இவரின் துன்பம் இவரைவிடாது அங்கும் தொடர்கிறது. இவர் சென்று அடையும் முன்பாக இளவெளிமான் இறந்துபடுகிறான். கையறுநிலை பாடும் நிலைக்குத் தள்ளப்படுகிறார் புலவர்.

**கவி செந்தாழிக் குவி புறத்து இருந்த**
**செவி செஞ்சேவலும் பொகுவலும் வெருவா,**

வாய் வண் காக்கையும் கூகையும் கூடி,
பேஎண் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடு முன்னினனே, கட்காமுறுநன் (புறம் 238)

எனத்தனது ஏமாற்றத்தைக்கூறிப் பாடலைத் துவங்குகிறார்.

மனைவி, பாணர், சுற்றத்தார் வருந்துவதை நினைந்து புலம்புகிறார். தனது நிலையினை வெளிப்படுத்தும் இரக்கமே அவர் பாடலில் பெருகுகிறது. பத்தொன்பது வரிப்பாடலில் முதல் ஒன்பது வரிகளில் மட்டும் இளவெளிமானின் இரங்கலைப்பாடும் இவர், மீதமுள்ள பத்து வரிகளிலும் பாடுவது தன் வறுமை நிலையாகும். அவருள் ஆழ்ந்துவிட்ட துன்பியல் நிலையின் சோகம் அவர் அறியாமலேயே பாடலில் இடம்பெறுகிறது.

முதலில் வருவது அவர் ஆழ்மனதில் அழுத்தமாகப் பதிந்துவிட்ட அவலக்காட்சி. இதனை,

வாழும் நாளோடு யாண்டுபல உண்மையின்
தீர்தல் செல்லாது, என்உயிர் எனப்பலபுலந்து
கோல் காலாகக் குறும்பல ஒதுங்கி,
நூல் விரித்தன்ன கதுப்பினள், கண்துயின்று
முன்றில் போகா முதிர்வினள் யாயும்.....(புறம் 159)

என நடை தளர்ந்து, வயது முதிர்ந்து வறுமை தாளாது சாவை அழைக்கும் தன் தாய், குப்பைக்கீரையினைக் கொய்து உப்பின்றி, நீரில் வேக வைத்துச்சுவை கூட்ட மோர்கூட இல்லாத உணவை உண்ணும் பரிதாபம், மாற்றுடை இன்மையால் தூசிபடிந்த ஆடையுடன் பசித்திருக்கும் மனைவி ஆகியோர் கண்களில் படக்காட்சிகளாய் விரிய, அந்த வறுமை வாழ்க்கையே சொற்களாக பாதிக்குமேல் விரிகிறது.

பசந்த மேனியொடு படர்அட வருந்தி
மருங்கில் கொண்ட பல குறுமாக்கள்
பிசைந்து தின வாடிய முலையள் பெரிது அழிந்து
குப்பைக் கீரைக் கொய்கண் அகைத்த
முற்றா இளந்தளிர் கொய்துகொண்டு உப்பு இன்று
அவிழ்ப்பதம் மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த உடுக்கையாள்: அறம்பழியா
துவ்வாளாகிய என் வெய்யோளும் (புறம் 159)

எனப்பாடுகிறார்.

அடுத்த பாடலில் குமணனின் புகழ் பாடுகிறார்.
அதில் சுற்றம் விளங்கச் சோறூட்டி, பொன் ஆபரணங்களைத்தந்து அவர்களை நண்பர்களாகக்கொள்ளும் நல்ல புகழ் கொண்ட குமணன் என்றெல்லாம் புகழ்கிறார். அவரது நனவோடை உடனடியாகத்தன் வீட்டையே நாடுகிறது.

............................எள்ளுற்று
இல் உணாத்துறத்தலின், இல் மறந்து உறையும்
புல் உளைக் குடுமிப்புதல்வன், பல் மாண்
பால்இல் வறுமுலை சுவைத்தனன் பெறா அன்,
கூழும் சோறும் கடைஇ, ஊழின்
உள்இல் வறுங்கலம் திறந்து அழக்கண்டு
மறப்புலி உரைத்தும், மதியம் காட்டியும்,
நொந்தனளாகி,'நுந்தையை உள்ளி
பொடிந்த நின் செவ்வி காட்டு' எனப்பலவும்
வினவல் ஆனாளாகி, நனவின்
அல்லல் உழப்போள்......... (புறம் 160)
என அப்படியே படமாய் விரிகிறது.

தம் வறுமையைப் பறைசாற்றும் இவர்,

வல்லினும் வல்லேன் ஆயினும், வல்லே
என் அளந்து அறிந்தனை நோக்காது சிறந்த
நின் அளந்து அறிமதி, பெரும (புறம் 161)

எனப்பாடுகையில், தம் புலமை மீது இவர் கொண்டிருந்த அசைக்க முடியாத பெருமிதம் வெளியாகிறது.

தன் அறிவின் தகுதியை அறிந்து அதற்கேற்ப பரிசிலைக் கொடுக்கச் சொல்லிக்கூறுகையில் இவரது தன்முனைப்பும் (Ego) வெளிப்படுகிறது.

**முடிவுரை:**

இவ்வாறு பிற புறநானூற்றுப் பாடல்களிலும், மற்ற சங்க இலக்கியங்களிலும் பல உளவியல் கோட்பாடுகளும், கருத்துக்களும் காணப்படுகின்றன. காலக்கட்டுப்பாடு இல்லாத உளவியல் கோட்பாடுகளின் துணைகொண்டு ஆய்வுகள் மேற்கொண்டால் புதியபுதிய கருத்துக்கள் தோன்றும்.

*************

